1907–ம் ஆண்டு பிறந்த திரு. டி. ஆர். ஸூத் 1928-ல் லஹோார் அரசினர் கல்லூரியிலிருந்து ஆங்கிலத்தில் எம். ஏ. பட்டம் பெற்ருர். பஞ்சாபில் பல கல்லூரிகளிலும் பேராசிரியராகப் பணியாற்றிய பின்னர், 1947–ல் ''டிரிப்யூன்'' செய்தி ஏட்டில் தலைமை துணை ஆசிரியராகப் பதவியேற்ருர். அதில் 21 ஆண்டுகளுக்குச் சிறப்புப் பணியாற்றி அண்மையில் பதவி ஓய்வு பெற்றுள்ள அவர் பல கட்டுரைகளும், 'டிரிப்யூனின் சிறு வரலாறு' எனும் புத்தகமொன்றும் எழுதியுள்ளார்.

வலிமையுள்ள எழுதுகோல் படைத்த திரு. ஸூத் அளிக்கும் மகாராஜா ரண்ஜீத் சிங்கின் வாழ்க்கை வரலாறு, பரிவுணர்வுடனும் மதிப்புடனும் எழுதப்பட்டிருக்கிறது. சாமானியனுக்கு என எழுதப்பட்டுள்ள இந்நூல் தனிச்சிறப்பு படைத்ததொன்ருகும்.

March 1972 (Phalguna 1893)
*மார்ச் 1972 (பால்குணம் 1893)*



ரூ. 2-75

RANJIT SINGH *(Tamil)*

*விநியோகிப்பாளர் :*

பாரி நிலையம்
1/59, பிராட்வே, சென்னை-1.

**Published by the Director, National Book Trust, India, New Delhi-16 and Printed at the Stree Seva Mandir Press, Madras-17.**

# முகவுரை

இந்நாடு தொன்று தொட்டே வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் மகா புருஷர்களைத் தோற்றுவித்து வந்திருக்கிறது. கலை, இலக்கியம், அரசியல், விஞ்ஞானம் போன்ற எத்தனையோ துறைகளில் குறிப்பிடத்தக்க சாதனைகள் புரிந்து புகழ் எய்திய பெரியார்களின் பெயர்கள் நமது வரலாறு நெடுகிலும் நிறைந்து நிற்கின்றன. அநேகருடைய பெயர்களைப் பொது மக்கள் நன்கு அறிந்திருப்பர்; ஆனால் அவர்களது வாழ்வையும் பணியையும் பற்றி அவ்வளவாக அறிந்திருக்க மாட்டார். வியத்தகு சாதனைகள் புரிந்த வேறு பலரைப் பற்றி மக்கள் கேள்விப்பட்டே யிருக்கமாட்டார்கள்.

ஒரு நாட்டின் வரலாறு என்பது, பெருமளவிற்கு, அந்நாட்டின் பெருமை மிக்க ஆடவர்கள், பெண்மணிகள் ஆகியோரின் வாழ்க்கை வரலாறே. அவர்களே அதற்கு உருக் கொடுத்து வளர்த்தவர்கள். நம் நாட்டின் பரிணாமத்தைச் சாதாரண மக்கள் புரிந்து கொள்வதற்காக இப் பெரியார்களைப் பற்றி ஓரளவாவது தெரிந்து கொள்வது அவசியமாகும்.

மகாராஜா ரண்ஜீத் சிங் நல்லறிவும் நற்பண்புகள் பலவும் கொண்ட மாமன்னர். சிற்றரசராக வாழ்க்கையைத் தொடங்கிய அவர் எவரும் பெருமை கொள்ளும் வகையில் தமக்கென ஒரு ராஜ்யத்தை உருவாக்கிக் கொண்டார். அவர் பஞ்சாபிற்குத் தேசீய உணர்வை அளித்ததுடன், முஸ்லிம்களைத் தமது அமைச்சர்களாகவும், ஆலோசகர்களாகவும், தளபதிகளாகவும் கொண்டு அங்கு ஓர் உண்மையான சமயச் சார்பற்ற அரசை நிறுவினர். அவர் சீக்கியப் புண்ணியத் தலங்களுக்கு நன்கொடை வழங்கியதுடன், மசூதிகள் கட்டிக் கொடுத்-

தார். இந்துக் கோவில்களுக்கும் விஜயம் செய்தார். திறமை மிக்க போர்வீரரான அவர், தாம் வாழ்ந்த காலம் வரையிலும் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தைப் பரவ விடாதபடி தடுத்து வைத்திருந்தார். தாம் வென்றவற்றை உறுதிப்படுத்திக் கொள்வதற்குப் போதுமான காலம் அவர் வாழ முடியாமற் போனதும், அவர் கட்டிக் காத்த ராஜ்யம் அவர் மறைந்தவுடன் சின்னுபின்னமானதும் துர்ப்பாக்கியமே.

'டிரிப்யூன்' பத்திரிகையில் முன்னாளில் பணியாற்றிய திரு டி. ஆர். ஸைத் இந் நூலைப் பரிவோடும் உணர்வோடும் எழுதியளித்தமைக்கு நமது நன்றி உரித்தாகுக.

புதுதில்லி

பி. வி. கேஸ்கர்

# பொருளடக்கம்

*அத்தியாயம் I*

## பீடிகை

*பஞ்ச நதிகள் பாயும் பஞ்சாபின் கதியை நிர்ணயித்த அந்த மாறுதலைப் புரிந்து கொள்வதற்காகப் பஞ்சாபின் வரலாற்றையும் ரண்ஜீத் சிங் ஆட்சிக்கு வருவதற்கு முந்திய தசாப்தங்களில் அங்கு மக்கள் வாழ்ந்த நிலைமையையும் மேலோட்டமாக அறிந்து கொள்வது அவசியமாகும். இந்துஸ்தானத்தின் நுழை வாயிலாக இருப்பதால் பஞ்சாப் பலமுறை வடமேற்கிலிருந்து வந்த படையெடுப்புக்களுக்கு இலக்காகி, ஒவ்வொரு முறையும் கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாயிற்று. இந்தியாவின் அபரிமிதமான செல்வத்தைக் கவர்ந்து செல்வதற்காக எதிரிகள் சில சமயங்களில் படையெடுத்துவந்தனர். பிற வேளைகளில் உள்நாட்டு அரசர்களுள் ஒருவர் மற்றவரை ஒடுக்கத் துணைவேண்டி விடுத்த அழைப்பின் பேரில் அவர்கள் வந்தனர். முகலாயர்கள், பாரசீகர்கள், ஆப்கானியர்கள் என்று படையெடுத்து வந்தவர்கள் அனைவரும் முஸ்லிம்களே. அதன் பலனாக, காலப்போக்கில் படையெடுப்பாளர்களின் அல்லது புதிய அரசர்களின் மதத்துக்குப் பலரும் மாறினர்; பஞ்சாபில் கணிசமான தொகையினர் முஸ்லிம்களாயினர். பின்னாளில், பஞ்சாபின் வரலாற்றிலும் நாட்டின் பிற பகுதிகளிலும் தீய விளைவை ஏற்படுத்திய இந்து-முஸ்லிம் பிரச்சினைக்கு இவ்வாறு வித்திடப்பட்டது. ராஜாக்கள், சுல்தான்களின் தன்னல ஆசைகளைப்போல, முரண்பாடான சமயங்களும் மக்களை ஒன்றுபட முடியாமற் செய்தன.*

வகுப்பு ஒற்றுமையையும் நல்லுணர்வையும் வலியுறுத்தும் புதிய உபதேசத்துடன் 15–ஆம் நூற்றாண்டில் குருநானக் (1469-1539) தோன்றினார். அவர் இந்துக்

களுக்கும் முஸ்லீம்களுக்கும் பொதுவான கடவுள் ஒருவரே என்ற தத்துவத்தை உபதேசித்தார். இந்துப் பக்தர்களிடத்தும் முஸ்லீம் ஸூஃபிகளிடத்தும் ஒரே மாதிரியான ஈடுபாடு கொண்ட அவர், வழிபாட்டு முறையைவிட வழிபாட்டு உணர்வே மிக முக்கியமானது என்று பறைசாற்றினர். அவர் சமய பேதத்தைக் கண்டித்து, சமயச் சார்பிலாக் கொள்கைகளை வலியுறுத்தினர். அவரது பரந்த நோக்கத்தால் அவருக்கு ஏராளமான சீடர்கள் சேர்ந்தனர்; அவருக்குப் பின் வந்த குருக்களும் அவரது சமய ஒருமைப்பாட்டுக் கொள்கையை மேலும் வளப்படுத்தினர். உதாரணமாக, ஐந்தாவது சீக்கியக் குருவான குரு அர்ஜுன் தேவ் (1563-1606), அமிர்தசரஸில் உள்ள சீக்கியக் கோவிலிற்கு (தர்பார் சாஹிப்) மியான் மீர் என்ற ஒரு முஸ்லீம் மஹானைக் கொண்டு அடிக்கல் நாட்டச் செய்தார். அதுபோல அவர் திரட்டித் தொகுத்த சீக்கிய சமய நூலில் (கிரந்த் சாஹிப்) இந்து, முஸ்லிம் என்ற இருதரப்புப் பக்திமான்களின் அருள் வாக்குகளையும் சேர்த்துள்ளார். இவ்விதம் இந்தப் புதிய சமயம் இஸ்லாமிற்கு எதிர்ப்பாக இல்லாமல், இன்று நாம் 'மனிதாபிமானவாதம்' என்று குறிப்பிடுவதன் ஆரம்ப வடிவமாக விளங்கியது—தனி மனிதனை அகத்திலும் புறத்திலும் சாந்தியுடன் வாழச் செய்வதே உண்மையான சமயத்தின் நோக்கமாகும்.

ஆனால், ரோமானியர் காலத்தில் ஆதிக் கிறிஸ்துவர்களுக்கு நேர்ந்த கதியைப் போல, அன்று இருந்த அரசாங்கம் இந்தக் குருக்களையும் அவர்களது சீடர்களையும் சந்தேகக் கண்கொண்டு பார்த்ததோடு அவர்களை ஒடுக்கவும் முயன்றது. இடையில் அக்பரின் விவேகமான ஆட்சிக் காலத்தைத் தவிர்த்து, மற்ற எல்லா முகலாய அரசர்களும் நானக்கின் கோட்பாட்டை ஏற்றுக் கொண்ட மக்களைக் கொடுமைப்படுத்தினர். ஜஹாங்கீர் மன்னர் குரு அர்ஜுன் தேவைக் கொன்றுர்; ஒன்பதாவது

குருவான தேக் பஹதூரை ஔரங்ஜீப் சிரச்சேதம் செய்தார். தியாகிகள் சிந்திய இரத்தம் எப்போதுமே மத வளர்ச்சிக்கு வித்தாக இருந்து வந்திருக்கிறது; அதுபோலவே முகலாயர்களின் அடக்குமுறையும் சீக்கிய குருக்களுக்கும் அவர்களது சீடர்களுக்கும் ஆட்சியாளர்களின் கொடுமையை எதிர்த்து நிற்க முன்னிலும் அதிகமான துணிவையும் ஊக்கத்தையும் அளித்தது. அந்த எதிர்ப்பு இயக்கம் படிப்படியாக இராணுவ அமைப்பைப் பெறலாயிற்று; முகலாயரின் சகிப்பின்மையையும் சமய வெறியையும் எதிர்த்துப் போராட "கால்ஸாப்படை" (கால்ஸா தல்) அமைக் கப்பட்டது. தமது தந்தை புரிந்த தியாகத்தின் நினை வால் பெற்ற ஊக்கமும், ஔரங்ஜீப்பின் சமய வெறித் தாக்குதல்களிலிருந்து இந்து சமயத்தைக் காப்பாற்ற வேண்டுமென்ற ஆவலும் உந்த, பத்தாவது குருவான கோவிந்த் சிங் முகலாயரின் அறைகூவலை ஏற்றுக் கொண் டார். அவர் தம்முடைய சீடர்களைத் தீர்க்கமான சின் னங்களும், தெளிவான திட்டமும் கொண்ட போர் வீரர் களாக மாற்றினார். இந்தச் சமயப் போரில் அவர் புரிந்த தியாகம் மகத்தானது: அவரது நான்கு புதல் வர்களும் முகலாய அடக்கு முறைக்குப் பலியாயினர்; அவரும் இரண்டு முஸ்லிம்களால் கொலை செய்யப் பட்டார்; எனினும் அவருடைய பல தாக்குதல்கள் முக லாயப் பேரரசின் வீழ்ச்சியைத் துரிதப்படுத்தின.

குருகோவிந்த் சிங்கின் வாரிசாக இராணுவத் தலைமை யேற்ற பண்டா பஹதூர் முகலாய அதிகாரத்திற்கு எதிரான போராட்டங்களைச் சிறிதும் தளராமல் தொடர்ந்து நடத்தினார். அவர் எதிரியைப் பல முறை முறியடித்தார் எனினும், முடிவில் நூற்றுக் கணக்கான சீக்கியப் போர் வீரர்களுடன் கைது செய்யப்பெற்று டில்லிக்குக் கொண்டு செல்லப்பட்டார். அங்கு அவர் சித்திரவதை செய்து கொல்லப்பட்டார்; தம் கைகளா

லேயே தம் மகனைக் கொல்லும்படி அவருக்குப் பேரரசர் ஆணையிட்டார். பஞ்சாபில் சீக்கியக் கிளர்ச்சியை ஒடுக்க அங்கிருந்த முகலாயக் கவர்னரும் இது போன்ற கொடுமைகளைக் கையாண்டார்.

ஆனாலும் விரைவிலேயே வேறு காரணங்களால் நிகழ்ச்சிகளின் போக்கு மாறியதோடு, பஞ்சாபிலும் இந்தியாவிலுமே முகலாயப் பேரரசின் வீழ்ச்சி தொடங்கியது. 1739–ல் பாரசீகத்திலிருந்து நாதிர்ஷா பஞ்சாப் வழியாக டில்லி மீது பாய்ந்து, ஆசை தீரக் கொள்ளையடித்தான். கொள்ளையடித்த பொருட்களுடனும் ஆயிரக் கணக்கான கைதிகளுடனும் அவன் சாவதானமாகத் திரும்பி வந்து கொண்டிருந்தான். வழியில் சிறிய சீக்கியக் கொரில்லாக் கோஷ்டியினர் அவன் சூறையாடிய செல்வத்தில் ஒரு பகுதியைக் கவர்ந்து கொண்டனர். இவ் வெற்றிகளால் மேலும் ஊக்கம் பெற்ற சீக்கியர்கள் ஆப்கானிஸ்தானத்திலிருந்து ஒன்பது முறை படையெடுத்து வந்த ஆமது ஷா ஆப்தாலியின் முதல் படையெடுப்பின் போது, 1747-ல், இதே தந்திரங்களைக் கையாண்டனர். அவன் படையெடுத்து வந்தபோது பின் வாங்கிய சீக்கியப் படையினர் அவன் திரும்பிச் செல்லும் வழியில் அவனைத் தாக்கி, அவனது செல்வங்களைப் பறித்துக் கொண்டனர்; இதனால் அடுத்த முறையும் வெற்றி பெறுவதில் அவர்களுக்கு நம்பிக்கை அதிகரித்தது. ஆப்தாலியின் இந்தப் படையெடுப்புக்களால் பஞ்சாபில் முகலாயர் நிர்வாகம் மேலும் பலவீனமடைந்ததோடு சீக்கியர்களின் கைக்கு அதிகாரம் மாறுவதற்கு அஸ்திவாரமிடப்பட்டது.

அரசாங்க அதிகாரம் பலவீனமடைந்த நிலையில் கொரில்லாத் தலைவர்கள் அந்த அதிகாரத்தை வசப்படுத்திக்கொண்டது இயற்கையே. அவர்கள் மிகப் பலராவார்; ஒவ்வொருவரும் மற்றவருக்கு ஏறக்குறைய சமமானவராகவும், சுயேச்சையானவராகவும் விளங்கினர். அவர்கள்

பல கோஷ்டிகளாக அல்லது சமஷ்டிகளாக இருந்தனர்; இவைகளுக்கு 'மிஸல்'கள் என்று பெயர்; இது பாரசீக வார்த்தை; இதற்கு 'இணை' அல்லது 'சமம்' என்று பொருள். இவ்வாறு பன்னிரண்டு 'மிஸல்'கள் தோன்றின. ஒரு மரத்தை அம்பால் துளைப்பது அல்லது ஒரு புலியை ஒரே அடியில் கொல்வது போன்ற சாகசங்களைப் புரிந்து தனிச் சிறப்பு வாய்ந்த நிகரற்ற போர் வீரர் ஒருவர் ஒவ்வொரு 'மிஸலு'க்கும் தலைவராக இருந்தார். முகலாயரின் வீழ்ச்சிக் காலத்தில் பஞ்சாபின் பெரும் பகுதிகள் இப் 'பிரபுக்களின்' வசத்தில் இருந்தன; அவர்களுள் ஒவ்வொருவருக்கும் சொந்தச் சேனை இருந்தது.

முக்கியத்துவ வரிசைப்படி அப் பன்னிரண்டு 'மிஸல்'களின் பெயர்கள் வருமாறு:— ஃபுல்கியன், அலுவாலியா, பங்கி, கன்ஹயா, ராம்கரியா, சிங்புரியா, குரோரா சிங்கியா, நிஷானியா, ஸீகர் சாக்கியா, துல்லேவாலா, நக்காயி, ஷெறித்து. அவர்களுள் அறுவர் சிந்து நதிக்கும் சட்லெஜ் நதிக்கும் இடைப்பட்ட 'மஜா' எனும் பகுதியையும் மற்றவர்கள் சட்லெஜ்ஜிற்கும் யமுனைக்கும் இடையேயுள்ள 'மால்வாப்' பகுதியையும் ஆட்சி செய்தனர்.

பாட்டியாலா, ஜிண்ட், நாபா, பாதோர், மாலோத் பகுதிகளை ஆண்டு வந்த ஃபுல்கியன் 'மிஸலி'லிருந்தவரனைவரும் ஒரே மூதாதையரின் வழி வந்தவர்கள். லாகூரும், அமிர்தசரஸும், மேற்குப் பஞ்சாபின் பெரும் பகுதியும் வலிமை வாய்ந்த பங்கிக்களின் (பாங்—கஞ்சாப் பழக்கம் கொண்டவர்கள்) வசம் இருந்தன. ஏறக்குறைய அவர்களைப் போலவே பலம் பொருந்திய கன்ஹயாக்கள் இமயமலையின் அடிவாரப் பகுதியை ஆண்டு வந்தனர்; ரண்ஜீத் சிங்குடன் திருமண உறவு கொண்டதன் மூலம் அவர்களின் அந்தஸ்து மேலும் ஒரு படி உயர்ந்தது. ரவி நதிக்கும் வியாஸ் நதிக்கும் இடைப்பட்ட பகுதியில், கபுர்த்தாலாவைத் தலைநகராகக்

கொண்டு அலுவாலியாக்கள் ஆட்சி செய்தனர். குஜ்ரன் வாலா என்ற ஒரு நகரமும் அதை அடுத்துள்ள பல கிராமங்களும் மட்டுமே ஸீகர் சாக்கியர்கள் ஆட்சிக்குட் பட்டிருந்தன.

இந்த 'மிஸல்'கள் தனித்தனியாக ஒன்றுக்கொன்று தொடர்பற்று இருந்து வந்ததாக எண்ணுவது தவருகும். உண்மையில் 'மிஸல்'களுக்கிடையேயும் 'மிஸல்'களுக் குள்ளேயும் நிகழ்ந்து வந்த சச்சரவுகளின் விளைவாக அவைகளுக்குரிய பகுதிகள் அடிக்கடி கைமாறிக் கொண்டி ருந்தன. முகலாயர்கள் அல்லது ஆப்தாலிகள் போன்ற பொது எதிரிகள் இல்லாத காலங்களில், அவைகள் தங்களுக்குள்ளேயே நகரங்களுக்காகவும், நிலத்துக்காக வும் மற்றச் சொத்துக்களுக்காகவும் சண்டையிட்டு வந் தன. வலிமையற்றவர்கள், வலிமை மிக்கவர்களின் பாது காப்பை நாடி அதற்காக 'ராக்கி' (பாதுகாப்பு தருவதற் கான) வரியைச் செலுத்தி வந்த காலம் அது. சில சமயங் களில் ஒரு தலைவர் தமது ஆதரவை நாடுபவரிடமிருந்து ஒரு குதிரையையும் ஒரு துப்பாக்கியையும் மட்டும் பெற் றுக் கொள்வதுண்டு; இவை அத்தலைவரின் சொந்தப் போர்களிலோ அல்லது அவரது 'மிஸலின்' போர்களிலோ பயன்படுத்திக் கொள்ளப்படும். இதற்குப் பிரதியாக அத் தலைவரின் "பாதுகாப்பையும் அத்தலைவரது கொடியின் கீழ் கடவுளுடையவும் குருவுடையவும் பெயரால் கொள்ளை யடிப்பதற்கான அனுமதியையும்" (கிரி:பின்) மற்றவர் பெறுவார். தடி எடுத்தவன் தண்டல்காரன் என்று இருந்த கொந்தளிப்பான காலம் அது. ஒவ்வொருவரும் தம் முடைய நிலத்தையோ குதிரையையோ, மனைவியையோ காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானல் சுயபலத்துடனும் கூட்டுறவு பலத்துடனும் இருப்பது அவசியமாயிற்று. 'மிஸல்'களுக்கும் இதே நியதிதான். அவ்வப்போது வலிமை வாய்ந்தவர்கள் தம்மைவிட வலிமை குறைந்த வர்களை வென்று அவர்களிடமிருந்து திறை வசூலித்தனர்.

இருப்பினும், அவர்களுக்கிடையே ஓரளவுக்கு ஒரு ஒழுங்கு முறை நிலவிவந்தது. 'மிஸல்' தலைவர்கள் ஆண்டிற்கு ஒன்று அல்லது இரண்டு முறை அமிர்தசரஸில் கூடி, 'பாதுகாப்பு' பற்றியும், அதற்கு அவசியமில்லாத போது தங்களுக்கு இடையே இருந்த பூசல்களைத் தீர்த்துக் கொள்வதற்கான வழி முறைகள் பற்றியும் விவாதித்தனர். பொறாமை காரணமாகச் சர்தார்கள் (தலைவர்கள்) ஒருவரோடு ஒருவர் கைகலந்து கொள்ளும் நிலைமை கூட ஏற்பட்டதுண்டு. 'மிஸல்'களின் 'சமத்துவக்' கொள்கையைக் கட்டுப்படுத்தாவிடில் அவையனைத்தும் சுதந்திரமான தனித்தனி நகரக் குடியரசுகளாகி, வலிமை மிக்க அந்நியப் பகைவர் எவரேனும் படையெடுத்து வரும்போது ஒவ்வொன்றும் மறைந்திருக்க நேரிடும். இந்நிலையில் மற்ற 'மிஸல்'களைத் தமது தலைமைக்குப் பணியச் செய்து, பஞ்சாபை ஒரு கொடிக் கீழ் ஒன்றுபடுத்தக் கூடிய ஆற்றல் வாய்ந்த 'மிஸல்' தலைவர் ஒருவர் தோன்றுவது அவசியமாயிற்று. விதி, இப்பெரும் பணிக்கு ரண்ஜீத் சிங்கைப் பொறுக்கி யெடுத்தது.

*அத்தியாயம் 2*

# குல முறையும் இளமைப் பருவமும்

ரண்ஜீத் சிங் குடியானவக் குடும்பத்தில் பிறந்தவர். அவரது முன்னோர்கள் விவசாயிகளாகவும் கால்நடைப் பராமரிப்பவர்களாகவும் இருந்தனர். அவர்களுக்குள் ஓரளவு பெயர் பெற்றவர் குஜ்ரன்வாலாவிற்கு அருகே யுள்ள ஸுகர்சாக் கிராமத்தைச் சேர்ந்த புத் சிங் என்பவர். அவரை, குரு கோவிந்த் சிங்கே சீக்கியராக ஞானஸ்நானம் செய்வித்ததாக நம்பப்படுகிறது. அஞ்சா நெஞ்சம் படைத்த தீரராகவும், கொள்ளைக் காரராகவும் விளங்கிய அவருக்குத் 'தேசன்' என்ற குதிரை மீது அளவு கடந்த பிரியம்; அக்குதிரையின் மீது ஏறிக்கொண்டுதான் அவர் ரவி, சீனப், ஜீலம் ஆறுகளைக் கடந்து செல்வார். 1718–ல் புத் சிங் இறந்தபோது அவருடைய இரண்டு புதல்வர்களும் சில கிராமங்களை உரிமையாகப் பெற்ற னர். அவர்களுள் நவுத் சிங் என்பவர் ஸுகர்சாக்கில் ஒரு கோட்டையைக் கட்டிக்கொண்டு, ஸுகர் சாக்கிய 'மிஸலை' நிறுவினர். அவர் 1752–ல் ஆப்தாலியின் ஆப்கானியர்களுடன் நடந்த சண்டையில் உயிரிழந்தார்.

புத் சிங்கின் மூத்த மகனை சர்ஹத் சிங் தமது பூர்வீகக் கிராமத்தை விட்டுக் குஜ்ரன்வாலாவிற்குச் சென்று அங்கு கோட்டை கொத்தளங்களை அமைத்துக் கொண்டார். விரைவிலேயே அவர் வஸீராபாத், சியால் கோட் ஆகிய இடங்களையும் அருகாமையில் இருந்த வேறு இரண்டு ஊர்களையும் கைப்பற்றினர். ஆமதுஷா ஆப்தாலி ஒரு படையெடுப்பின் போது குஜ்ரன்வாலாவிலிருந்த கோட்டை கொத்தளங்களைத் தகர்த்ததோடு சர்ஹத் சிங்கின் சொத்துக்களைக் கொள்ளையடித்துச் சென்றான். ஆனல் அந்தச் சிக்கியத் தலைவர் ஆப்கானியனுக்கு

இணையான சாதுரியத்தோடு அவன் திரும்பிச் செல்லும் போது தொடர்ந்து சென்று மடக்கி ஆப்தாலியின் கொள்ளைப் பொருளில் தம்முடைய பங்கைப் பிடுங்கிக் கொண்டார். மீண்டும் குஜ்ரன்வாலாவில் கோட்டை அமைத்து, தமது அதிகாரத்தை நிலைநாட்டிக் கொண்டபின் அவரது கவனம் ஜம்முவின் மீது திரும்பியது; அங்குதான் பஞ்சாபிய செல்வந்தக் குடும்பங்கள் ஆப்கானியப் படையெடுப்பாளர்களுக்கு அஞ்சி அடைக்கலம் புகுந்திருந்தன. சர்ஹத் சிங்கும் தம் தந்தையைப் போலவே ஒரு போரில் உயிர் துறந்தார்; இப்போர் ஜம்முப் பகுதியில் அவர் கொள்ளையிடும் உரிமை பற்றி பங்கி 'மிஸலு'டன் எழுந்ததாகும்.

இப்போது 'மிஸல்' தலைமைப் பதவியைச் சர்ஹத் சிங்கின் இளம் மகனை மஹன் சிங் பெற்றார்; அவர் துணிச்சலிலும் ஊக்கத்திலும் தம் தந்தைக்குச் சிறிதும் குறைந்தவரல்லர். அவரது விதவைத் தாயார் அவரை ஜிண்ட் பகுதியின் ஃபுல்கியன் 'மிஸல்' தலைவரின் மகளான ராஜ் கௌருக்கு மணம் முடித்துத் தமது 'மிஸலின்' நிலையைப் பலப்படுத்திக் கொண்டார். மஹன் சிங் புதிய கோட்டை கொத்தளங்களை அமைத்ததோடு தமது படை வீரர்களின் எண்ணிக்கையையும் அதிகரித்தார். இவ்வாறு வலிமையைப் பெருக்கிக்கொண்ட பின் அவர் அந்த வட்டாரத்தில் இருந்த பல நகரங்களைக் கைபற்றிக் கொண்டதுடன், தம் தந்தையைப் போலவே ஜம்முவின் மீது படையெடுத்தபோது, அங்கிருந்த டோக்ரா மன்னர் அவரை எதிர்க்காமல் ஓட்டம் பிடித்தார். இவ்வெற்றிகளால் ஸுகர் சாக்கியர்களின் செல்வாக்கு மேலும் உயர்ந்தது. அவர் ஒரு படையெடுப்பிலிருந்து திரும்பி வருகையில், அவருக்கு ஒரு மகன் பிறந்திருக்கும் நற்செய்தி கிடைத்தது. உடனே அவர் அக்குழந்தைக்குப் 'புத்சிங்' (ஞானி) என்று பெயரிட்டார்; பின்னர் தமது வெற்றிகளின் நினைவாக 'ரண்ஜீத் சிங்'—போர்களில்

வெற்றி பெறுபவன் (ரண்—ரணம், போர்; ஜீத்—ஜெயிப்பவன்) என்று மாற்றி வைத்தார்.

ஜிண்டுக்கு அருகே பத்ருகான் என்ற சிறிய ஊரில் 1780—ஆம் ஆண்டு நவம்பர் 15—ஆம் தேதி ராஜ் கௌருக்கு மகனாக ரண்ஜீத் சிங் பிறந்தார். சில வரலாற்றாசிரியர்கள் அவர் நவம்பர் 2—ஆம் தேதி பிறந்தாரென்றும், அவர் பிறந்த இடம் குஜ்ரன்வாலா என்றும் கூறுகின்றனர். பஞ்சாபில் பெண்கள் முதல் பிரசவத்திற்குத் தாய் வீட்டிற்குச் செல்வது வழக்கமானதால் முதலில் குறிப்பிட்ட நாளும் இடமும் அதிகப் பொருத்தமாகத் தோன்றுகின்றன. சிறு வயதில் ரண்ஜீத் சிங்கிற்குக் கடுமையான வைசூரி பிடித்ததால் இடது கண் குருடானதுடன் முகமும் குரூபமாகிவிட்டது என்பதைத் தவிர அவரது குழந்தைப் பருவத்தைப் பற்றி அதிக விவரங்கள் தெரியவில்லை. ஆறுவது வயதிலேயே சிறுவன் ரண்ஜீத் சிங் மற்றச் சிறுவர்களுடன் வெளியே சென்று சினைப் ஆற்றில் நீந்துவதும், தான் எடுத்துச் செல்லும் பணத்தையும் மற்றப் பொருள்களையும் தன் தோழர்களுக்குப் பகிர்ந்து கொடுப்பதும் வழக்கம் என்று புதே ஷா தெரிவிக்கிறார்.

ரண்ஜீத் சிங் குஜ்ரன்வாலாவிலிருந்து தர்மசாலாவுக்குக் கல்வி கற்கச் சென்றதாக ஒரு குறிப்பு கூறுகிறது. ஆனால் சிறிதும் கல்வி வாசனையின்றி இருந்ததால் எண்ணெழுத்துக்களைக் கூட அவர் கற்றுக் கொள்ளவில்லை. அவருடைய தந்தை சதாகாலமும் போர்களில் ஈடுபட்டிருந்ததாலும் அவருடைய தாயார் அந்தப்புரத்தில் ஒதுங்கியிருந்ததாலும் ரண்ஜீத் சிங்கின் கல்விக்கு ஏற்பாடு செய்ய அவர்களுக்குப் பொழுதுமில்லை, அக்கறையுமில்லை; மேலும், அன்றையச் சூழ்நிலையில் ரண்ஜீத் சிங்கிற்குச் சீக்கியப் பிரபுக்களின் பொழுது போக்குகளான விளையாட்டுக்களிலும் வேட்டையாடுதலிலுமே

அதிக ஆர்வம் இருந்தது. அந்நாட்களில் இளைஞர்கள் சிறந்த போர் வீரர்களாகும் பொருட்டுப் படைக்கலப் பயிற்சி பெற்று வந்தனர். இளம் பிராயத்திலேயே ரண்ஜீத்திற்கும் துப்பாக்கிப் பயிற்சி அளிக்கப்பட்டது; விரைவிலேயே அவரது தந்தை தமது படையெடுப்புக் களின் போது அவரையும் தம்மோடு அழைத்துச் சென்று போர்க் கலையிலும் பயிற்சி பெறச் செய்தார்.

சிறுவன் ரண்ஜீத் பத்து வயது நிரம்பியவுடனே, 1790–ல் தமது முதற் பெரும் போருக்குத் தலைமை யேற்றார். குஜராத் பகுதியை ஆண்ட பங்கி குலத் தலைவர் வசம் இருந்த ஸோத்ரான் என்னும் நகரை மஹறன் சிங் முற்றுகையிட்டார். சில மாதங்களுக்குப் பிறகு அவர் திடீரென்று கடுமையான நோய்வாய்ப் பட்டதால் ரண்ஜீத் சிங்கினிடம் தலைமைப் பொறுப்பை அளித்துவிட்டுக் குஜ்ரன்வாலாவிற்குத் திரும்பிவிட்டார். இந்தத் தலைமை மாற்றத்தைச் சாதகமாகப் பயன் படுத்தி எளிதாக வெற்றி பெற்றுவிடலாம் என்ற பங்கிகளின் திட்டம் பலிக்கவில்லை; ஏனெனில் அவர் களுக்கு உதவியாக லாகூரிலிருந்து வந்த படைகளை ரண்ஜீத் சிங் நிர்மூலமாக்கிவிட்டார். ஆனால் துரதிருஷ்ட வசமாக, இந்நீண்ட போரில் வெற்றி பெற்று, இளைஞர் ரண்ஜீத் சிங் தலைநகருக்குத் திரும்பி வந்த சமயத்தில் அவருடைய தந்தை காலமாகிவிட்டார். இது 1792–ல் நிகழ்ந்தது; மஹறன் சிங்கிற்கு அப்போது 27 வயதுதான்.

மறு வருடம் தம்மைக் கொலை செய்வதற்கு நடந்த முயற்சியிலிருந்து ரண்ஜீத் சிங் தப்பினார். ஒரு நாள் வேட்டையின் போது ஒரு விலங்கைத் துரத்திக் கொண்டு சென்று, தமது பரிவாரத்தினரிடமிருந்து பிரிந்து தனித்து விட்டார். அப்போது சற்றும் எதிர்பாராத விதத்தில் மஹறன் சிங்கினிடம் முன்பு பலமுறை தோல்வி கண்ட ஹஷ்மத்கான் என்ற முஸ்லிம் தலைவன் திடீரென்று அவரை வழி மறித்தான். தக்க சமயத்தில் ரண்ஜீத்

சிங்கின் குதிரை சட்டென்று பின் வாங்கியதால் அக் கொலைகாரனின் வாள் வீச்சிலிருந்து தப்பினார்; எதிரி இரண்டாவது முறை வாளை வீசுவதற்குள் இளைஞர் ரண்ஜீத் சிங் ஈட்டியால் அவனைக் கொன்று வீழ்த்தினார். அந்த ஆபத்தான வேளையில் விதி குறுக்கிட்டு அவரைக் காப்பாற்றியிருக்காவிட்டால் பஞ்சாபின் வரலாறே மாறி யிருக்கும்.

இன்னும் இளைஞராயிருந்தபோதே (அப்போது அவருக்கு வயது 13 தான்) அந்தக் காலத்தின் வளமுறை காரணமாகவும் ரண்ஜீத் சிங் அரசாங்கத்தின் அன்றாட நிர்வாகத்தைவிட வேட்டையாடுவதிலேயே அதிக ஆர்வ முடையவராக இருந்தார்; எனவே, ஆட்சிப் பொறுப்பைத் தம் தாயாரிடமும், தம் தந்தையிடம் திவானாக இருந்த லக்பத்ராயிடமும் விட்டுவிட்டார். சில ஆண்டுகளுக்கு முன்னர் அவருடைய தந்தை, கன்ஹயா 'மிஸல்' தலைவரைத் தோற்கடித்த போது அத்தலைவர் தமது பேத்தி மஹ்தாப் கௌரை (மகன் குர்பக்ஷ் சிங்கின் புதல்வி) ரண்ஜீத் சிங்கிற்குத் திருமணம் செய்து தருவதாக ஒப்புக் கொண்டிருந்தார். தம்முடைய மாமனார் காலமானதும் கன்ஹயாக்களின் உடைமைகளுக்கு மஹ்தாப் கௌரின் தாயான ஸதா கௌர் வாரிசானாள்; ஸதா கௌரின் கணவர் அதற்கு முன்பே போரில் இறந்து விட்டார். ரண்ஜீத் சிங் நிர்வாகத்தில் அக்கறை காட்டாதிருப்பதைப் பார்த்த அவரது தாயார், ஒருகால் அவருக்குத் திருமணம் செய்வித்தால் வாழ்க்கையில் பொறுப்புணர்ச்சி ஏற்படும் என எண்ணினார். எனவே, ரண்ஜீத் சிங்கிற்குப் பதினைந்து வயது முடிந்தபோது கன்ஹயாத் தலைநகரமான பட்டாலாவில் அவருக்குத் திருமணம் நிகழ்ந்தது. அநேகமாக, எல்லா சீக்கியத் தலைவர்களும் வந்திருக்கத் திருமண வைபவம் படாடோபமாக நடந்தேறியது.

ஆனால் இத்திருமணம் அவ்வளவு வெற்றிகரமானதாக அமையவில்லை. மணமகனின் தந்தை தன்னுடைய தகப்பனான குர்பக்ஷ் சிங்கைக் கொன்றவர் என்பதை மணமகள் மறக்க இயலாமல் இருந்திருக்கலாம்; அத்துடன், ரண்ஜீத் சிங்கின் கவர்ச்சியற்ற தோற்றம் அவள் உள்ளத்தைத் தொடவில்லை. எனினும், ரண்ஜீத் சிங்கைப் பொறுத்தவரை, கன்ஹயா குலத் தலைவரான தம்முடைய மாமியாருக்கு இருந்த செல்வாக்கையும் அதிகாரத்தையும் பயன்படுத்திக் கொள்ள விரும்பினர்; உண்மையில் இருவரும் ஒருவரை யொருவர் தம் சொந்த வசதிக்கு (சுயநலத்துக்கு என்று கூடச் சொல்லலாம்) கருவியாகப் பயன்படுத்திக் கொண்டனர். ஸதாகௌர் தனது 'மிஸலி'ன் நலன்களைப் பெருக்கிக் கொள்ள ரண்ஜீத் சிங் உதவ வேண்டுமென்று விரும்பினள். 1797–ல் ராம்கரியாக்கள் அவளது உடைமைகளைக் கவர முற்பட்ட போது, ரண்ஜீத் சிங்தான் ராம்கரியாக் கோட்டை யொன்றை முற்றுகையிட்டதன் மூலம் அவளது படைகளுக்கு வர இருந்த ஆபத்தை விலக்கினர்.

இந்த அனுபவத்தால் ரண்ஜீத் சிங்கிற்கு ஓர் உண்மை புலனாயிற்று; கன்ஹயாக்கள் வெளியில் பெயர் பெற்றிருந்த அளவுக்கு வலிமையுடையவர்கள் அல்லர் என்பதை அவர் உணர்ந்து கொண்டார். அதைவிடப் பலம் பொருந்திய 'மிஸல்' ஒன்று தமக்குப் பக்கத் துணையாகக் கிடைத்தால் தாம் இன்னும் அதிக ஆதிக்கம் பெறமுடியும் என்று எண்ணினர். எனவே, அவர் நக்காயி 'மிஸல்' தலைவரின் சகோதரியை (1798–ல்) மணந்து ஒரு புதிய கூட்டுறவைத் தேடிக் கொண்டார். அரசியல் நோக்கத்திற்காக ஏற்பட்ட பந்தமானாலும் இத் திருமணம் வெற்றிகரமாக அமைந்துவிட்டது. நக்காயி இளவரசி ராஜ் கௌர் (ரண்ஜீத் சிங்கின் தாயார் பெயரும் இதுவே) ரண்ஜீத் சிங்கின் இரண்டாவது மனைவிதான் என்றாலும் அவளால் அவருக்கு மிகுந்த வாழ்க்கையின்பம் கிடைத்தது. உண்

மையில் அவளே அவரது பிரதான மனைவியாக விளங்கினாள்; மஹ்தாப் கௌருக்கு இரண்டாவது ஸ்தானம் தான். தன்னிடத்தை மற்றொருவர் பெற்றுவிடவே, மஹ்தாப் பட்டாலாவிற்குத் திரும்பிச் சென்று விட்டாள்; எதிர்பாராத வகையில் சம்பவங்கள் திரும்பி விட்டதைக் கண்டு அவருடைய தாயார் ஸதா கௌர் ஏமாற்றமடைந்தாள். எனினும், ரண்ஜீத் சிங்கின் மூலமும், மஹ்தாப்பிற்கும் அவருக்கும் பிறக்கக் கூடிய புதல்வர்கள் மூலமும் சீக்கிய 'மிஸல்'களின் மீது ஆதிக்கம் பெற வேண்டுமென்ற திட்டங்களை அவள் கைவிடவில்லை.

அபரிமிதமான அதிகாரத்தைப் பெறவேண்டுமென்ற ஆர்வம் இப்போது மேலோங்கி விட்டதால் ரண்ஜீத் சிங் சுயமாகச் செயலாற்றவும், அரசாங்க நிர்வாகத்தில் முன்னைவிட அதிக அக்கறை காட்டவும் தொடங்கினார். ரண்ஜீத் சிங்கின் சிறிய தந்தையான தால்சிங் திவான் பதவியைத் தாம் பெற வேண்டுமென விரும்பியதால் அவருக்கும் திவான் லக்பத் ராய்க்கும் இடையே மன வேற்றுமை ஏற்பட்டது. இது, ரண்ஜீத் சிங் அரசாங்கக் காரியங்களில் கவனம் செலுத்தியதற்கு மற்றொரு தூண்டுகோலாக அமைந்தது. எவ்வாறாயினும் ரண்ஜீத் சிங் தமது 17-வது வயதில் உண்மையிலேயே சுயேச்சையானவராகவும், தமது 'மிஸலி'ன் நடைமுறைத் தலைவராகவும் செயல் புரிய முடிவு செய்தார். இது வரை, ஸுகர் சாக்கியத் தலைமைப் பதவி அவருக்கு வழி வழி வந்த வாரிசுரிமையாக மட்டிலுமே இருந்து வந்தது; இப்போது சொந்தத் தகுதியை நிலை நிறுத்த விரும்பினார்.

*அத்தியாயம் 3*

## ஆரம்ப வெற்றிகள்

ரண்ஜீத் சிங் பஞ்சாபில் மகாராஜாவாக ஆவதற்கு வழி கோலிய பல்வேறு வெற்றிகளைப் பற்றிய விவரங்கள் இவ்வளவு காலத்துக்குப் பின் இன்றைய வாசகர்களுக்கு ருசிகரமாக இருக்கமாட்டா; என்றாலும், அவரது செயல்களினின்றும் அவரைப் பிரித்துக் காண இயலாதாகையால், ரண்ஜீத் சிங்கின் வாழ்க்கை வரலாற்றைச் சரியான கோணத்தில் அளிப்பதற்காக அவரது வெற்றிகளைச் சுருக்கமாகக் குறிப்பிடுவது அவசியமாகும்.

அடுத்தடுத்துப் படையெடுத்து வந்த ஆமதுஷா ஆப்தாலியின் பேரனை ஷாஜாமன், பாட்டனைப் போலவே சாகசங்கள் செய்யும் ஆசையுடன் 1795-ல் ஜீலம் வரை முன்னேறினன். 1797, 1798-ஆம் ஆண்டுகளில் மேலும் முன்னேறி, சீக்கியர்களின் எதிர்ப்பு அதிகமில்லாமல் லாகூரைக் கைப்பற்றிக் கொண்டான். உண்மையில் இச் சீக்கியத் தலைவர்களுள் சிலர் அந்த ஆப்கானியனுடன் உடன்பாடு செய்து கொள்வதே உசிதம் என்று எண்ணினர்; இதற்குப் பரிசாக அவர்களுக்கு நிலங்கள் கிடைத்தன. ஷாஜாமன் திரும்பிச் செல்லும் போது வெள்ளப் பெருக்கெடுத்தோடிய ஜீலம் நதியில் அவனது 12 பீரங்கிகள் தவறி விழுந்துவிட்டன. இப்பகுதிக்கு ரண்ஜீத் சிங் தலைவராக இருந்ததால் அவர் அந்தப் பீரங்கிகளைத் தேடியெடுத்துக் கொடுத்தால் லாகூரை அவருக்கு வழங்குவதுடன், 'ராஜா' என்ற பட்டத்தையும் அளிப்பதாக அவன் வாக்களித்தான். அதன்படி ரண்ஜீத் சிங் வெள்ளத்திலிருந்து மீட்டிய எட்டுப் பீரங்கிகளைப் பெஷாவருக்கு அனுப்பி வைத்தார். ஒப்புக்

கொண்டபடி ரண்ஜீத் சிங்கிற்கு லாகூர் ஜாரி செய்யப் பட்டது; ஆனால் அந்நகரை அவர் தமது சொந்த முயற்சி யால் தான் வசப்படுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று.

### லாகூர்

லாகூரை அப்போது ஆண்டு வந்த சீக்கிய ஆட்சி யாளர்கள் ஒழுக்கங் கெட்டவர்களாக இருந்தனர். அவர்களது அடக்கு முறை ஆட்சியில் மக்கள் சலிப் படைந்திருந்தனர். இந்நிலையில் லாகூர், ரண்ஜீத் சிங்கிற்கு அளிக்கப்பட்ட செய்தியைக் கேட்டவுடன், மக்கள் அவரை ரட்சகராகக் கருதி வரவேற்பார்களென அவருக்குச் செய்தி கிடைத்தது. எனவே, 1799-ஆம் ஆண்டு ஜூலை 6-ஆம் தேதி அவர் லாகூருக்குப் படையுடன் சென்றபோது நகர வாயிற் கதவுகள் திறந்து விடப் பட்டன; 'பங்கி' சர்தார்கள் ஓட்டம் பிடித்தனர்; "வெற்றி பெற்ற தமது படையினர் நகரிலும் நகர மக்களி டத்தும் மிகுந்த பரிவுடன் நடந்து கொள்ள வேண்டு மென்றும், கொள்ளை யடிக்கும் அல்லது தகாத முறையில் நடந்து கொள்ளும் போர் வீரர்கள் கடுமையாகத் தண்டிக்கப்படுவார்கள் என்றும் அவர் கண்டிப்பான உத்தரவிட்டிருந்தார்." சில ஆசிரியர்கள் இத்துர்ரானி 'நன்கொடை'க் கதையை நம்பவில்லை; அவர்கள் அந்நகர மக்களுக்குச் ஸுகர் சாக்கியத் தலைவரிடம் (தம்மிடம்) இருந்த நம்பிக்கையைப் பயன்படுத்திக் கொண்டு ரண்ஜீத் சிங் தமது மாமியாரான ஸதா கௌரின் உதவியால் லாகூரைக் கைப்பற்றிக் கொண்டதாக இவ்வாசிரியர்கள் கருதுகின்றனர். எவ்வாறு கொண்டாலும், மக்களுக்கு அத்தியாவசியமான பந்தோபஸ்தைப் புதிய அரசர் அளித்தார். பதவியிழந்த பங்கி குலத்தலைவர்களையும் அவர் பெருந் தன்மையுடன் நடத்தி, அவர்களுக்குக் கணிச மான ஜாகிர்களை அளித்தார்.

ரண்ஜீத் சிங் லாகூரைக் கைப்பற்றியதைக் கண்டு முஸ்லிம்களும், மற்றச் சீக்கியர்களும் பொருமை கொண்டனர். அண்டை ஆட்சியாளர்கள் சிலர் ஒன்று கூடி அவர் அதிகாரத்தை எதிர்க்கவும் முனேந்தனர். அவர்கள் 1800–ல் ரண்ஜீத் சிங்கை எதிர்ப்பதற்காகக் கசூருக்கு அருகே பஸீன் என்னுமிடத்தில் ஒரு பெருஞ் சைனியத்தைத் திரட்டி நின்றனர்; முடிந்தால், ஆலோசனைக் கூட்டமொன்றில் அவரைக் கொன்று விடுவது என்றும் திட்டமிட்டனர். ஆனல் அவர்கள் திட்டம் பலிக்கவில்லை. அவர்களுக்குள்ளேயே ஏற்பட்ட போட்டி பொருமையால் திட்டம் தடைப்பட்டது; தலைவர்களுள் ஒருவரான குலாப்சிங் பங்கி மிதமிஞ்சிய குடியால் இறக்கவே, திட்டம் முடிவில் பிசுபிசுத்து விட்டது.

## ஜம்மு

தமது முன்னோர்கள் சென்ற வழியிலேயே, ரண்ஜீத் சிங்கும் இப்போது வளம் கொழிக்கும் ஜம்முவின் மீது தமது கவனத்தைச் செலுத்தினர். அந்நகருக்குச் செல்லும் வழியில் இருந்த இரு ஊர்களை வென்றார். ஜம்முவின் ராஜா அவர் அதிகாரத்திற்கு கீழ்ப்பட்ட சிற்றரசராக இருக்கச் சம்மதித்து, ரொக்கமாகத் திறை செலுத்தினர். ரண்ஜீத் சிங் சியால் கோட் வழியாகத் திரும்பி வருகையில், குஜ்ரன்வாலாவைத் தாக்கத் திட்டமிட்டுக் கொண்டிருந்த பஸீன் கூட்டணியினரைப் போரில் தோற்கடித்தார். மலைப்பிரதேசத்தில் ஸதா கௌருக்குச் சொந்தமாக இருந்த சில பகுதிகளைக் காங்ராவின் ராஜா ஸன்ஸார் சந்த் முன்பு பறித்துக் கொண்டிருந்ததால், ரண்ஜீத் சிங் அடுத்தாற்போல் அவரைக் குறி வைத்தார்; அப்போரில் ராஜா ஸன்ஸார் தோல்வியுற்று நூர்புரை 'நஸ்ரனு'வாக (காணிக்கையாக) ரண்ஜீத் சிங்கிற்கு அளித்தார்.

1802–ல் ரண்ஜீத் சிங் சினியட் என்னுமிடத்தை வென்ருர். இச்சமயத்தில் கசூர் முஸ்லிம் அரசர் ஒரு ஒட்டகக் கூட்டத்தைக் கொள்ளையிட்டாரென்று கேள்விப் பட்டு அவர் மீது ரண்ஜீத் சிங்கும் அவரது நேசக் கட்சி யினரான கன்ஹயாக்களும், அலுவாலியாக்களும் சேர்ந்து தாக்கி அவரைப் பணிய வைத்தனர். 1803–ல் இளம் ஸீகர் சாக்கியத் தலைவரான ரண்ஜீத் சிங் முதன் முறையாக முல்டானைத் தாக்கி அங்கிருந்த முஸ்லிம் தலைவரான முஸபர்கானைச் சரணடைய வைத்தார். ஜங் பகுதியின் அதிபர் ஆமது கானும் அவருடைய மேலதி காரத்தை ஒப்புக் கொண்டார். இப்படையெடுப்பில் ரண்ஜீத் சிங் இடை வழியில் இருந்த முஸ்லிம் ஆட்சி யாளர்களுக்குக் கப்பங்களை விதித்த வண்ணம் ராவல் பிண்டி வரை சென்ருர்.

அதற்கு ஒரு வருடத்திற்கு முன்னல், அதாவது 1801-ல் ரண்ஜீத் சிங்கிற்கு முதல் மகன் (பின்னல் கரக் சிங் எனப் பெயரிடப் பெற்றவன்) பிறந்தான். அவனைப் பெற்றவள் நக்காயி இளவரசியான ராஜ் கௌர். இதை யொட்டி 40 நாட்களுக்கு எங்கும் கோலாகலமாகக் கொண்டாட்டங்கள் நடைபெற்றன. ரண்ஜீத் சிங்கிற்கு 'மகாராஜா' என்ற பட்டத்தை அளிக்கச் சீக்கியப் பிரபுக்கள் தீர்மானித்தனர்; அதிருஷ்டகரமான அந்த ஆண்டில் பைசாகி தினத்தன்று பெரிய தர்பாரில் பட்டாபிஷேகம் நடந்தது. இனி அவரை 'ஸர்க்கார்' என்றே மரியாதையுடன் அழைக்கத் தீர்மானிக்கப்பட்டது. எனினும், அவர் குருநானக் பெயரிலும் குருகோவிந்த் சிங் பெயரிலுமே நாணயங்களை வெளியிட்டார். இன்றும் அவை 'நானக்ஷாகி' (இச் சொற்றொடருக்கு 'நானக்கின் ராஜ்யம்' என்று பொருள். ரண்ஜீத் சிங், தமது ராஜ் யத்தைக் குருநானக்கின் பெயரால் ஆண்டு வந்தார்.) என அழைக்கப் பெறுகின்றன.

## அமிர்தசரஸ்

பங்கிக்களின் பெரிய கோட்டையாக விளங்கிய அமிர்தசரஸை அவர் வென்ற காலத்தைப் பற்றி வரலாற்ருசிரியர்களிடையே வேறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. பிரபல ஆசிரியர்களுள் ஒருவரான ஸோஹன்லால் ஸூரி, இச்சம்பவம் 1805-ஆம் ஆண்டு பிப்ரவரியில் நிகழ்ந்ததாகக் கூறுகிருர். லெப்பல் கிரி∴பின் என்பவரின் கருத்து வேறு. முன்னர் 1764-ல் துர்ரானியர்களோடு நடந்த சண்டையின்போது கொள்ளையடித்ததில் தமது பாட்டனுரான சர்ஹத் சிங்கிற்குரிய பங்காக வாக்களிக்கப்பட்ட புகழ் வாய்ந்த பங்கிப் பீரங்கியான 'ஸாம்ஸாமா'வைத் தம்மிடம் ஒப்படைக்குமாறு பங்கித் தலைவரின் விதவையான மாய்ஸுக்கனிடம் ரண்ஜீத் சிங் கோரினுர். பங்கிக்கள் அப்பீரங்கியைக் கொடுக்க மறுக்கவே (இப்போது அந்த பீரங்கி லாகூர் பொருட்காட்சிச் சாலையின் முன்புறம் வைக்கப்பட்டுள்ளது) ரண்ஜீத் சிங் அமிர்தசரஸைத் தாக்கி இரண்டு மணி நேரத்திற்குள் அதைக் கைப்பற்றிக் கொண்டார். இவ்வெற்றியின் விளைவாக, சீக்கியர்களின் சமயத் தலைநகரான அமிர்தசரஸும் அரசியல் தலைநகரான லாகூரும் ரண்ஜீத் சிங்கின் வசமாகி விட்டன. மற்றும், ஸதா கௌரும், ∴பத்தேசிங் அலுவாலியாவும் அவருடைய கூட்டாளிகளாக இருந்தனர். ஜம்மு, கசூர் மன்னர்கள் உட்படப் பல மன்னர்கள் அவருக்குக் கப்பம் செலுத்தி வந்தனர். "ஏறக்குறைய இதே காலத்தில்தான், மகாராஜாவிடம் மிகுந்த விசுவாசமுள்ள தளபதிகளுள் ஒருவராகப் பின்னுளில் விளங்கிய அகாலி∴பூலாசிங் அவரிடம் உத்தியோகத்தில் சேர்ந்தார்."

## மராத்தியரும் ஆங்கிலேயரும்

1805-ல் மகாராஜா, 'ஜங்' பகுதியை வென்ற பிறகு முல்டான் மீது படையெத்துச் சென்ற நேரத்தில்,

ஆங்கில தளபதியான லேக் பிரபு துரத்தி வர, ஜஸ்வந்த ராவ் ஹோல்கரும், பிண்டாரிகளின் தலைவரான அமீர் கானும் பஞ்சாப் எல்லைக்குள் புகுந்திருப்பதாகவும்; லேக் பிரபு வியாஸ் நதியின் கீழ் கரையில் முகாமிட்டிருப் பதாகவும் அறிந்தார். ரண்ஜீத் சிங் உடனே அவசர மாக அமிர்தசரஸிற்குத் திரும்பினார்; ஹோல்களுக்கும் ஆங்கிலேயருக்கும் இடையேயுள்ள விவகாரத்தில் தாங்கள் கையாள வேண்டிய கொள்கையை நிர்ணயிப் பதற்காகச் சீக்கியத் தலைவர்களின் கூட்டமொன்றுக்கு ஏற்பாடு செய்தார். விரட்டப்படுபவர்களும் விரட்டி வருபவரும் பஞ்சாபிற்குள் இன்னும் முன்னேறினால், பஞ்சாப் முழுவதும் போரினால் பெருத்த நாசத்திற்குள் ளாகும் என்று அவர் எண்ணினார்; ஆனால் அவ்விருவருக்கு மிடையேயான போராட்டத்தில் தாம் தலையிடுவதற்கு அது தக்க தருணமல்ல என்பதையும் உணர்ந்திருந்தார். எனவே, 'குர்மத்தா' (சீக்கிய சமயக் கூட்டத் தீர்மானம்) மராத்தியருக்கும் ஆங்கிலேயருக்கும் இடையே சமரசம் செய்து வைக்க முடிவு செய்தது. ரண்ஜீத் சிங் தலை யிட்டதன் பேரில் ஹோல்கர் டில்லிக்கு அப்பால் உள்ள தமது பகுதிகளைத் திரும்பப் பெற்றார். அதே சமயத்தில், லேக் பிரபுவிற்கும் சீக்கியத் தலைவர்களுக்கும் இடையே நடைபெற்ற பேச்சு வார்த்தைகளின் விளைவாக உடன் படிக்கை யொன்று செய்து கொள்ளப்பட்டது; அதன்படி ஹோல்கர் தமது சைனியத்தை அமிர்தசரஸில் இருந்து 30 'கோஸ்' (2 மைல் = 1 கோஸ்) தூரத்திற்கு அப்பால் பின்வாங்கிச் செல்ல வேண்டும் என்றும் பஞ்சாப் அரசர்கள் அவரோடு எவ்வித உறவும் வைத்துக் கொள்ளலாகாது என்றும் முடிவாயிற்று. இவ்வுடன் படிக்கை மீறப் பெறாதவரை ஆங்கிலப் படை சீக்கியத் தலைவர்களின் பிரதேசங்களுக்குள் பிரவேசிக்கவோ அல்லது அவர்களுடைய பகுதிகளைக் கைப்பற்றவோ முயலாதென்று லேக் பிரபு உறுதியளித்தார்.

இப்போது ரண்ஜீத் சிங்கே பஞ்சாபில் சீக்கியப் பெருந் தலைவர் என்பது உறுதியாயிற்று. அந்த அந்தஸ்து காரணமாக, நாபாவிற்கும் பாட்டியாலாவிற்கும் இடையேயான ஒரு சிறு எல்லைத் தகராறைத் தீர்த்து வைக்குமாறு ரண்ஜீத் சிங்கை இருதரப்பாரும் வேண்டினர். அதில் அவர் பாட்டியாலாவிற்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தாலும் அதற்கு ஈடாக நாபாவிற்குப் பல கிராமங்கள் வழங்கப்பட்டன. அவர் திரும்பிச் செல்லும்போது ஜலந்தரில், ராஜா ஸன்ஸார்சந்தின் சகோதரரான ஃபத்தே சந்த் அவரைச் சந்தித்து, காங்ராவிலுள்ள தங்கள் கோட்டையை முற்றுகையிட்டிருந்த நேபாளத் தளபதி தாபாவை எதிர்ப்பதற்கு அவருடைய உதவியைக் கோரினார். உடனே மகாராஜா நேரில் ஜ்வாலமுகிக்குச் சென்ற மாத்திரத்தில் தாபா முற்றுகையைக் கைவிட்டார். அவர் அங்கிருந்த போதுதான் அவரது மனைவி மஹ்தாப் கௌருக்கு இரட்டைக் குழந்தைகள் (ஷேர்சிங், தாராசிங்) பிறந்த செய்தி கிடைத்தது. உடனே அவர் அமிர்தசரஸிலுள்ள சீக்கியக் கோவிலுக்கு சென்று (இன்று அது தர்பார் சாஹிப் என அழைக்கப் படுகிறது) இறைவனுக்கு நன்றி செலுத்தினார்.

## கசூரும் முல்டானும்

கசூரின் புதிய பட்டாணியத் தலைவர் தமது மூத்த சகோதரர் காலமான பிறகு செருக்கு மிகுந்தவரானார். அதனால் ரண்ஜீத் சிங் அவருடைய அகம்பாவத்தை ஒடுக்கிக் கசூரை நிர்வகிக்க ஒரு சீக்கிய ஜாகிர்தாரை நியமித்தார். எனினும் பதவியிலிருந்து விலக்கப்பட்ட அதிபரையும் அவருடைய உறவினர்களையும் பெருந் தன்மையோடு நடத்தி, அவர்களுக்கு ஜாகிர்களும் வழங்கினார். கசூர் தலைவர்களின் திமிருக்குத் தூண்டு கோலாக இருந்த முல்டான் நவாப் முஸபர்கானுக்கும் இதே தண்டனை கிடைத்திருக்கும். ஆனால் பஹவல்பூர் நவாப்

தலையிட்டு சமரசம் செய்து வைத்து, மஹாராஜாவுக்கு முல்டான் நவாப் கணிசமான தொகையைத் திறையாகச் செலுத்துமாறு செய்தார்.

காலப்போக்கில் மஹாராஜாவுக்கு மேலும் மேலும் பூமிகள் வசமாயின. அவர் பாட்டியாலாவிற்குச் சென்றிருந்த சமயத்தில் "நாராய்ன்கரின்" ராஜா அவருக்குப் பணியாததால் அதனைக் கைப்பற்றிக் கொண்டார். ராஹோன் என்னும் ராஜ்யத்தின் அதிபர் இறந்தவுடன் அதை வசப்படுத்திக் கொண்டார்; ஆனால் அவரது குடும்பத்திற்குத் தக்க வாழ்க்கை வசதிகளைச் செய்து கொடுத்தார். ராஜ்ய விஸ்தரிப்பு தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. 1808-ல் பத்தான்கோட், சம்பா, பஸோலிப் பகுதிகளிலும் பின்னர் விரைவிலேயே ஸியால்கோட், அக்னூர் வரையும் கூட ரண்ஜீத் சிங்கின் ஆதிக்கம் பரவிற்று. அநேக சர்தார்கள் தாமாகவே முன்வந்து மகாராஜாவிற்குப் பணிந்தனர். ஷேகுபுரா மன்னரைப் போல அவரை எதிர்க்கத் துணிந்த எவரும் அதிக நாள் தாக்குப் பிடிக்க இயலவில்லை.

## ஆங்கிலேயருடன் உடன்பாடு

ஒருபக்கம் மகாராஜா ரண்ஜீத் சிங்கின் அதிகாரம் வளர்ந்து வருவதையும், மறுபக்கம் யமுனைக்குக் கிழக்கே ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் செல்வாக்கு ஓங்கி வருவதையும் கண்ட ஸட்லெஜின் இக்கரைப் பகுதி சீக்கிய அரசர்கள் இந்த இருவருள் எவருடைய பாதுகாப்பை நாடலாம் என்பதைத் தீர்மானிப்பதற்காக ஸமானு என்னுமிடத்தில் கூடி ஆலோசித்தனர். முடிவில் அவர்கள் ஆங்கிலக் கம்பெனியை நாடுவதென்று தீர்மானித்து, 1808-ல் கூட்டாக ஒரு மனுவைத் தயாரித்து டில்லியில் இருந்த ஆங்கில ஸ்தானிகருக்கு அனுப்பினர்; அவர் அதனைக் கல்கத்தாவில் இருந்த கவர்னர் ஜென

ரலுக்கு அனுப்பி வைத்தார். கூர்மதி படைத்த ரண்ஜீத் சிங் இவ்வாட்சியாளர்களுடன் சுமுகமான உறவு வைத்துக் கொள்வதுதான் அறிவுடைமை யென்று கண்டு கொண்டார். அமிர்தசரஸில் ஒரு மாநாட்டைக் கூட்டி, அதில் அவர்களின் சந்தேகங்களைப் போக்கியது மட்டு மல்லாமல் பாட்டியாலா மகாராஜாவுடன் (மாறுத நட்பிற்கு அடையாளமாக) தலைப்பாகைகளை மாற்றிக் கொண்டார்.

பாரசீகம், துருக்கி ஆகிய நாடுகளின் உதவியோடு இந்தியாவின் மீது படையெடுக்க நெப்போலியன் போனபார்ட் திட்டமிடுவதை அறிந்தவுடன்; இந்தியா வில் இருந்த ஆங்கிலேயர்கள் பஞ்சாபில் தலையிடாமல் ஒதுங்கி நிற்கும் தங்கள் கொள்கையைக் கைவிட்டனர். பிரெஞ்சு ஆதிக்கத்துக்கு எதிராகக் கூட்டுப் பாதுகாப்பு ஒப்பந்தம் செய்து கொள்வதற்காக லாகூர், காபுல், டெஹ்ரான் ஆகிய இடங்களுக்கு நல்லெண்ணத் தூது கோஷ்டிகளை அனுப்பினர். ரண்ஜீத் சிங்கின்பால் அனுப்பப்பெற்ற தூதர் சார்ல்ஸ் மெட்கா:ப், 1808-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் மகாராஜாவைக் 'கேம்காரன்' என்னுமிடத்தில் சந்தித்துப் பிரெஞ்சுக் காரர்களுக்கு எதிராக அவருடைய ஒத்துழைப்பையும், நெப்போலியனின் திட்டங்களை முறியடிக்கும் பொருட்டு ஆப்கானிஸ்தானத்தின்மீது ஆங்கிலேயர் படையெடுக்கும் அவசியமேற்பட்டால், அவருடைய பிரதேசத்தின் வழி யாக ஆங்கிலப்படை செல்வதற்கு அனுமதியையும் கோரினர். எல்லாச் சீக்கிய அரசுகளின் மீதும் தமக் குள்ள மேலதிகாரத்தை ஆங்கிலேயர் ஒப்புக் கொள்ள வேண்டுமென்றும், காபுல் அரசருக்கும் தமக்கும் இடையே விரோத மேற்பட்டால் ஆங்கிலேயர்கள் நடு நிலைமை வகிக்க வேண்டுமென்றும் மகாராஜா எதிர் நிபந்தனைகள் விதித்தார். மெட்கா:ப், தாமாக எதையும் முடிவு செய்யும் அதிகாரமற்றவராதலால் மகாராஜா

விதித்த நிபந்தனைகளைக் கவர்னர்-ஜெனரலுக்குத் தெரிவித்தார்.

இடையில் ரண்ஜீத் சிங், சட்லெஜின் இக்கரைப் பகுதி ராஜ்யங்களில் சிலவற்றைத் தமது ஆதிக்கத்திற்குள் கொண்டு வரும் நோக்குடன் புதிய படையெடுப்பு ஒன்றை மேற்கொண்டார். இம்முறை அவர் ஃபரீத்கோட், மாலர் கோட்லா, அம்பாலா, ஷாஹாபாத் ஆகிய இடங்கள் வழியாகப் படை கொண்டு சென்றார். இந் நேரத்தில் இந்தியாவின் மீது பிரெஞ்சுக்காரர்கள் படையெடுப்பது பற்றிய பயம் ஓரளவு தணிந்திருந்ததால், ஆங்கிலேயர்கள் மகாராஜாவின் இப் புதிய படையெடுப்பைச் சற்றுக் கடுமையாக ஆட்சேபித்தனர். மகாராஜாவின் முன்னேற்றத்தைக் கண்டு அஞ்சிய தென்பகுதி சிக்கிய அரசுகள் ஆங்கிலேயரின் பாதுகாப்பை நாடின; ஆங்கிலேயர்கள் அவர் மேலும் முன்னேறுதவாறு தடுக்க லூதியானாவிற்குப் படைகளை அனுப்பினர். ரண்ஜீத் சிங் இதற்கு முன் ஆண்டு வந்த பகுதிகளோடு நின்று கொள்ள வேண்டும் என்றும் அண்மையில் அவர் வென்ற பகுதிகளை அவற்றின் உரிமையாளர்களுக்குத் திருப்பியளிக்க வேண்டும் என்றும் கவர்னர்-ஜெனரல் ஒரு பிரகடனம் வெளியிட்டார். இதற்குப் பணிவது தமக்குப் பிடிக்காவிடினும் மகாராஜா 1809- ஏப்ரல் 25-ஆம் தே ஆங்கிலேயருடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார். அதன்படி அவர் ஃபுல்கியன் ராஜ்யங்களை மட்டும் திருப்பிக் கொடுத்தால் போதுமென்று முடிவாயிற்று; சிந்துவிற்கு அப்பால் பெஷாவர் வரையும், ஜம்மு, காஷ்மீர், காங்ரா, சிவாலிக் குன்றுகள் வரையும் அவர் வென்ற அல்லது இனி வெல்லக் கூடிய பகுதிகளை அவரே வைத்துக் கொள்ளலாம் என்றும் ஒப்புக் கொள்ளப்பட்டது.

*அத்தியாயம் 4*

# பிற்கால வெற்றிகள்

ரண்ஜீத் சிங்கின் ராஜ்யம் வெகு வேகமாக விரிவடைந்து வந்தது. 1800-ல் மீண்டும் தாபாவின் தலைமையில் நேபாளிகள் படையெடுத்தபோது மகாராஜாவின் உதவியை காங்ராவின் ராஜா ஸன்ஸார்சந்த் நாடவே, அவர் போர் நடக்குமிடத்திற்கு விரைந்து சென்றார். ராஜா முன்பு வாக்களித்தபடி காங்ராவை அவரிடம் ஒப்படைக்க மனமில்லாதவராக இருக்கவே, ரண்ஜீத் சிங் தாபாவை எதிர்த்துப் போரிடும் பொருட்டு அக்கோட்டையைத் தாமே கைப்பற்றிக் கொண்டு முடிவில் நேபாளப் படையை முறியடித்தார். இவ் வெற்றியால் சம்பா, நூர்புர், கோட்லா முதலிய ஏராளமான மலைநாட்டு மன்னர்கள் மகாராஜாவின் மேலதிகாரத்தை ஏற்றுக் கொண்டனர்.

இன்று ஹரியானா என்று வழங்கப்படும் பகுதி அப்போது குரோராஸிங்கியா 'மிஸலு'க்குச் சொந்தமாக இருந்தது. மகாராஜா அப்பகுதியை வசப்படுத்திக் கொண்ட பிறகு, அதன் அதிபரின் விதவை மனைவிக்கு ஜீவனாம்சம் அளித்தார். 1810-ஆம் ஆண்டு பிப்ரவரியில் ஸஹிவால், குஜராத் பகுதிகளின் பலோச் வமிச அதிபர்கள் ரண்ஜீத் சிங்கினிடம் தங்கள் கோட்டையை ஒப்படைத்துவிட்டு வெளியேறினர். அடுத்தபடியாக முல்டான் வசமாயிற்று; அதன் நவாப் முஸபர்கான் புதிய கப்பம் செலுத்தினார். பின்னர், ஜம்மு, வஸீராபாத், தஸ்கா ஆகிய பகுதிகளும் மகாராஜாவின் ஆட்சிக்குள் வந்தன. நக்காயி பகுதியையும் ரண்ஜீத் சிங் படையெடுத்துப் பிடித்துக் கொண்டார்.

## காஷ்மீர்

1811-12-ல் காஷ்மீரை வெல்வதற்கு ரண்ஜீத் சிங் இன் படைகள் வஸீர் ஃபத்தே கானின் படைகளுடன் சேர்ந்து கொண்டன. அங்கு கவர்னராக இருந்த அட்டா முகம்மது, ஷேர்கர் என்னுமிடத்தில் முறியடிக்கப்பட்டார். அவரது சகோதரர் ஜகந்நாத்கான் தம் பொறுப்பிலிருந்த அட்டாக் என்னுமிடத்தை விட்டுக் கொடுத்துவிட்டுப் பதிலுக்கு வஸீராபாத்தில் ஒரு ஜாகிரைப் பெற்றுக் கொண்டார். இந்நிகழ்ச்சிகளால் எரிச்சல் கொண்ட ஃபத்தே கான் 1813-ல் பஞ்சாபைத் தாக்கினர்; ஆனல் ஹாஸீரோ என்னுமிடத்தில் தோல்வி கண்டார். ரண்ஜீத் சிங் ஆப்கானியர்களின் பகையை ஒழிக்கும் பொருட்டு, காஷ்மீரை வெல்லத் திட்டமிட்டார். ஆப்கானியர்கள் பல இடங்களில் தோற்கடிக்கப்பட்ட போதிலும், பெரு மழையின் காரணமாக மகாராஜா முன்னேற முடியவில்லை; எனவே அவர் 1814-ல் லாகூருக்குத் திரும்பினர். விரைவில் அவர் ரஜோரி நவாப்பின் துரோகச் செயலிற்காக அவரது ராஜ்யத்தைப் பறித்துக் கொண்டார் (1815).

1816-ல் பஹவல்பூர் நவாப் அவருக்குச் சிற்றரசரானர். முல்டான் சிற்றரசர் முஸபர் கான் பல காலமாகத் திறை செலுத்தத் தவறியதால், ரண்ஜீத் சிங் அவ்வூரை வசப்படுத்தினர்; திறையில் ஒரு பகுதி செலுத்தப்பட்ட பிறகே அதைக் கைவிட்டார். அடுத்து, மங்கேரா, ஜங், உச் ஆகிய இடங்கள் வீழ்ந்தன. ராம் கரியா பகுதியின் சர்தார்களுடைய வாரிசுகளுக்கிடையே இடைவிடாமல் பூசல்கள் நிகழ்ந்து வந்ததால், மகாராஜா அவர்களுடைய ராஜ்யத்தை எடுத்துக்கொண்டு, அவர்களுக்குக் கணிசமான ஜாகிரை வழங்கினர்.

## ஜங்-இ-முல்டான்

முஸபர்கான் தமது கப்பப் பாக்கியைச் செலுத்துவதற்கு அளிக்கப்பட்ட கருணைக் காலமும் முடிந்தபிறகு,

அவரிடமிருந்து கப்பத்தை வசூலிப்பதற்கு 1817-ல் வலிமை மிக்க படையொன்று முல்டானுக்கு அனுப்பப் பட்டது. போரில் நவாபின் படைகள் சரணடைந்தன; தம்முடைய வாழ்க்கைக்கு ஏதாவதொரு பகுதியை அளிப் பதானல், முல்டான், முஸபர்கர் ஆகிய கோட்டைகளை விட்டுக் கொடுக்க நவாப் இசைந்தார். ஆனல் அவர் வாக்களித்தபடி நடந்துகொள்ளத் தவறியபோது மீண் டும் உக்கிரமான போர் மூண்டது. கோட்டை மதில்கள் மீது சீக்கியப் படை குண்டுகளைப் பொழிந்தது. மதிலின் ஒருபுறம் தகர்ந்து விழப்போகும் நேரத்தில் சீக்கியர் களின் பீரங்கியில் ஒரு சக்கரம் பழுதாகிவிட்டது. அதைப் பழுது பார்க்கவோ அல்லது வேறு சக்கரம் பூட்டுவதற்கோ நேரமில்லாததால், படைத் தலைவர் தற் கொலை கோஷ்டி ஒன்று, அதாவது சக்கரத்துக்குப் பதில் தங்கள் தோள்களால் பீரங்கி வாகனத்தைத் தாங்கக் கூடிய தொண்டர்கள், முன் வரவேண்டும் என்று அழைத் தார். தாமே முதன் முதலாக இவ்வாறு உயிர்த் தியா கம் செய்து மற்றவர்களுக்கு அவர் வழிகாட்டினர். பல உயிர்களைப் பலி கொடுத்த பிறகே கோட்டைச் சுவர் தகர்ந்தது. உடனே, கிழட்டு நவாபும் அவரது பிள்ளை களும் அவ்விடத்தைப் பாதுகாக்க விரைந்தனர்: ஆனல் சீக்கிய வாள்களுக்கு அவர்கள் இரையாயினர். 1818- ஜூன் 15-ஆம் தேதி கோட்டை கைப்பற்றப்பட்டது. நிஹங் வமிசத்தைச் சேர்ந்த ஒரு கோஷ்டியினர் கோட் டையின் ஒரு பக்கத்தை வெடி வைத்துத் தகர்த்தெறி வதில் பெரும் பங்காற்றினர்.

### பெஷாவர்

வஸீர் ஃபத்தே கான் கொலையுண்டதால் காபுலில் குழப் பமான நிலைமை இருந்து வருவது ரண்ஜீத் சிங்கின் கவனத்தைக் கவரவே, அதே வருடத்தில் அவர் அட்டாக் என்ற ஊருக்கு ஒரு படையுடன் சென்ருர். அதைக்

கைப்பற்றியபின், மகாராஜாவின் படையினர் சிந்து நதியைக் கடந்து பெஷாவருக்குள் நுழைந்தனர். ஆப்கானிய அரசர் தோஸ்த் முகம்மது அவருக்குப் பணிந்ததோடு திறையும் செலுத்த ஒப்புக் கொண்டதால், ரண்ஜீத் சிங் அதை ஏற்றுக்கொண்டு அவரைத் தமது பிரதிநிதியாக நியமித்தார். அந்நியர்கள் இந்தியாவிற்குள் நுழைவதற்குரிய கேந்திர ஸ்தலம் இவ்வாறு மகாராஜாவின் கட்டுப்பாட்டிற்குள் வந்ததால் நிலைமையில் பெரிய மாறுதல் ஏற்பட்டது. இனி இம்மார்க்கத்தின் வழியாக அந்நியர் படையெடுத்து வரக்கூடிய வாய்ப்பைக் குறைத்ததுடன், சிங்கத்தை அதன் குகைக்குள்ளேயே சென்று அடக்குவதுபோல் இதுவரை வெற்றியாளர்களாகத் தருக்கித் திரிந்த ஆப்கானியர்களை அவர்கள் நாட்டிலேயே அவர் சென்று ஒடுக்கி அகதிகளாக்கினர்.

## மீண்டும் காஷ்மீர்

எத்தனையோ தடவைகள் முயன்றும் காஷ்மீர் இன்னும் பணியவில்லை. ரண்ஜீத் சிங் தமது ராஜ்யத்திற்கும் வடக்கே வலுவான எல்லையை அமைத்துக் கொள்ளும் பொருட்டுக் காஷ்மீரை வசப்படுத்த விரும்பினர். அதனல் 1819-ல் தனித்தனியே மூன்று படைகள் அனுப்பப்பட்டன; அவற்றுள் ஒரு படைக்கு மகாராஜாவே தலைமை தாங்கினர். அவர் ஆப்கானியப் படைகள் ரஜோரி, பூஞ்ச் என்ற இரு இடங்களில் முறியடிக்கப்பட்டன. பீர்பஞ்சால் அடிவாரத்தில் நடந்த போரில் வெற்றி பெற்றபின் ரண்ஜீத் சிங் பள்ளத்தாக்கிற்குள் பிரவேசித்து 1819-ஜூலை 4-ஆம் தேதி ஸ்ரீநகரை வசப்படுத்திக் கொண்டார். இதனல் தன்னுடைய வரலாற்றில் பல ஏற்றத் தாழ்வுகளைக் கண்ட ஜம்மு-காஷ்மீர், சில காலம் சீக்கியர் ஆதிக்கத்திலும் இருக்க நேரிட்டது.

## நௌஷேராப் போர்

*1823–ல் காபுலின் முதலமைச்சரான அஸீம்கான் தமது சகோதரர் யார் முகம்மதுவின் வசமிருந்த பெஷாவரை ரண்ஜீத் சிங் பெயரால் தாக்கினர். அதைக் கைப்பற்றிக் கொண்டபின் சீக்கியர் மீது அவர் 'ஜிஹாத்' (புனிதப் போர்) தொடுத்தார். இச் செய்தி மகாராஜாவின் காதுக்கு எட்டியவுடன், நிலைமையைச் சீர்ப்படுத்த ஒரு பெருஞ்சேனையை அனுப்பி வைத்தார். மகாராஜாவே ஒரு கட்டத்தில் போர்க் களத்துக்கு விரைந்து சென்று, தமது படைகளைச் சிந்து நதியைத் தாண்டிப் பிரதான பட்டாணியப் படை திரண்டு நின்ற நௌஷேரா வரை நடத்திச் சென்றார். இரு படைகளும் 1824-மார்ச் 14-ஆம் தேதி மோதின ; முடிவில் சீக்கியரே வென்றனர். ரண்ஜீத் சிங் பெஷாவருக்குள் நுழைந்த போது அஸீம்கானின் சகோதரர்கள் சரணடைந்தனர் ; அப்போது முதல் மகாராஜாவின் பெயரால் அந்நகரத்தை நிர்வகிக்குமாறு அவர்கள் நியமிக்கப்பட்டனர்.*

*இப்போது கிழக்கு உத்தரப் பிரதேசம் என வழங்கப் படும் பகுதியைச் சேர்ந்த முஸ்லிம் வெறியன் ஒருவன் பட்டாணியர்களைச் சீக்கியர் மீது 'புனிதப் போர்' தொடுக்க ஏற்பாடு செய்ததால் 1827–ல் பெஷாவர் மீண்டும் ஒரு போருக்குக் களமாயிற்று. அவன் போரில் தோற்றான் ; எனினும் துணிவு குறையவில்லை. 1828–ல் மீண்டும் அவன் எப்படியோ பெஷாவரைக் கைப்பற்றிக் கொண்டான். அவனுடைய அடக்குமுறை உத்தரவுகள் காரணமாக அவனையும் அவனுடைய கையாட்களையும் பெஷாவர் முஸ்லிம்களே வெறுத்தனர். 1830–ல் மகாராஜா ஒரு படையை அனுப்பி மதவெறியர்களிட மிருந்து பெஷாவரை விடுவித்தார். இத்தனை அல்லல் களுக்கும் அடிப்படைக் காரணமாக இருந்த சையது என்பவன் 1831–ல் நடந்த போரில் கொல்லப்பட்டான்.*

## ராஜ தந்திர உறவுகள்

ரண்ஜீத் சிங்கின் முக்கியத்துவமும் அதிகாரமும் வளர்ந்து வருவதைக் கண்ட மற்ற ஆட்சியாளர்கள் அவருடைய நட்பைப் பெறுவதன் அவசியத்தை உணர லாயினர். 1826-ல் (ஹைதராபாத்) நிஜாமின் பிரதிநிதி ஒருவர் பரிசுப் பொருட்களுடன் லாகூருக்கு வந்தார். அவற்றுள் அழகான வேலைப்பாடமைந்த விதானம் ஒன்று இருந்தது; அதனை மகாராஜா அமிர்தசரஸ் பொற்கோ விலுக்கு நன்கொடையாக வழங்கிவிட்டார். 1831-ல் லெப்டினன்ட் பர்ன்ஸ் என்பவர் ஆங்கில அரசரின் வெகு மதிகளாக ஐந்து குதிரைகளையும் ஒரு சாரட்டையும் கொண்டு வந்தார். அரசியல் நிலையையும் நில அமைப் பையும் பற்றிய பயனுள்ள தகவல்களைச் சேகரிப்பதும், முக்கியமாக சிந்து நதியில் நீராவிக் கப்பல் போக்கு வரத்திற்குள்ள வசதிகளை அறிந்து செல்வதுமே அத் தூதரின் உண்மையான நோக்கமாகும். அவ்வாண்டில், புதிய கவர்னர் ஜெனரல் வில்லியம் பெண்டிங்க் பிரபுவை வரவேற்பதற்காக மகாராஜா ஒரு நட்புத் தூதுகோஷ்டியைச் சிம்லாவிற்கு அனுப்பி வைத்தார். பெண்டிங்க் பதில் மரியாதையாக ஒரு கோஷ்டியை அனுப்புவதற்குப் பதில் மகாராஜாவிடமிருந்து தமக்கு ஓர் அழைப்பு வருமாறு செய்து, தாமே நேரில் சென்று மகாராஜாவைக் காணத் தீர்மானித்தார். இருவரும் அக்டோபர் 16-ஆம் நாள் ரூப்பார் என்னுமிடத்தில் சந் தித்தனர். பேச்சு வார்த்தைகளும், இராணுவ மரியாதை அணிவகுப்புகளும் விருந்து உபசாரங்களும் ஒரு வார காலத்திற்கு நடந்தன. ஆனால் இச் சந்திப்பின் முடிவில் ஆங்கிலேயர் 'நிரந்தரமான' நண்பர்களாக இருப்பதாக எழுத்து மூலம் வாக்குறுதியளித்ததைத் தவிர ரண்ஜீத் சிங் எதிர்பார்த்த அளவு நன்மை கிடைக்கவில்லை. அவர் சிந்துப் பகுதியை வெல்ல வேண்டுமெனத் திட்டமிட்டு வந்ததைக் கைவிடுமாறு ஆங்கிலேயர் சூசகமாகக் குறிப்

பிட்டனர். இதன் மூலம் அவரது ராஜ்யத்தின் தெற்கு எல்லை முடிவாக வரையறுக்கப்பட்டு விட்டது. அதே சமயம் இரு சாராரும் தமக்கிடையே பூரணமான கருத்து ஒற்றுமை நிலவுவதாக வெளியுலகத்திற்குக் காட்டிக் கொண்டனர். ஆனல் மறுபுறத்தில் சிந்துவின் அமீருடன் ஆங்கிலேயர் பேச்சுவார்த்தை நடத்தி, 1832-ல் ஓர் உடன்பாடு செய்து கொண்டனர். அதன் பிரகாரம் சிந்து நதியில் கப்பல் போக்குவரத்தை ஒழுங்குபடுத்து வதற்கும் அக்கப்பல்களில் ஏற்றிச் செல்லும் சரக்கு களுக்கு வரி வசூல் செய்து கொள்வதற்கும் ஆங்கிலேயர் உரிமை பெற்றனர். இவ்வொப்பந்தம் 1834-லும் மறுபடி 1839—லும் மாற்றியமைக்கப்பட்டது.

## ஜம்ருத் போர்

காபுலின் மாஜி மன்னர் ஷாஷூஜாவையும், புகழ் பெற்ற கோஹினூர் வைரத்தையும் பற்றிய வரலாறு அடுத்து வரும் பகுதியில் விவரிக்கப்படும். காஷ்மீரில் காவலில் வைக்கப்பட்டிருந்த ஷாஷூஜாவை ரண்ஜீத் சிங் கின் படைத் தலைவர்கள் 1811-ல் லாகூருக்குக் கொண்டு வந்தனர். பின்னல் அவரை ஆங்கிலேயர் லூதியாளு வில் காவலில் வைத்தனர். ஷாஷூஜா தாம் இழந்த அரி யணையைத் திரும்பப் பெறச் செய்த முயற்சிகள் யாவும் பலிக்கவில்லை; எனினும் 1833-ல் அவர் ரண்ஜீத் சிங் குடன் ஒப்பந்தமொன்று செய்துகொண்டார்; அதன்படி ஷாஷூஜாவுக்கு மகாராஜா உதவி புரிந்தால் அதற்குப் பரிசாகச் சிந்துவின் இருபுறமும் அவர் கைப்பற்றியிருந்த பகுதிகளை அவரே வைத்துக்கொள்ளலாம் என்று முடிவா யிற்று. ஆனல் ஷூஜா தமது அரியணையைத் திரும்பக் கைப்பற்ற 1834-ல் செய்த புது முயற்சியும் தோல்வி யுறவே வேறு வழியின்றி அவர் மீண்டும் பஞ்சாபிற்குத் திரும்பி நாடிழந்தவராக வாழலானர்.

ஷாஷூஜாவிற்கும், காபுலை அப்போது ஆண்டு வந்த

தோஸ்து முகம்மதுவிற்கும் இடையே நடந்த இப்போராட்டத்தின் காரணமாக மகாராஜா பெஷாவரைத் தமது நேரடிக் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ளத் தீர்மானித்துத் தமது பேரனை அதன் கவர்னராக நியமித்தார். தோஸ்து முகம்மது இதற்குப் பதில் நடவடிக்கையாக 1835–ல் பெஷாவரைத் தாக்கினர். ஆனல் மகாராஜா படைகொண்டு சென்றவுடன் அவர் காபுலுக்குப் பின் வாங்கினர். ஆப்கானியர் மீண்டும் நுழையாமல் தடுக்க அப்பகுதியில் புதிதாக இரு கோட்டைகளை ரண்ஜீத் சிங் கட்டினர். 1835–ல் தாம் பின்வாங்கி ஓட நேர்ந்த அவமானமும், சீக்கியர்கள் அப்பகுதியில் புதிய கோட்டைகளை நிர்மாணித்துக் கொண்டதும் தோஸ்து முகம்மதுவின் மனத்தை விட்டு அகலவில்லை; எனவே அவர் 1837–ல் ஜம்ருத் என்ற இடத்தை முற்றுகையிட்டு அங்கிருந்த சீக்கியர்களை விரட்டவும் பெஷாவரைத் திரும்பக் கைப்பற்றவும் முயன்றார். ரண்ஜீத் சிங்கின் பிரதிநிதியான ஹரிசிங் நல்வா, உடல் நலமில்லாத நிலையிலும் ஜம்ருத்திலிருந்த சீக்கியக் காவல் படைக்கு உதவியளிப்பதற்காகப் பெஷாவரிலிருந்து சென்றார். துரதிருஷ்டவசமாக ஒரு குண்டு பட்டு அவர் இறந்தார். ஜம்ருத் படைக்கு உதவ மகாராஜாவே நேரில் களத்திற்கு விரைந்தார். ஆனல் அவர் வருவதற்குள் ஆப்கானியர்கள் ஓட்டம் பிடித்தனர்; மறுபடி மாமூல் நிலைமை ஏற்பட்டது.

## முக்கூட்டு உடன்படிக்கை

இந்த நேரத்தில், பாரசீகம் துருக்கிஸ்தான் ஆகியவற்றின் உதவியுடன் சிந்துநதி வரை முன்னேற ரஷ்யா திட்டமிட்டு வந்ததை யறிந்து இந்தியாவிலிருந்து ஆங்கிலேயர் உண்மையாகவே கவலை கொள்ளலாயினர். கிழக்கிந்தியக் கம்பெனியார், தங்கள் நண்பர் ஒருவரைக் காபுல் அரியணையில் அமர்த்துவதன் மூலம் இந்த அபாயத்தைத் தவிர்க்கலாம் என்று எண்ணினர்.

ஷாஷுஜாவே அதற்குச் சரியான நபரெனக் கண்டனர். அவர் பல நிபந்தனைகளை விதித்தார். ரண்ஜீத் சிங்கின் விஸ்தரிப்புக்கு எதிராகத் திட்டவட்டமான உத்தர வாதங்கள் வேண்டும் என்றும் பெஷாவரைத் தமக்கு மீட்டுத் தரவேண்டும் என்றும் அவர் கோரினார். ஆனால் என்னவானாலும் கேந்திர நகரான பெஷாவரைக் கைவிட மகாராஜா தயாராயில்லை. அவர் ஷாஷுஜாவை மரியாதைக்குரிய மன்னராகக் கருதாவிடினும் ஆக்லண்டு பிரபுவின் நிர்ப்பந்தத்தின் பேரில் இத்திட்டத்தை நிறைவேற்றுவதில் ஆங்கிலேயருடன் ஒத்துழைக்க இசைந்தார். ஆங்கிலேயர் இக் காபுல் திட்டத்தை நிறைவேற்றுவதில் உறுதியாக இருந்ததால் தாம் அதில் பங்கு கொள்ளாமலிருப்பது உசிதமல்ல என்பதையும் அவர் புரிந்து கொண்டார். ஆகவே ஆங்கிலேயர், ரண்ஜீத் சிங், ஷாஷுஜா, மூவரும் 1838 ஜூன் 20-ஆம் தேதி ஓர் உடன்படிக்கை செய்துகொண்டனர்.

பிரோஸ்பூரில் பெரும்பாலும் ஆங்கிலேயர்களைக் கொண்ட ஒரு படை திரட்டப்பட்டது. இப்படை பஹவல்பூர், சிந்து, போலன்கணவாய் வழியாகக் காண்ட்ஹாருக்குச் சென்று 1839 ஏப்ரல் முடிவில் அதனைக் கைப்பற்றியது. சீக்கியப் படை பஞ்சாப் வழியாகச் சென்றது.

இதற்கு மேல் இப்படை பெற்ற வெற்றிகளையோ தோல்விகளையோ இங்கு விவரிப்பது அவசியமில்லை. ஆனால், ரண்ஜீத் சிங் ஆங்கிலேயர் காபுலில் மேற்கொண்ட முயற்சிக்குத் துணை செய்தது, அவர் 'பறங்கியர்களின்' அதிகாரம் வளர்ந்து வந்த உண்மையை ஒப்புக் கொண்டதற்கு அடையாளமாகும். மேலும், அவரும் தமது அந்திம காலத்தை நெருங்கிக் கொண்டிருந்தார். வாழ்நாள் பூராவும் போர்களிலும் போகத்திலும் கழித்துக் களைத்த அந்த உடல் 1839 ஜூன் 27-ஆம் தேதி இயற்கை யெய்தியது.

*அத்தியாயம் 5*

## கோஹினூர் வைரம்

விலைமதிப்பற்ற கோஹினூர் வைரம் இந்தியப் பழங் கதைகளிலும், வரலாற்றிலும் புகழ் வாய்ந்ததாகும். அதற்குப் புராணத் தொடர்புள்ளதாகவும் கூறப் பெறு கிறது; அதனைப் பாண்டவ மன்னர்கள் அணிந்திருந்த தாக நம்பப்படுகிறது. முகலாயர் காலத்தில் மயிலாச னத்தை அது அலங்கரித்ததையொட்டி வரலாற்றில் இடம் பெற்றது. நாதிர்ஷா டில்லியைக் கொள்ளையிட்டபோது அவன் கவர்ந்து சென்ற விலை மதிப்பில்லாத பொருட் களுள் கோஹினூர் வைரமும் ஒன்று. பிறகு அது ஆமது ஷா ஆப்தாலியின் கையில் சிக்கியது. 1813-ல் அது மீண்டும் பஞ்சாபில் தோன்றியபோது மாஜி துரானி மன்னரான ஷா ஷூஜாவின் வசமிருந்தது.

அவர் 1809-ல் தமது அரியணையை இழந்த பின்னர் காஷ்மீரில் காவலில் வைக்கப்பட்டிருந்தார். அப்போது அங்கு கவர்னராயிருந்த ஆதா முகம்மதுகான், ஷூஜா வின் கண்களுக்கு அருகே ஈட்டி ஒன்றைப் பிடித்துக் கொண்டு, கண்களைக் குத்திக் குருடாக்கி விடுவதாகப் பயமுறுத்தி அவரிடமிருந்து அவ்வைரத்தைப் பறிக்கப் பலமுறை முயன்றாராம். ஆனால் அவருடைய முயற்சி வெற்றி பெறவில்லை. தன் கணவனைக் கொன்று விடு வார்களோ அல்லது ஊனமாக்கி விடுவார்களோ என்று அஞ்சிய ஷூஜாவின் மனைவி வா∴பா பேகம், ரண்ஜீத் சிங் காஷ்மீர் மீது படையெடுத்துச் சென்ற சமயத்தில், ஷூஜாவை விடுவித்து, தாம் அடைக்கலம் பெற்றிருந்த லாகூரில் கொண்டு வந்து தம்மிடம் சேர்ப்பிக்கும்படி அவரிடம் கேட்டுக் கொண்டார். அவ்வாறு ஷா ஷூஜாவைப் பத்திரமாகச் சீக்கியத் தலைநகரில் தன்னிடம்

கொண்டு வந்து சேர்ப்பிக்கும் பட்சத்தில் மகாராஜா விற்குக் கோஹினூர் வைரத்தைப் பரிசாக அளிப்பதாக வாக்களித்தாள்.

போர் முடிந்து, ஷா ஷுஜா லாகூர் வந்து சேர்ந்த போது பிரமாதமாக வரவேற்கப்பட்டு, அவரது பேகமும் மற்ற ஆப்கானிய அகதிகளும் தங்கியிருந்த அரண் மனைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். இரண்டொரு தினங்களில் ஷாவிற்கு அந்த வைரத்தை ஒப்படைக்கும் படி ஒரு குறிப்பு அனுப்பப்பட்டது; ஆனால் அவரோ அவரது பேகமோ பதிலெதுவும் அளிக்கவில்லை. அவ் வைரத்தை இழக்க அவர்கள் தயங்கியது இயற்கையே. ஆனால் ஷாஷுஜாவின் விடுதலைக்காக ரண்ஜீத் சிங் அனு பவித்த சிரமமும் நஷ்டமும் அதிகமாகும் காஷ்மீர் போரில் நேர்ந்த உயிர்ச் சேதமும் பொருட் சேதமும் மிகுதி. ஆனாலும் மகாராஜாவின் தூதர்கள் பலமுறை நடந்தபோதும் ஒரே பதில்தான் கிடைத்து வந்தது; அவ் வைரம் காண்ட்ஹாரில் ஒரு லேவாதேவிக்காரனிடம் அடகு வைக்கப்பட்டிருந்ததாகப் பேகம் கூறி வந்தாள்; ஷா ஷுஜாவோ தமக்கும் மகாராஜாவிற்கு மிடையே உண்மையான நட்பு வளர்ந்த பிறகு அவ் வைரத்தை அளிப்பதாகக் கூறி வந்தார். ரண்ஜீத் சிங் அவ்வைரத் திற்குப் பதிலாகப் பெருந்தொகையும், கணிசமான ஜா கிரும் கூட அளிக்க முன் வந்தார்; ஆனால் ஆப்கானியர்கள் அசைந்து கொடுக்கவில்லை.

அந்த அகதிகள் இதுவரை விருந்தாளிகளாக நடத்தப் பட்டு வந்ததுபோக இப்போது அவர்களுடைய வீட்டைச் சுற்றிப் பலமான காவல் போடப்பட்டது; அவர்களுக்கு வழங்கி வந்த உணவை நடு நடுவே நிறுத்துவதன் மூலம் சீக்கியர் அவர்களை நெருக்க ஆரம்பித்தனர். அவ்வீட்டி லிருந்த ரண்ஜீத் சிங்கின் ஒற்றர்கள் தெரிவித்த தகவலின் பேரில், ஷுஜாவிற்கு மகாராஜா ரொக்கமாக ஏராள

மான பணம் கொடுத்தார். ஆனாலும் கோஹினூர் வெளியே வரவில்லை. கடைசியில் ரண்ஜீத் சிங்கே ஒரு நாள் நேரில் சென்றார்; அரியணையை இழந்து நின்ற அந்த ஆப்கானியரிடம், அவர் அவ்வைரத்தைக் கொடுத்து விட்டால் தாம் அவருக்கு எந்த அளவிற்கும் உதவி செய்யத் தயாராக இருப்பதை விளக்கினார்; பேரம் முடிவாயிற்று.

விலைமதிப்பில்லாத அவ்வைரக் கல்லை 1813 ஜூன் முதல் தேதி மகாராஜாவிற்கு அளிப்பதாக ஷூஜா ஒப்புக் கொண்டார். குறித்த நாளன்று மகாராஜா ஏராளமான குதிரை வீரருடன் ஷூஜா தங்கியிருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தார். இரு வேந்தரும் ஒருவரையொருவர் நெஞ்சாறத் தழுவிக் கொண்டனர். சிறிது நேரத்திற்குப் பிறகு ஷாஷூஜாவின் பணியாட்களுள் ஒருவன் அந்தப்புரத்திலிருந்து ஒரு சிறு பொட்டலத்தைக் கொண்டு வந்து மகாராஜாவிடம் கொடுத்தான். ரண்ஜீத் சிங் அதனை அவிழ்த்துப் பார்த்தபோது உள்ளே ஒரு வைரம் இருந்தது; அது உண்மையான கோஹினூர் வைரம்தானா என்பதை உறுதி செய்து கொள்வதற்காகத் தம் அருகிலிருந்த உதவியாளரிடம் அவர் கொடுத்தார் அது உண்மையான கோஹினூர் தான் என்று உறுதியானபின், ஷா ஷூஜாவிற்கு நன்றி கூறவோ அவரிடம் முறையாக விடைபெற்றுக் கொள்ளவோ காத்திராமல் ரண்ஜீத் சிங் விரைவாக அந்த அறையிலிருந்து வெளியேறி விட்டாரென்று கூறப்படுகிறது.

பின்னால் மகாராஜா அவ்வைரத்தை நகை வியாபாரிகளிடம் காட்டியபோது அவர்கள் அதன் மதிப்பு அளவிட இயலாதது என்றனர். அதன் பிறகு ரண்ஜீத் சிங்கின் ஆட்கள் ஷா ஷூஜாவும் அவரது குடும்பத்தினரும் தங்கியிருந்த வீட்டிற்குப் போய் அவர்களிடமிருந்த மற்ற நகைகளையும் விலையுயர்ந்த கற்களையும் எடுத்துச் சென்றனர். "அந்த ஆப்கானியக் குடும்பத்

தினர் சோகத்தி லாழ்ந்தனர். ஷா ஷுஜா பல நாட்களுக்கு உணவு உண்ணவும் மறுத்துவிட்டார்.'' இப்பரிதாப நிலையைக் கண்டு காவல் சிறிது தளர்த்தப்பட்டது. அதைப் பயன்படுத்திக் கொண்டு ஷா ஷுஜாவும், பேகமும், ஒருவர் பின் ஒருவராக லாகூரிலிருந்து தப்பிச் சென்று, கடைசியில் லூதியானாவில் ஆங்கிலேயரிடம் உபகாரச் சம்பளம் பெற்றுக்கொண்டு வாழ்ந்தனர்.

ஷுஜா குடும்பத்தினரிடமிருந்து கோஹினூர் வைரத்தைக் கைப்பற்றுவதற்காக ரண்ஜீத் சிங் அவர்களைப் பல இன்னல்களுக்குள்ளாக்கிக் கொடுமைப்படுத்தியது குறித்து அவர் கண்டிக்கப் படுவதுண்டு. ஆனால் வெளிக்குத் தோன்றுவது போல் இது அவ்வளவு எளிய விஷயமல்ல. மகாராஜாவும் ஷா ஷுஜாவும் வாழ்ந்த காலம் வேறு: அக்காலத்திய வாழ்க்கைப் பண்புகளுக்கு ஏற்பவே அவ்விருவரும் நடந்து கொண்டனர். ஆகவே இன்றைய தர்ம நியாயங்களைக் கொண்டு அவர்களை அளவிட முயல்வது பகுத்தறிவுக்குப் பொருந்தாது. மேலும் ஷா ஷுஜாவே எழுதியுள்ள குறிப்பில் மகாராஜாவின் செயலைப் பற்றித் தீவிரமான புகார் எதுவுமில்லை. ஷா ஷுஜாவின் நாட்டை மீட்டுக் கொடுப்பது குறித்து மகாராஜா அவருக்குக் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றாதது சம்பந்தப்பட்டவரை பிந்திய நிகழ்ச்சிகளால் அவர் தமது கொள்கையை மாற்றிக் கொள்ள நேர்ந்திருக்கலாம். ஆனால் 1838-ல் ஷா ஷுஜாவைக் காபுல் அரியணையில் அமர்த்த ஆங்கிலேயர் மேற்கொண்ட முயற்சியில் அவரும் தமக்குரிய பங்கை ஆற்றத் தவறவில்லை.

ரண்ஜீத் சிங் காலமானதற்குப் பிறகு பத்தாண்டுகள் வரை கோஹினூர் வைரம் லாகூரில் இருந்தது. பின்னர் அதனை ஆங்கிலேயர் எடுத்துக் கொண்டனர்.

பழங் கதைகளிலும் வரலாற்றிலும் பலவிடங்களில்

அவ்வைரம் குறிப்பிடப்படுகிறதெனினும் விளக்கமான வருணனை காணப்படுவதில்லை. அவ்விலை மதிப்பில்லாத வைரத்தை ஒரு முறை கண்ணில் காட்டுமாறு ரண்ஜீத் சிங்கிடம் கேட்டு அதனைப் பார்த்த அயல் நாட்டார் பலரிலும் ஜியார்ஜ் ஆஸ்போர்ன் என்பவர் மட்டுமே தாம் பார்த்ததை ஓரளவு விவரமாக வருணித்துள்ளார். அவர் குறிப்பிடுவதாவது :

"கோஹினூர், மிக அற்புதமான வைரம்; அதன் நீளம் சுமார் ஒன்றரை அங்குலம்; அகலம் ஓர் அங்குலத்திற்குச் சற்று அதிகமாக இருக்கலாம் : அது பதித்திருந்த நிலையில் சுமார் அரை அங்குலம் வெளியே துருத்திக் கொண்டிருக்கிறது. அது முட்டை வடிவத்தில் உள்ளது ; அதில் பாதி அளவு உள்ள இரண்டு அழகு மிக்க வைரங்களுக்கு நடுவே அது ஒரு கங்கணத்தில் பதிக்கபட்டிருக்கிறது. அதன் மதிப்பு 30 லட்சம் பவுன் ; அது கண்ணைப் பறிக்கும் ஒளியுடன் பிரகாசிக்கிறது ; அதில் எவ்விதமான குறையும் காணப்படவில்லை."

ஆனால் மகாராஜாவிடமிருந்த முத்துக்கள் இவ்வைரத்தை விடவும் அழகு மிக்கனவாக விளங்கின என்கிறார் இந்த ஆங்கில அதிகாரி. அவை சுமார் 300 இருக்கும்; எல்லாம் ஒரு மாலையாகக் கோர்க்கப்பட்டிருந்தன. ஒவ்வொன்றும் 'ஒரு கோலிக்காய் பருமன் இருந்தது—எல்லாம் பொறுக்கி யெடுத்த உருண்டை முத்துக்கள் ; அத்தனையும் வடிவத்திலும் வண்ணத்திலும் பூரணமானவை.

*அத்தியாயம் 6*

# குதிரைகளும் பீரங்கியும்

*ரண்ஜீத் சிங் குதிரைகளிடத்திலும், பீரங்கிகளிடத்திலும் தான் பெருத்த ஆசை கொண்டவர் என்று கூறுவது முற்றிலும் பொருத்தமானது. "மகாராஜா பீரங்கியின் மீது அளவுகடந்த ஆசையும், அதன் கனத்தைப் பற்றித் தெளிவான அறிவும் கொண்டவர்; அதனால் ஒரு பீரங்கியைப் பெறக் கூடிய சந்தர்ப்பத்தையும் அவர் நழுவ விட்டதேயில்லை; ஒரு கோட்டைக்குள் ஒரு பீரங்கி இருப்பதாக அவருக்குத் தெரிய வந்தால் அதனை அடைவதற்காகக் கோட்டையையே கைப்பற்றும் வரையிலோ அல்லது கோட்டையைக் காப்பாற்றிக் கொள்ள அப் பீரங்கி அவரிடம் சேர்ப்பிக்கப்படும் வரையிலோ அவர் உறங்க மாட்டார்." — இவ்வாறு மெட்கா∴ப் கூறியுள்ளார். 'ஸாம்ஸாமா' என்னும் பீரங்கியைக் கைப்பற்ற அவர் கையாண்ட உபாயங்களைப் பற்றி முன்பே குறிப்பிட்டுள்ளோம். அவர், லாகூரில் இருந்த தளவாட வார்ப்புச்சாலையில் தமக்கான பீரங்கிகளை வார்ப்பதற்கென விசேஷ அதிகாரிகள் சிலரை நியமித்திருந்தார்; அக்காலக் குறிப்புகளிலிருந்து, ரண்ஜீத்சிங்கின் பீரங்கிப் படையில் சுமார் 200 பீரங்கிகள் இருந்ததாகத் தெரிய வருகிறது. உள்நாட்டிலேயே தயாரிக்கப்பெற்ற இப் பீரங்கிகள், ஆங்கிலக் கம்பெனி தயாரித்த பீரங்கிகளைப் போல் சிறந்தவையாக இருந்தன என்று பார்வையாளர்கள் கூறுகின்றனர்.*

*பீரங்கிகள் மீதிருந்த ஆசையைவிட மகாராஜாவிற்குக் குதிரைகளிடத்தில் இருந்த ஆசை அதிகமாகும். 'லைலி' என்னும் அருமையான குதிரையைப் பெறுவதற்காக அளவற்ற ஆட்களையும் பொருளையும் இழப்பதையும்*

அவர் பொருட்படுத்தவில்லை. மகாராஜாவின் அவைக்கு வந்த அயல் நாட்டினர் எவரும் அவரிடமிருந்த எண்ணிறந்த விசேஷக் குதிரைகளைக் கண்டு வியக்காமல் இருந்ததில்லை. 1835–ல் பஞ்சாபிற்கு வந்த சார்ல்ஸீ வான் ஹ்யூகல் என்ற ஆஸ்திரியர், இக்குதிரைகளின் அபூர்வமான அழகு விழிக்கு விருந்தாக இருந்ததெனக் குறிப்பிடுகிறார். அதோடு, "கடிவாளம், சேணம், மற்றும் குதிரைகளுக்குப் பூணப்படும் அலங்காரப் பொருட்கள் யாவும்........மிக விலையுயர்ந்தவையாக இருந்தன." இவ்வுண்மையைக் கவர்னர் ஜெனரல் ஆக்லண்டு பிரபுவின் சகோதரியான குமாரி எமிலி ஈடனும் குறிப்பிட்டுள்ளார். ரண்ஜீத் சிங் "ஒரு மாநிலத்தில் பெயர் பெற்ற உயர்ந்த சாதிக் குதிரைகள் இருந்தால் அவற்றைத் தம்மிடம் ஒப்படைக்கச் செய்வதற்காக அம்மாநிலத்தின் மீதே போர் தொடுக்கவும் தயங்கமாட்டார்," என்பது அவருடைய கருத்து.

ஆண்டுதோறும் மகாராஜா புதிய குதிரைகள் வாங்குவதற்குப் பெருந்தொகை செலவிட்டு வந்தார். லாயங்களிலோ அல்லது காவல் நிலையங்களிலோ அவரது சொந்த உபயோகத்திற்காக மட்டும் சுமார் 1,000 குதிரைகள் வரை வைக்கப்பட்டிருந்தனவாம். அவற்றுள் பெரும்பாலானவை உயர்ந்த அராபிய சாதிக் குதிரைகள். 'லைலி'யை அவர் கைப்பற்றிய வரலாறு சுவாரசியமானது.

ஆப்கானிஸ்தானத்திலும் பஞ்சாபிலும் இக்குதிரையின் அழகு பெயர் பெற்றிருந்தது. எனவே 1826–ல் மகாராஜா அதன் சொந்தக்காரரான பெஷாவர் கவர்னர் 'யார் முகம்மதுவைக் கானி'டம் அக்குதிரையைத் தமக்குக் கொடுத்துவிடும்படி கேட்டார். கான் மறுக்கவே, ரண்ஜீத்சிங் அக்குதிரையைக் கைப்பற்றி வருமாறு தமது படைத்தலைவர் ஒருவரை அனுப்பினார். அத்தலைவர்

எதிரிப் படையைத் தோற்கடித்துவிட்டுப் பெஷாவரை அடைந்தபோது, 'லைலி' இறந்துவிட்டதாக அவரிடம் தெரிவித்தனர். மறுபடியும் அப்பெண் குதிரையை வாங்கி வர வேண்டும் அல்லது கைப்பற்றி வரவேண்டும்; அதற்கு இணங்க மறுத்தால் யார் முகம்மதுவைக் கவர்னர் பதவியிலிருந்து நீக்கிவிட வேண்டும் என்ற உத்தரவுடன் புதிய படைகள் அனுப்பப்பட்டன. இச் சமயம் கான் மலைப்பகுதிக்குத் தப்பியோடி விட்டார். மற்றொரு படைத்தலைவர் மீண்டும் இதே போன்ற உத்தரவுகளுடன் அனுப்பப்பட்டார். யார் முகம்மது ஒரு சண்டையில் கொல்லப்பட்டபின் அவரது சகோதரர் சுல்தான் முகம்மது, ரண்ஜீத் சிங்கின் நோக்கத்தை முறியடிக்கப் பழைய தந்திரங்களைக் கையாண்டார். முடிவில் சுல்தான் கைது செய்யப்பட்டார்; லைலியைக் கொடுக்காத வரை அவர் கைதியாகவே இருக்க நேரிடும் என்று எச்சரிக்கப்பட்டார். அப்போது தான் அக் குதிரையைக் கொடுத்தனர்; அது லாகூருக்கு வந்து சேர்ந்தவுடன் மகாராஜா மிகுந்த மகிழ்ச்சியடைந்தார்.

பட்டாணியர் கொடுத்தது உண்மையான 'லைலி' தானு என்பதில் சிலருக்குச் சந்தேகம் உள்ளது. முன்னர் யார் முகம்மது, ரண்ஜீத் சிங்கின் ஆட்களிடம் வேறு குதிரை களைக் கொடுத்து ஏமாற்றிவிடச் சூழ்ச்சி செய்தார். ரண்ஜீத் சிங் 1831-ல் பெண்டிங்க் பிரபுவை ரூப்பாரில் சந்தித்தபோது அவரிடம் 'லைலி' என்ற பெயரில் காட்டப் பெற்ற குதிரை தவிட்டு நிறத்தில் இருந்தது. ஆனல் ஹ்யூகல் பிரபு லாகூர் வந்திருந்தபோது ரண்ஜீத் சிங் கிடம் லைலியைத் தமக்குக் காட்டுமாறு தனியாகக் கேட்டுக்கொண்டு அதனைப் பார்வையிட்டபோது அது கருஞ்சாம்பர் நிறத்தில் இருந்ததாம். 'லைலி'யைக் கைப் பற்றுவதற்காக 60 லட்சம் ரூபாய் செலவாயிற்று என்றும் 12,000 பேர் இறந்தனர் என்றும் அவரிடம் ரண்ஜீத் சிங் கூறினர். "அக் குதிரையின் மீது கரும்

புள்ளிகள் காணப்பட்டன; அது 16 கைப்பிடி உயரம் இருந்தது; முழங்காலுக்குக் கீழே பொன் வளையங்களுடனும் சேணத்துடனும் மிக ஆடம்பரமாக அலங்கரிக்கப் பட்டிருந்தது''—என்று ஹ்யூகலின் குறிப்பில் காணப்படுகிறது.

ரண்ஜீத் சிங்கின் முறையான குதிரைப் படையிலும், உதிரிக் குதிரைப்படையிலும் சேர்த்து மொத்தம் 23,000 குதிரை வீரர்கள் இருந்தனர் என்பதைக் கொண்டே மகாராஜாவின் சைனியத்தில் இருந்த மொத்தக் குதிரைகளின் எண்ணிக்கையை அறிந்துகொள்ளலாம். அரசரும் அவரைச் சேர்ந்த பிரபுக்களும் தங்கள் சொந்த உபயோகத்திற்காக வைத்திருந்த குதிரைகள் இக்கணக்கில் சேர்க்கப்படவில்லை. பெருவாரியான குதிரைகள் சிறியவையாகவும் வலிமை யற்றவையாகவும் இருந்திருக்கலாம்; அவற்றின் சாதனங்கள் எளிமையானவையாக இருந்திருக்கலாம். ஆனால் இதைக் கொண்டு குதிரைகளிடத்தில் மகாராஜாவுக்கு இருந்த தீராத ஆசையைக் குறைத்து மதிப்பிட முடியாது. உலகிலேயே மிக உயர்ந்த குதிரைகள் அவருடைய லாயங்களில் இருந்தன.

*அத்தியாயம் 7*

# ரண்ஜீத் சிங்கின் அவைக்களம்

அக்பரையும் சிவாஜியையும் போலவே ரண்ஜீத் சிங்கும் முறையாகக் கல்வி பயின்றவர் அல்லர். ஆனாலும் அவர் விவேகமும், சகிப்புத் தன்மையும் கொண்டவராக விளங்கினார். அவரது சமயத்தினரில் பெரும்பாலோரைப் போலவே அவரும் பிராமணர்கள், முஸ்லிம்கள், அயல் நாட்டவர்கள் ஆகியோரை வெறுத்திருக்கலாம்; ஆனால் அதற்கு மாறாக அவர் அப்பிரிவுகளைச் சேர்ந்த பலருக்கு உயர்ந்த பதவிகளை அளித்தார். உண்மையில் அவரது அவைக்களத்தில் பல சமயத்தவரும் நாட்டவரும் இடம் பெற்றிருந்தனர். மதம் பற்றிய சம்சயவாதம் காரணமாக எழுந்த ஆழ்ந்த சிந்தனையின் விளைவாக இந்த சமயச் சார்பற்ற கொள்கை தோன்றுதிருந்திருக்கலாம். எனினும் இக் கொள்கை காரணமாக அவருடைய நிர்வாகம் செம்மை பெற்றது. அவர் இந்து முஸ்லிம் அமைச்சர்களை நியமித்துக் கொண்டதைப் பார்த்து வேறு பல சீக்கியத் தலைவர்களும் அவர் வழியைப் பின்பற்றினர். அவரால் உயர்ந்த பதவிகளுக்கு உயர்த்தப்பட்டு அவரது மதிப்பிற்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமாக விளங்கிய சில பிரபுக்களைப் பற்றிக் கீழே காணலாம்.

## பக்கிரி அஸிஸுதீன்

ரண்ஜீத் சிங்கின் அவைக்களத்தில் மிகப் பிரபலமாக விளங்கியவர், அவரது வெளி விவகார அமைச்சரான பக்கிரி அஸிஸுதீன். 1799-ல் ரண்ஜீத் சிங் லாகூரைப் பிடித்தபோது அவரது கண் உபத்திரவத்திற்கு ஒரு பஞ்சாபி மருத்துவர் வைத்தியம் செய்தார். அம்மருத்துவர் தமது பயிற்சியாளருள் ஒருவரான அஸிஸுதீனை

(அவரது மகன் இவர் என்று சிலர் கூறுகின்றனர்.) மகாராஜாவிற்குப் பணிவிடை செய்ய அமர்த்தியிருந்தார்; அவ்விளைஞரின் கிழக்கிந்தியப் பாணிப் பேச்சு நயமும், நற்பண்பும் மகாராஜாவை வெகுவாகக் கவர்ந்து விட்டன. விரைவிலேயே அவர் ஆஸ்தான வைத்தியராக நியமிக்கப்பட்டார்; மகாராஜா அவருக்குப் பல கிராமங்களை ஜாகிராக வழங்கினார். நாளடைவில் அஸிஸுதீன், ரண்ஜித் சிங்கின் அந்தரங்க ஆலோசகராகி வெளி விவகார அமைச்சருமானார். பின்னர், மகாராஜா, அஸிஸுதீனது அறிவுரையில் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தார்; அதனால் எப்போதும் பெரிய காரியம் எதையும் தொடங்கு முன்பும், வாரிசுப் பிரச்சினை போன்ற அதி முக்கியமான அரசாங்க விவகாரங்களிலும் அவரைக் கலந்தாலோசித்தார். முக்கியமாக, ஆங்கிலேயர் சம்பந்தமாக அவருடைய ஆலோசனைப்படியே ரண்ஜீத் சிங் தம் கொள்கையை வகுத்துக் கொண்டார். மகாராஜா போர் செய்வதற்காகத் தலைநகரை விட்டுச் சென்ற போதெல்லாம், அநேகமாக லாகூரில் நிர்வாகப் பொறுப்பை அந்தப் 'பக்கிரியிடமே' ஒப்படைத்துவிட்டுச் செல்வார். அஸிஸுதீன் பேச்சு வார்த்தைகள் நடத்துவதில் திறமை வாய்ந்தவராதலால், முக்கியமான ராஜதந்திர விவகாரங்களில் ரண்ஜீத் சிங்கின் விசேஷதூதராக அவர் அனுப்பப்பட்டு வந்தார்; அவரும் எப்போதும் வெற்றிகரமாகக் காரியத்தை முடித்து வருவார். அவர் ஒரு போர்வீரரல்லராயினும் சில சமயங்களில் அவரிடம் இராணுவப் பொறுப்புகளும் ஒப்படைக்கப்பட்டன.

மகாராஜாவின் நம்பிக்கைக்குரிய அஸிஸுதீன் ஸூஃபி சமயப் பிரிவைச் சேர்ந்தவராதலால் சகிப்புத் தன்மை மிக்கவராகவும், சமய வெறியற்றவராகவும் விளங்கினார். ஒரு சமயம் அவரிடம் ரண்ஜீத் சிங் இந்து மதம், இஸ்லாம் ஆகிய இரண்டில் எதனிடத்தில் அவர் அதிகப் பற்றுடையவர் என வினவினார்; அதற்கு அவ்வமைச்சர்,

"பெருக்கெடுத்தோடும் பெரிய ஆற்றில் மிதக்கும் மனிதன் நான்; என் கண்கள் நிலத்தைத் தேடுகின்றன; இரண்டு கரைகளுக்கும் இடையே வித்தியாசம் எனக்குப் புலப்படவில்லை," என்று மிகச் சாதுரியமாகப் பதிலளித்தார். ரண்ஜீத் சிங்கின் சமிக்ஞைகளைச் சரியாகப் புரிந்துகொள்ளக் கூடிய இரண்டே பிரதானிகளுள் அவர் ஒருவர்; மற்றவர் பையா ராம் சிங்.

அஸிஸுத்தீன் பேச்சிலும் எழுத்திலும் ஆற்றல் வாய்ந்தவராக விளங்கினார். அவர் தயாரித்த அரசாங்கக் குறிப்புகள் கண்ணியமும் அழகும் நிறைந்தவை. பேரறிஞரான அவர் கல்விப் புரவலராகவும் விளங்கினார்—மாணவர்களுக்குப் பாரசீக மொழியையும், அராபிய மொழியையும் கற்றுத் தருவதற்காகத் தம் சொந்தச் செலவில் அவர் ஒரு கல்லூரி நடத்தி வந்தார். அவர் ஒரு கவிஞருமாவார்; அவர் தமது சூஃபி சமயக் கருத்துக்களை எளிய, அழகிய பாரசீகக் கவிகளில் வடித்துள்ளார். அஸிஸுத்தீன் தம்மை ஒரு 'பக்கிரி' என்று அழைத்துக்கொண்டு பக்கிரி போலவே உடையணிந்து வந்தார்; அவருடைய போட்டியாளர்கள், பகைவர்கள் ஆகியோரிடமிருந்து இதுவே கவசம் போல அவரைக் காத்தது போலும். மகாராஜாவே அவரது குடும்பத்தினருக்குத் தலைமுறை தலைமுறையாய் வழங்கிவரத்தக்க முதற் பெயராகப் 'பக்கிரி' என்ற பட்டத்தை அவருக்குச் சூட்டியதாக அவரது சந்ததியினர் கூறுகின்றனர். அப்பட்டத்துடன் இரண்டு மஞ்சள் நிற சால்வைகளும் அவருக்குப் பரிசளிக்கப் பட்டன.

அஸிஸுத்தீன் திறமையும் நேர்மையும் வாய்ந்தவர் என்று லெப்பல் கிரிஃபின் கூறுகிறார். அச்சூஃபி சமயத்தவர் மகாராஜாவிடம் விசுவாசமுள்ளவராகவும் விளங்கினார். அவர் ரண்ஜீத் சிங்கை நன்கு அறிந்திருந்தார்; மகாராஜாவின் ஜாடைகளையும் சொற்களையும் முக்கியமாக,

பக்கவாதத்தால் அவரது நாக்கு பாதிக்கப்பட்ட பின்னர்—சரியாகப் புரிந்து கொண்டார். ரண்ஜீத் சிங் நோய் வாய்ப்பட்டிருந்த காலத்தில் அவர் எப்போதும் அருகிலேயே இருந்தார். ''ரண்ஜீத் சிங் அவருடைய தந்தையாக இருந்திருந்தால் கூட அவருக்கு இதைவிட அதிகமாக அவர் சேவை செய்திருக்க மாட்டார்,'' என்று மக் கிரேகர் என்பவர் கூறியுள்ளார். முதல் சீக்கியப் போரில் ஆங்கிலேயர் வெற்றி பெறுவதற்குச் சற்று முன்பாக 1845—டிசம்பரில் அஸிஸுத்தீன் காலமானார்.

## நூருத்தீனும் இமாமுத்தீனும்

பக்கிரி அஸிஸுத்தீன் தமது இளைய சகோதரர்களுள் நூர், இமாம் என்ற இருவருக்கும் ரண்ஜீத் சிங்கினிடம் உத்தியோகம் வாங்கிக் கொடுத்தார்; காலப் போக்கில் அவ்விருவரும் மகாராஜாவின் அவைக் களத்தில் முக்கிய உறுப்பினர்களாயினர். குறிப்பாக, நேர்மையும் பக்தியும் வாய்ந்த நூருத்தீனுக்கு அதிக மரியாதை கிடைத்து வந்தது. அவர் ஒரு சமயத்தில் தலைமை மருத்துவ அதிகாரியாக இருந்தார்; பின்னர், மகாராஜா தலீப் சிங் உரிய வயதை அடையும் வரை நிர்வாகப் பொறுப்பை நடத்திவந்த மேற்பார்வையாளர் குழுவில் ஓர் உறுப்பினராக இருந்தார். அதற்கு முன்னர் அவர் பொது மராமத்து (அரண்மனைகள், பூந்தோட்டங்கள்), போர்த் தளவாட உற்பத்தி ஆலை, பண்ட விநியோக இலாகா ஆகியவற்றின் பொறுப்பை வகித்திருந்தார். மேலும் அவர் பொக்கிஷப் பொறுப்பாளர்கள் மூவருள் ஒருவராகவும் இருந்தார். அவர் 'ஹக்கீம்' நூருதீன் என்றும் 'காலிபா' நூருதீன் என்றும் அழைக்கப்பெற்று வந்தார். மகாராஜாவின் நீதி போதகராக நூருதீன் இருந்தார் என்று அவருடைய கொள்ளுப் பேரன் வஹீதுதீன் குறிப்பிட்டிருக்கிறார். இமாமுதீன் அமிர்தசரஸின் எல்லைப் புறத்திலிருந்த கோவிந்த்கர் கோட்டையின் கவர்னராக

இருந்தார். இந்த முஸ்லிம்கள் விரும்பியிருந்தால், அவர்களுக்கிருந்த எல்லையில்லாத அதிகாரத்தைப் பயன்படுத்திக் கொண்டு தங்கள் சொந்த நலன்களைப் பெருக்கிக் கொள்வதற்காக ஒரு கட்சியையோ பிரிவையோ இலகுவாக அமைத்துக் கொண்டிருக்க முடியும். ஆனால் அவர்களோ ரண்ஜீத் சிங் தங்களிடம் வைத்திருந்த நம்பிக்கையை ஒருபோதும் துஷ்பிரயோகம் செய்யவோ அல்லது அவருக்கு நம்பிக்கைத் துரோகம் புரியவோ முயலாமல், அவரது ஆட்சிக் காலம் முழுவதும் அவரிடம் விசுவாசமுள்ளவர்களாகவே இருந்தனர்.

## ராஜா தீனநாத்

கணக்கராக வேலை பார்த்து வந்த தமது சிறிய தந்தையான கங்கா ராமுக்கு உதவியாளராகக் காஷ்மீரியான தீனநாத்தை 1815 வாக்கில் ரண்ஜீத் சிங் நியமித்தார். கங்காராம் காலமானவுடன், தீனநாத் ராஜ முத்திரையின் காப்பாளரானார். பவானிதாஸ் காலமானபின்னர் நிதி இலாகாவின் தலைமைப் பொறுப்பு அவரிடம் வந்தது. தீனநாத் பல மாறுதல்களுக்கிடையேயும் பிழைத்திருந்ததோடு, நாளுக்கு நாள் அவரது செல்வமும் அதிகாரமும் தொடர்ந்து வளர்ந்து வந்ததால், ஐரோப்பிய ராஜதந்திரி டாலிராண்ட்டுடன் அவர் ஒப்பிட்டுப் பேசப்படுகிறார். அவர் புத்திச் சாதுரியமும் தீர்க்க தரிசனமும் மிக்கவர். "தீனநாத் நாட்டுப் பற்று மிக்கவர்; ஆனால் அவரைப் பொறுத்தவரை சுயநலத்திற்கு அடுத்தபடிதான் நாட்டு நலன்," என்பது லெப்பல் கிரி.ஃபினின் கருத்து. ஆங்கிலேயரிடம் தீனநாத் கொண்டிருந்த வெறுப்பே இதுபோன்ற தவறான கருத்திற்குக் காரணமாக இருக்கக் கூடும். அது எவ்வாறாயினும், தீனநாத் அஞ்சா நெஞ்சினர். "அவர் தம் நாட்டைப் பற்றி நன்கு அறிந்தவர்; தளராமல் உழைக்க வல்லவர்... அவர் உலக அறிவு நிறைந்தவர்; பல கலைகளில் வல்லுனர்;

மரியாதை தெரிந்தவர்; தயை நிறைந்தவர்; சிறந்த கல்விமான் ........ ஐரோப்பியர்களோடு உரையாடும் போது தமது கருத்துக்களை அசாதாரணத் துணிவோடு பச்சையாக எடுத்துரைப்பவர்.'' 1834-ல் ரண்ஜீத் சிங் அவரை நிதியமைச்சராக்கினார். இல்லாவிட்டாலும் கூட, அவர் மகாராஜாவின் மிக அந்தரங்க ஆலோசகர் களுள் ஒருவராக விளங்கினார். ஆங்கிலேயர்கள் லாகூரைக் கைப்பற்றிக் கொண்ட பிறகும் கூட அவர் பஞ்சாபிற்குத் தொடர்ந்து தொண்டாற்றி வந்தார்; தர்பார் வரவு செலவுக் கணக்குகளில் இருந்த சிக்கல்களைத் தீர்ப்பதில் அவர் பெரிதும் உதவினார். ரண்ஜீத் சிங் அவருக்குத் திவான் பதவியையும் பின்னர் ராஜா என்ற அந்தஸ்தையும் அளித்தார். மகாராஜா விற்குப் பெருவாரியான நிதி ஒழுங்காகக் கிடைத்து வருவதற்கு ஏற்ற வரித் திட்டத்தை அமைத்துக் கொடுத் தவர் அவரே.

## ஜமதார் குஷ்ஹால் சிங்

ரண்ஜீத் சிங்கின் குடும்பக் காரியஸ்தராக இருந்த இவர் மீரட்டைச் சேர்ந்த பிராமணராவார். அவர் 17 வயதில் லாகூருக்கு வந்தபோது, முதலில் ஒரு குற்றே வலாளராக வேலையில் சேர்ந்து, பிறகு சாதாரண சிப்பாயாகி மாதம் ஐந்து ரூபாய் பெற்று வந்தார். மகாராஜாவின் குடும்பக் காரியஸ்தர்களின் உதவியால் அவர் ரண்ஜீத் சிங்கின் மெய்க்காப்பாளர்களுள் ஒருவ ரானார். அவரது கண்ணுக்கினிய தோற்றமும், இராணுவ மிடுக்கும், துடிப்பான குணமும் விரைவிலேயே மகா ராஜாவின் கவனத்தை ஈர்த்தன. ஒரு நாளிரவு ரண்ஜீத் சிங் மாறுவேடத்தில் வெளியே சென்றுவிட்டுத் திரும்பி வரும்போது அவரைக் குஷ்ஹால் சந்த் காவல் மனையில் தடுத்து நிறுத்தியதாகவும், அவரது கடமையுணர்ச்சியை கண்ட மகாராஜா அவரைத் தம் அந்தரங்கப் பணியாள

ராக நியமித்ததாகவும் கூறப்படுகிறது. விரைவிலேயே அவர் ஜமதாராராகவும் உயர்த்தப்பட்டார்; பின், அரண்மனைக் காவலர்களின் 'தியோரிதாராகவும்' பதவி உயர்வு பெற்ருர். பிந்திய பதவி மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும்; ஏனெனில் அவர் மூலம்தான் எவரும் மகாராஜாவைத் தனியாகப் பேட்டி காண இயலும். உண்மையில் குஷ்ஹால் சந்தே அரச விழாக்களுக்குப் பொறுப்பாளராகவும், ஊர்வலங்களை ஒழுங்குபடுத்துபவராகவும், தர்பாரின் மேற்பார்வையாளராகவும் விளங்கினர். 'தியோரிதார்' பதவியின் மூலம் அவருக்குச் செல்வாக்கும் செல்வமும் சேர்ந்தன. சில ஆண்டுகளுக்குப் பின்னர், அவர் 'பாஹுல்' (சிக்கிய மதத்திற்கு மாறும்போது பருகுவதற்கு வழங்கப்படும் புனித தீர்த்தம்) எடுத்துக்கொண்டு குஷ்ஹால் சிங் என்று பெயரை மாற்றிக் கொண்டார். அதன் பிறகு அவரது செல்வாக்கு மேலும் உயர்ந்தது; இராணுவப் பணிகளும் அவரிடம் ஒப்படைக்கப்பட்டன. அவர் 1832-ல் காஷ்மீர் கவர்னராக்கப்பட்டபோது மக்களைக் கொடுமைப்படுத்தியதால் அவரிடம் மகாராஜாவிற்குக் கோபம் உண்டாயிற்று. அதோடு அவர் நிதானமின்றிப் பேச ஆரம்பித்தார். நரம்புத் தளர்ச்சியின் காரணமாக, அவர் முன் கோபியாகி விடவே தர்பாரில் மரியாதையின்றி நடந்து கொண்டார். அதன் விளைவாக, அவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டார்; தியான் சிங் டோக்ரா அவருடைய ஸ்தானத்தில் அமர்த்தப்பட்டார். குஷ்ஹால் சிங்கின் சகோதரர் ஒருவரும் மருமகன் ஒருவரும் (பையா ராம் சிங்கும், தேஜ்சிங்கும்) சீக்கியப் படையில் தளபதிகளாகப் பதவி வகித்தனர்.

## ஜம்மு சகோதரர்கள்

குஷ்ஹால் சிங்கின் வீழ்ச்சியின் விளைவாக காரியஸ்தர் பதவி தியான் சிங் கைக்கு வந்ததைத் தொடர்ந்து, மகா

ராஜாவின் அவைக்களத்தில் டோக்ரா குடும்பத்தினரின் செல்வாக்கு உயரலாயிற்று. ஏனெனில் புதிய தியோரி தார் விரைவிலேயே குலாப் சிங், சுசேத் சிங் என்ற தமது இரு சகோதரர்களையும் அரண்மனைக்கு வரவழைத்துக் கொண்டார். தியான் சிங் பணிவும், கவர்ச்சியும் மிக்கவர். மூத்தவரான குலாப் சிங் நளினமாகப் பேச வல்லவர்; இளையவரான சுசேத் சிங் பணிவும், இனிய தோற்றமுமுடையவராக இருந்தார். இம்மூவரும் ஜொரா வர் சிங்கின் பேரர்களாவர். சீக்கிரமே குலாப் சிங் ஒரு குதிரைப் படைக்குத் தளபதியானார். சகோதரர்கள் கைதேர்ந்த அரசப் பிரதானிகளாக இருந்ததுடன், கூடித் திட்டமிட்டுச் செயலாற்றி வந்ததால் வெகு வேக மாக முன்னேறினர். கூடிய விரைவிலேயே ஒவ்வொரு வரும் ராஜா அந்தஸ்த்தைப் பெற்றனர்—ஜம்முவிற்குக் குலாப்சிங்; பீம்பர் பகுதிக்குத் தியான் சிங்; ராம் நகருக்குச் சுசேத் சிங் ராஜாக்களாயினர்.

குலாப் சிங் அநேகமாக ஜம்முவிலேயே தங்கியிருக்க மற்ற இருவரும் தங்கள் பொது நோக்கத்தின் வெற்றிக்கு லாகூரில் பாடுபட்டு வந்தனர். அவர்களுள் தியான் சிங் அதி வேகமாக முன்னேறினார். அவர் அரச குடும்ப காரியஸ்தர் பதவியிலிருந்து, சீக்கிரமே முதலமைச்சர் பதவிக்கு உயர்த்தப்பட்டதுடன், ராஜா—இ—ராஜ்கன் (அரசர்க்கு அரசன்) என்ற விருதும் அவருக்கு அளிக்கப் பட்டது. அவர் மகாராஜாவோடு தமக்குள்ள "விவகாரங் களைச் சுலபமாகக் கவனித்து வரத்" தமது மாளிகை யில் ஒரு சிறிய தர்பாரே நடத்தி வந்ததாகக் கூறப்படு கிறது. அவருடைய மிடுக்கான தோற்றமும் நளினமான சுபாவமும், நற்பண்புகளும் தம்மைப் பெரிதும் கவர்ந்த தாக ஆஸ்போர்ன் குறிப்பிட்டிருக்கிறார். தியான் சிங், மகாராஜாவின் பெரு நம்பிக்கைக்குப் பாத்திரராகவும், தமது அறிவாலும் புத்திக் கூர்மையாலும் சீக்கிய மக்க

ளிடையே மிகுந்த செல்வாக்குள்ளவராகவும் விளங்கிய தாக ஆஸ்போர்ன் கூறுகிறர். தியான் சிங் பெரிய செல்வந்தராக இருந்தார். அவர் தமது ஜாகிரைக் "கருணையோடு நீதி தவருமல்" ஆட்சி புரிந்து வந்ததாகக் கூறப் படுகிறது. அரசாபிமானம் பெற்ற அதிகாரி ஒருவரது அதிகாரத்தையும் செல்வாக்கையும் கண்டு பொருமைப் படுவதைவிட அவரது திறமைகளையும் நற்பண்புகளையும் எல்லோரும் போற்றிப் பாராட்டினர் என்ருல் அதற்கு ஒரே ஒரு எடுத்துக்காட்டு தியான் சிங்தான் என்று ஆங்கிலேய ஆஸ்போர்ன் கண்டார். ஆனல் கனவானகவும் அடக்கம் வாய்ந்தவராகவும் இருந்த ராஜா தியான் சிங்குக்கு ஐரோப்பியரை, குறிப்பாக ஆங்கிலேயரைப் பிடிக்காது; அவர்களின் விரோதம் கூட இருந்தது என் பதை ஆஸ்போர்ன் கவனிக்கத் தவறவில்லை.

அழகும் வயதுக்கு மீறிய அறிவும் வாய்ந்த தியான் சிங்கின் மகன் ஹீராசிங்கினிடம் மகாராஜா மிகுந்த வாஞ்சை கொண்டிருந்ததும் அதிகார ஏணியில் தியான் சிங் உயர்வதற்கு உதவியது. அனுபவம் முதிர்ந்த தமது பிரதானிகளுக்கு வழங்கியிருந்ததைக் காட்டிலும் அதிக மான சலுகைகளை அச்சிறுவனுக்கு மகாராஜா அளித்திருந்தார். அரசாங்க அதிகாரியான தியான், போர் வீரரான சுசேத், இவ்விருவரின் திறன்களையும் ஓரளவு கலந்து பெற்றிருந்த குலாப் சிங்—ஆகிய இம்மூன்று சகோதரர்களின் கூட்டுறவு ரண்ஜீத் சிங்கின் இறுதி நாட்களில் அசைக்க இயலாத பலம் பொருந்திய காட்சியாக விளங்கிற்று என்று வரலாற்ருசிரியர் ஒருவர் குறிப் பிடுகிறர். பண்பாட்டின் சிறப்பாலும், திறமையாலும் இம் மூவரும் ரண்ஜீத் சிங் ஆட்சியின் கடைசி இருபது ஆண்டுகளில் மிகுந்த அதிகாரம் பெற்றனர். தியான் சிங் கின் மரணத்திற்குப் பின் குலாப் சிங் லாகூர் தர்பாரில் வேறு எவரையும் விடச் செல்வாக்கு மிக்கவரானர்.

பின்னர், அவர் ஆங்கிலேயரிடம் பணியாற்ற அவர்கள் அவருக்கு ஜம்மு-காஷ்மீர் ஆட்சிப் பொறுப்பை அளித்த னர். 1947-ல் முடி துறந்த காஷ்மீர் மகாராஜா ஹரி சிங், குலாப் சிங்கின் மகனை பிரதாப் சிங்கின் தத்துப் புத்திரனவார்.

## திவான் மோக்கம் சந்த்

ரண்ஜீத் சிங் பல பகுதிகளையும் வெல்வதற்குத் திறமை மிகுந்த படைத் தலைவர்கள் பலர் உதவினர். அவர்களுள் மிக முக்கியமானவர்களில் ஒருவர் மோக்கம் சந்த். ஒரு வியாபாரியின் மகனை இவர் 'பங்கி' இனத் தாரிடம் 'முன்ஷியாக' (கணக்கர்) வாழ்க்கையைத் தொடங்கியவர். ரண்ஜீத் சிங் அவரது தகுதியை உடனே கண்டு கொண்டு பல போர்களை நடத்தும் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்தார். ஸட்லஜ் நதியின் இக்கரைப் பகுதியில் நடத்திய படையெடுப்புக்களில் மகாராஜா வெற்றி மேல் வெற்றி பெற்றதற்கும், சியால் கோட்டை வென்றதற்கும், மலை ராஜ்யங்களை வசப்படுத்தியதற்கும், சமவெளிகளில் அவர் பெற்ற பல வெற்றிகளுக்கும், மோக்கம் சந்த்தின் இராணுவத் திறமையே பெரிதும் காரணமாகும். ஷா ஷுஜாவை ரண்ஜீத் சிங்கிடம் ஒப்படைத்தது அவர் புரிந்த பேருதவி யாகும்.

மோக்கம் சந்த் சிறந்த படைத்தலைவராக விளங்கிய தோடு சிறந்த நிர்வாகியாகவும் திகழ்ந்தார். அவர் ஜலந்தர் தோஆப் பகுதியைத் திறமையுடன் ஆட்சி செய்தார். தர்பாருக்குரிய வரிகளை வசூலிப்பதில் அவர் கவனமாக இருந்தாலும், அதற்காக மக்களைத் தண்டிக் கவோ கொடுமைப்படுத்தவோ இல்லை. "மகாராஜா வின் ஆதிக்கத்திற்கு வந்த முக்கியப் பகுதிகளில் அவரது அதிகாரத்தை நிலைநாட்டுவதில் வெற்றி பெற்ற அதிகாரி களுக்குள் மோக்கம் சந்த் முதன்மையானவர்," என்று

வேட் என்பவர் எழுதியிருக்கிறார். 1814-ல் மோக்கம் சந்த், பிலெளர் என்னுமிடத்தில் இறந்தபோது மகாராஜா பெருந் துயரடைந்தார். இப்படைத்தலைவரின் மறைவுக்காக நாடெங்கும் துக்கம் அனுஷ்டிக்கப்பட்டது. அவர் லாகூர் தர்பாருக்கு மூன்று தன்னலமற்ற ஊழியர்களை அளித்திருந்தார்—ஒருவர் அவரது மகன் மோதிராம்; மற்றவர்கள் அவரது பேரர்களான கிர்பா ராமும், ராம் தயாளும்; பேரர்கள் இருவரும் உயர்ந்த இராணுவப் பதவிகளை வகித்தனர்.

பாரபட்சமற்ற பார்வையாளர்களின் கருத்தின்படி திவான் மோக்கம் சந்தே ரண்ஜீத் சிங்கின் படைத் தலைவர்களுள் மிகச் சிறந்தவர் எனலாம். 1806-லிருந்து 1814-வரை அவரே நடைமுறையில் சீக்கியப்படையின் பிரதம சேனாதிபதியாக விளங்கியதோடு, அநேகமாக மகாராஜாவின் ஒவ்வொரு வெற்றியிலும் பங்கு பெற்றார். ராம் தயாளும் திறமை மிக்க படைத்தலைவராக விளங்கினார்; ஆனால் அவர் தமது பாட்டனார் மறைந்த நான்கே ஆண்டுகளில் காலமாகி விட்டார்.

### மிஸ்ரா திவான் சந்த்

மோக்கம் சந்தைப் போலவே மிஸ்ரா திவான் சந்த் என்ற பிராமணரும் இராணுவ பரம்பரையைச் சேர்ந்தவரல்லர், எனினும் அவர் ஒரு சிறந்த தளபதியாக உருவாயினார். (ரண்ஜீத் சிங்கால் கண்டெடுக்கப்பட்ட) மிஸ்ரா திவான் சந்த் அவருக்கு விசுவாசத்துடன் பணிபுரிந்தார். 1814 முதல் 1825 வரை, பத்தாண்டுகளுக்கு மேலாக மகாராஜாவின் பல வெற்றிகளுக்கும் அவரே காரணமாயிருந்தார். 1818-ல் முல்டானையும், அடுத்த ஆண்டில் காஷ்மீரையும் வென்ற படைகளுக்குத் தலைமை தாங்கிச் சென்றவர் திவான் சந்த்தே. முல்டானை வென்றதற்காக மிஸிருக்கு 'ஸாபர் ஜங் பகாதூர்' (அஞ்சா நெஞ்சம் படைத்த வெற்றி வீரர்)

என்ற விருதையும், காஷ்மீரை வென்றதற்காக 'ஃபத்தே ஜங்' (வெற்றி வீரர்) என்ற விருதையும் ரண்ஜீத் சிங் வழங்கினர். ஸதா கௌர் ரண்ஜீத் சிங்கிடம் பகைத்துக் கொண்ட போது அவளது சமஸ்தான உரிமையைப் பறிமுதல் செய்யும் பொறுப்பைத் திவானி சந்திடமே மகாராஜா ஒப்படைத்தார். மகாராஜாவின் நௌஷேராப் போரில் மிஸிர் மிக முக்கியப் பங்கேற்ருர். 1825-ல் (காலராவினுல்) திவான் சந்த் மரணமடைந்தது லாகூர் தர்பாருக்கு ஈடுசெய்ய முடியாத நஷ்டமாகும். சிறந்த தளபதியாகவும், நல்ல நண்பராகவும், பரந்த மனப் பான்மை கொண்டவராகவும் விளங்கிய திவான் சந்தை இழந்ததனுல் மகாராஜா தாங்கொணுத் துயரத்தில் ஆழ்ந்தார்; தம்மிடம் பணியாற்றுபவர்களுள் மிஸிர் திவான் சந்திற்கு ஈடான மற்ருெருவரில்லை என்று தம் பிரதானிகளிடம் அவர் குறிப்பிட்டார்.

## ஹரி சிங் நல்வா

ரண்ஜீத் சிங்கிடம் பணியாற்றிய தளபதிகளுக்குள்ளே ஹரி சிங்தான் இன்னும் மக்களின் நினைவில் நிலைத்திருப்பவர் எனலாம். அவர் ஒரு முறை ஒரே வெட்டில் ஒரு புலியின் தலையைத் துண்டித்தார். அது முதல் 'நல்வா' (துணிவு மிக்கவர்) என்று அவர் அழைக்கப்படலானர். துணிவு, திறமை காரணமாகத் தம் வாழ்நாளிலேயே புகழுடன் விளங்கிய ஹரி சிங்கினிடம், ரண்ஜீத் சிங் விசேஷ அபிமானம் கொண்டிருந்தார். இதன் காரணமாகவே, ரண்ஜீத் சிங் மிகக் கடினமான படையெடுப்புக்களை யெல்லாம் அவரிடம் ஒப்படைத்தார். திவான் சந்தும், ஹரி சிங்கும் இருவரும் சேர்ந்துதான் நவாப் முஸபர்கானை எதிர்த்து முல்டான் போரில் வெற்றி பெற்றனர்; 1819-ல் காஷ்மீர் மீது படையெடுத்துச் சென்ற சேனையின் ஒரு பகுதிக்கு 'நல்வா' தலைமை தாங்கினர்; காஷ்மீர் வீழ்ந்த பின் நல்வா அதற்குக் கவர்னராக நியமிக்கப்பட்டார்.

இப்பதவியை அவர் வெற்றிகரமாக நிர்வகித்தாரா இல்லையா என்பது பற்றி இருவகையான கருத்துக்கள் நிலவுகின்றன. நல்வா, காஷ்மீர் மக்களின் ஆதரவை இழந்ததால் மகாராஜா அவரைத் திரும்ப அழைத்து விட்டார் என்று லெப்பல் கிரிஃபின் கூறுகிறார்; நல்வா கவர்னராக இருந்த காலமே காஷ்மீரில் ரண்ஜீத் சிங் ஆட்சியின் மிகச் சிறந்த காலம் என்று மற்றொரு சாரார் கூறுகின்றனர். அது எப்படியிருந்தபோதிலும், ஹஸாராவிலும் காஷ்மீரிலும் ரண்ஜீத் சிங்கின் பிரதிநிதியாக இருந்தவர் என்பதற்காகவே ஹரிசிங் நினைவில் நிலைத்திருக்கிறார். அவர் கொள்ளைக்காரர்களைக் கடுமையாகத் தண்டித்தார்; காபுல் அரசரையும் ஆப்கானிய மலை ஜாதியினரையும் அவர் தமது வீரத்தாலும், படை பலத்தாலும் ஒடுக்கி வைத்திருந்தார். அவர் இவ்வெல்லைப் பகுதியில் ஆற்றிய பணியைக் கண்டு ரண்ஜீத் சிங் மிகவும் மகிழ்ச்சியடைந்து, வெற்றிகரமாக ஒரு ராஜ்யத்தைக் கட்டியாள்வதற்கு ஹரி சிங் நல்வா போன்றவர்களின் துணை மிக அவசியமாகும் என்று அருகிலிருந்த ஒருவரிடம் கூறினாராம். 1837-ல் ஜம்ருத் போரில் நல்வா எண்ணற்ற காயங்கள் அடைந்து உயிரிழந்தார். அவரைப் போர்க்களத்திலிருந்து எடுத்துச் செல்லும் போது மகாராஜாவின் உதவிப் படை வந்து சேரும் வரை தம்முடைய மரணச் செய்தியை வெளியிட வேண்டாமென்று சகாக்களிடம் வேண்டிக் கொண்டார். ஹரி சிங்கின் மரணச் செய்தியைக் கேட்டபோது ரண்ஜீத் சிங் ஆறாகக் கண்ணீர் பெருக்கினார். நல்வா, ஒரு தலைசிறந்த 'நிமக் ஹலால்' (உப்பிட்டவரை உள்ளளவும் நினைத்திருப்பவர்) என்று மகாராஜா கூறியதாகச் சொல்லப்படுகிறது.

### ஹீரா சிங்

ராஜா தியான் சிங்கின் மகனை இவர், ரண்ஜீத் சிங்கின் கவனத்திற்குள்ளான போது சிறு குழந்தையாக

இருந்தார்; அப்போதே அவர் அரசவைக்கு வரத் தொடங்கினர்; அவர் ஆயுளில் பெரும் பகுதி மகா ராஜாவின் விசேஷச் சலுகை பெற்ற பிரதானியாக விளங்கி வந்தார். அவர் 1818-ல் பிறந்தவர்; அசாதாரண அழகும், முகக்களையும் கவர்ச்சியும் நிரம்பிய குழந்தை யாக இருந்தார். அவர் சிறு பையனுக இருந்தபோது எதையும் எளிதாகவும், விரைவாகவும் கற்றுக் கொள்ளும் திறமை அவரிடம் காணப்பட்டது. குதிரையேற்றம், வாட் பயிற்சி, துப்பாக்கி சுடுதல் முதலியவற்றை அவர் மிக விரைவில் கற்றுக் கொண்டார். துடிப்பும் சமயோசித புத்தியும் உள்ளவராதலால் வெகு விரைவிலேயே அவர் மகாராஜாவின் அபிமானத்திற்கு உரியவரானர். அவர் ரண்ஜீத் சிங்கின் சொந்தப் புதல்வர்களைக் காட்டிலும் சிறந்தவராக விளங்கியது அதற்குக் காரணமாக இருந் திருக்கலாம். கரக் சிங், பார்ப்பதற்கு அழகற்றவனுகவும், மந்த புத்திக் காரனுகவும் இருந்தான்; 'கல கலப்பாக' எவருடனும் பழகும் சுபாவமற்றவன். ஷேர் சிங் அழகாக இருந்தாலும் பட்டாலாவில் பாட்டி ஸதா கௌரின் பரா மரிப்பிலேயே வளர்ந்து வந்ததால் அதிக காலம் வெளி யூரிலே தங்க நேர்ந்து விட்டது. ஹீரா சிங் சீக்கிரமே ரண்ஜீத் சிங்கின் இணைபிரியாத துணைவராகி விட்டார். தர்பாரில் மகாராஜாவிற்கு அருகே இரண்டு இளவரசர் களுடன் ஹீராசிங்கிற்கும் சரியாசனம் அளிக்கப்பட்டிருந் தது; இளவரசர்களோ அநேகமாக சபைக்கு வருவதில்லை. தியான் சிங், மகாராஜாவின் ஆசனத்திற்குப் பின்புறம் நின்று கொண்டிருக்கையில், அவரது மகன் மகாராஜா விற்கு அருகே அமர்ந்து தமது சுட்டித்தனமான இனிய பேச்சுக்களால் இன்ப மூட்டிக் கொண்டிருப்பார். அவருக்குப் பத்து வயதான வுடனேயே ராஜாவாக்கப் பட்டார். அவருக்கு ஒரு ஜாகிர் வழங்கப்பட்டதுடன், ஒரு பட்டாளத்தின் தலைமைப் பதவியும் அளிக்கப்பட்டது. அவர் வாலிபப் பருவத்தை அடைந்தபோது, அவரது

தோற்றம் எவரையும் சுண்டியிழுக்கத் தக்கதாயிருந்தது. இப்போது அவர் ஒரு நல்ல போர் வீரராகவும், விவேக மிக்க பிரதானியாகவும் விளங்கினார். ரண்ஜீத் சிங் 1829-ல் அவருக்குத் திருமணம் செய்து வைத்தார்.

1838-ல் ஆஸ்போர்ன் ஹீரா சிங்கைச் சந்தித்த போது, அவருக்கு ஏறக்குறைய 20 வயது. அப்போது அவ்விளைஞர் வேறு எந்தத் தலைவரையும் விட, ஏன், ராஜா தியான் சிங்கையும் விட, மகாராஜாவின் விசேஷ அபிமானத்திற்குரியவராக விளங்கியதை அவர் கண்டார். "அவருக்கு ரண்ஜீத் சிங்கிடமிருந்த செல்வாக்கு மிக அபூர்வமானதாகும், வேறு நாடுகளிலானால் அவர் இத்தனை செல்வாக்குப் பெற்ற முறையினால் அவருக்கு நிரந்தரமான அவப் பெயர் ஏற்பட்டிருக்கும். ஆனால் இங்கோ அவர் எல்லோராலும் மதித்துப் போற்றப்பட்டார்." போர் வீரரும் ராஜ தந்திரியுமான ஆஸ்போர்னின் பார்வைக்கு ஹீரா சிங் பெண்மைக்குரிய அழகோடு விளங்கியதாகத் தோன்றிற்று; அவர் இடுப்புக்கு மேலே ஒரே முத்துக்களும், வைரங்களும், மற்ற விலையுயர்ந்த ரத்தினங்களுமாக அணிந்து கொண்டிருக்கக் கண்டார். இவ்விளைஞர் ஆர்வத்துடன் ஆங்கிலம் கற்று வந்தார். இதுவும், அவருடைய இயல்பான இனிய சுபாவமும், பெருந்தன்மையான நடத்தையும் ஆஸ்போர்னை வெகுவாகக் கவரவே, "அரசவையில் பழகுவதற்கு மிக்க இனியவராகவும் கீர்த்தி வாய்ந்தவராகவும் திகழ்ந்தவருள் ஒருவர்" ஹீரா சிங் என்று பாராட்டியுள்ளார்.

மகாராஜா இந்த இளைஞருக்கு அளவுக்கு அதிகமான சுதந்திரம் அளித்திருந்தார். ரண்ஜீத் சிங் கேட்காத போதும் தாமாகவே அவரிடம் பேசக்கூடிய துணிவு கொண்ட ஒரே மனிதர் ஹீரா சிங்தான். உண்மையில் அவர் மகாராஜா பேசும்போது குறுக்கிட்டு அவரை

மறுத்துப் பேசவும் தயங்கியதில்லை. ஒரு சமயம், மகாராஜாவிற்காகக் காஷ்மீரிலிருந்து கப்பமாக வந்திருந்த பொருட்கள் (சால்வைகளும், ஆபரணங்களும், படைக் கலங்களும், ரொக்கத் தொகையும்) அரண்மனை அறையொன்றில் நிறைந்து கிடக்கக் கண்ட ஹீரா சிங், "மகாராஜாவிற்கு இத்தனை பொருட்களும் தேவையாயிருக்காது. இவைகளை நான் எடுத்துக் கொள்கிறேனே!" என்று வேடிக்கையாகக் கூறினார். ரண்ஜீத் சிங் உடனே அதற்குச் சம்மதித்து விட்டார். 1843-ல் ஹீரா சிங் மகாராஜா நௌநிஹால் சிங்கின் பிரதமராகக் குறிக்கப் பட்டார். ஆனால் அவர் அதிக நாள் வாழக் கொடுத்து வைக்கவில்லை. அவரும் தம்முடைய தந்தையைப் போலவே கால்ஸாப் படையினரால் 1844-ல் கொல்லப் பட்டார்.

## அகாலி ஃபூலா சிங்

ஃபூலா சிங் அகாலியையும் ரண்ஜீத் சிங்கின் அரசவைப் பிரதானிகளில் ஒருவராகக் குறிப்பிடுவது விநோதமாகத் தோன்றலாம். ஆனால் அவர் முக்கியத் துவம் வாய்ந்தவராக விளங்கினார் என்பதில் சந்தேகமில்லை. மகாராஜா ஆங்கிலேயருடன் நட்புறவு கொள்வதையோ தமது சுதந்திரத்தைத் தளரவிடுவதையோ அல்லது சமயச் சம்பிரதாயங்களை விட்டுக் கொடுப்பதையோ விரும்பாதவர்களான, இரும்புக் காப்பு அணிந்த, முரட்டுத்தனம் மிகுந்த நிஹங் கூட்டத்தினரின் தலைவர் என்ற முறையில் அவருக்கு அபரிமிதமான செல்வாக்கு இருந்தது என்பதிலும் ஐயமில்லை. ஃபூலாசிங் அசாத்தியத் துணிச்சல்காரர்; ஆனால் சமய வெறியும் மிகுந்தவர். 1809-ல் பிப்ரவரி 25-ம் தேதி அன்று முஹரமும் ஹோலிப் பண்டிகையும் சேர்ந்து வந்தபோது மெட்காஃபின் மெய்க்காப்பாளராயிருந்த முஸ்லிமை அவரும் அவருடைய ஆட்களும் தாக்கினர். ரூப்பாரில்

ஆங்கிலேயர் ஏராளமான ஆதாயத்தைப் பெற்றுக் கொண்டு பதிலுக்கு மகாராஜாவிற்கு எதையும் விட்டுக் கொடுக்கவில்லை, என்று தெரிய வந்தபோது அவர், மகாராஜாவினைக் கொல்வதற்கு நிஹாரங் ஒருவனை ஏவினார். ரண்ஜீத் சிங், அகாலிகளின் போக்கை உள்ளூற அங்கீகரிக்கவில்லையென்ற போதிலும் அவர் பொறுமை காட்டியதுடன், முஸ்லிம் வெறியர்களுக்கு எதிராக அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளவும் செய்தார். ஃபூலா சிங் முரண்பாடான குணங்கள் படைத்தவர். ஒருபுறம் அவர் மிகுந்த அடக்கமும் பக்தியும் நிறைந்தவர், குருத்துவாராக்களில் குற்றேவல் செய்வதற்கு எப்போதும் தயாராக இருந்தார்; மறுபுறம், அரசாங்க அதிகாரத்தை மீறுவதில் ஆர்வமுடையவராகவும் இருந்தார். அவரது முரட்டுத் தனத்தையும் ரண்ஜீத் சிங்கின் அதிகாரத்திற்குக் கூடப் பணியாமல் எதிர்ப்பதற்கு எந்தச் சந்தர்ப்பத்தையும் பயன்படுத்திக் கொள்ளும் தன்மையையும் விளக்கக் கதையொன்று உண்டு. ஒரு நாள் மகாராஜா லாகூர் நகர வீதியில் யானை மீது பவனிவந்தபோது, ஃபூலா சிங் ஓர் உப்பரிகையிலிருந்து மகாராஜாவைப் பார்த்து "ஒற்றைக் கண்ணரே, நீர் சவாரி செய்ய எவன் இந்த எருமைக் கடாவைக் கொடுத்தான்?" என்று குத்தலாகக் கேட்டாராம். ரண்ஜீத் சிங் கோபப்படாமல், "மாட்சிமை தங்கியவரே, தங்களுடைய வெகுமதிதான் இது" என்று வேடிக்கையாகப் பதில் கூறினாராம். பொதுவாகக் கால்ஸாக்களின் பலத்தாலும், குறிப்பாக அகாலிகளின் ஆதரவாலுமே தாம் அதிகாரம் வகித்து வருவதாக உள்ளர்த்தம் தொனிக்கும்படி அவர் இவ்வாறு கூறியிருக்கலாம்.

## மற்றப் பிரமுகர்கள்

மகாராஜாவின் அவைக் களத்தில் வேறு பலரும், மிகுந்த செல்வாக்குடன் விளங்கினர்; அவர்களுள் சிலர்

போர் வீரர்கள், வேறு சிலர் அரசாங்க நிர்வாகிகள்; உதாரணமாகச் சிலரைக் குறிப்பிடலாம்; நவாப் முஸபர் கானின் இரு புதல்வர்களான ஸர்பரஸையும், ஸில்பிகரை யும், அவர்களின் தந்தை போரில் இறந்தபின் ரண்ஜீத் சிங் பெருந்தன்மையுடன் நடத்தினர். மற்றும், தீவானு வின் அதிபர் குதா யார் கான்—இவருடைய சந்ததியினர் ஆங்கிலேயர் காலத்திலும் பிரமுகர்களாகத் திகழ்ந்தனர்; சீக்கிய மத குருக்களான ராம் சிங், குருமுக் சிங் என்ற இருவருள் ராம் சிங் மகாராஜாவுடன் போர்க்களங்களுக் கும் சென்றார்; அதாரிவாலா சர்தார்கள்—இவர்களுள் சிலர் 1848-ல் ஆங்கிலேயரை எதிர்த்த தலைவர்களாவர்; சர்தார் லெஹ்னு சிங் மஜீத்தியா ('டிரிப்யூன்' என்ற பத்திரிகையின் ஸ்தாபகரான சர்தார் தியால் சிங்கின் தந்தை) துணிச்சல் மிக்க போர் வீரராக இருந்ததோடு, புதிய பொருட்களைக் கண்டுபிடிப்பதில் மிகுந்த ஆற்றல் படைத்தவராகவும்; பீரங்கி வார்ப்பவராகவும் வான வியலிலும் கணிதத்திலும் வல்லுனராகவும் விளங்கினர். அவர் கலப்பு உலோகத்தில் தோட்டாக்கள் வார்ப் பதிலும் கெட்டிக்காரராக இருந்தாரென்று ஆஸ்போர்ன் குறிப்பிட்டுள்ளார். லஞ்சம் பெருத்திருந்த அந்தக் காலத்திலும் அவரிடம் காணப்பெற்ற நேர்மையும் லஞ்சத்தைத் தீண்டாத நாணயமும் அவரது மற்றச் சிறந்த பண்புகளாகும்.

*அத்தியாயம் 8*

# மகாராஜாவின் சைனியமும் ஐரோப்பிய அதிகாரிகளும்

*ரண்ஜீத் சிங் ஒரு சிறந்த படைத் தலைவர். ஆனால் அதைவிடவும் சிறந்தது படைச் சீரமைப்பில் அவருக்கு இருந்த திறமை. தறிகெட்டுத் திரிந்த சீக்கியப் படையைக் கட்டுப்பாடும், சரியான படைக் கலங்களும் கொண்ட சைனியமாக மாற்றியமைத்தது அவருடைய இராணுவ வெற்றிகளுக்கு ஒரு முக்கிய காரணமாகும். அவருக்கு முன்பிருந்து வந்த வழக்கத்திற்கு மாறாக குதிரைப் படையை விடக் காலாட் படையில் அதிகக் கவனம் செலுத்த வேண்டுமென்பதை அவர் உணர்ந்தார். ஆங்கிலேயர் படையமைப்பு முறையை அவர் ஆராய்ந்து அறிந்து அதையே தமது படை அமைப்பிலும் கையாண்டு, குதிரைப் படையைவிடக் காலாட் படைக்கு அதிக முக்கியத்துவம் அளித்தார். ஐரோப்பிய அதிகாரிகளை நியமித்ததன் மூலம் இம்மாற்றத்தை அவர் அமல் நடத்தினார்.*

*ரண்ஜீத் சிங்கின் நாளில் படைக்கு ஆள் சேர்ப்பது அவ்வளவு கடினமாக இருக்கவில்லை; ஏனெனில் மகாராஜாவிடம் பணியாற்றுவது பெருமையாகக் கருதப்பட்டு வந்தது. அவர் தமது காலாட்படைக்கு வலிமையும் எடுப்பான தோற்றமும் உடையவர்களாகப் பார்த்துப் பொறுக்கி யெடுப்பதில் குறிப்பாக இருந்தார். நாளுக்கு நாள் படை பலம் பெருகி வந்தது. 1811-ல் படையினரின் எண்ணிக்கை 4,000 ஆக இருந்தது போக, ரண்ஜீத் சிங் ஆட்சியின் கடைசி நாட்களில் நிரந்தர சைனியத்தில் 38,000-க்கும் அதிகமானவர்கள் இருந்தனர்—அவர்களுள் ஏறக்குறைய 29,500 பேர்*

காலாட் படையினர்; 4,000 பேர் குதிரைப் படையினர்; 4,500 பேர் பீரங்கிப் படையினர். அச்சைனியத்தின் பராமரிப்பிற்கு மாதம் சுமார் மூன்றே முக்கால் இலட்சம் ரூபாய் செலவாயிற்று. கிழக்கிந்தியக் கம்பெனியைப் பார்த்து மாதச் சம்பள முறையைக் கையாண்டபோதிலும், அடிக்கடி பல மாதங்களுக்குச் சம்பளப் பாக்கி நின்றுகொண்டிருந்தது. போர் புரிய வலுவுள்ள வரை வீரர்கள் படையில் பணியாற்றினர். ஓய்வுக் கால ஊதியம் எதுவும் தரப் பெறவில்லை; ஆனால் ஓய்வு பெறுபவர்களின் புதல்வர்களோ அல்லது நெருங்கிய உறவினர்களோ காலியிடங்களில் நியமிக்கப் பெற்றனர். போர்க்களத்தில் இறந்தவர்களின் குடும்பங் களுக்கும், காயமுற்றவர்களுக்கும் உதவித் தொகையாக ('தர்மார்த்த') ஓய்வு ஊதியம் அளிக்கப்பட்டது.

இந்த நிரந்தர சைனியம் தவிர, 'கோர்ச்சரா' என்ற நிரந்தரமற்ற குதிரைப் படையினரும் இருந்தனர். அக் குதிரை வீரர்கள் தங்களைத் தாங்களே பராமரித்துக் கொள்ள வேண்டும். அவர்கள் பல கோஷ்டிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். ஒரு குதிரை வீரருக்குரிய சம்பளமும் படியும் அவரது குதிரையின் தரத்தைப் பொறுத்து நிர்ணயிக்கப்பட்டன. தேவையான காலங் களில் ஜாகிர்தார்களின் படைகள் உதவிக்கு அழைத்துக் கொள்ளப்பட்டன; ஆனால் இவை அவ்வளவாக முக்கிய மல்லாத பணிகளுக்கே பயன்படுத்தப்பட்டன. காலாட் படை வீரர் ஒருவரின் மாதச் சம்பளம் ரூ. 7-க்குச் சற்று அதிகம்; இது கிழக்கிந்தியக் கம்பெனியார் கொடுத்து வந்த சம்பளத்தைவிட மோசமில்லை.

ஆனால் மேலே குறிப்பிட்டதுபோல் இந்த ஊதியங்கள் ஒழுங்காகக் கொடுக்கப்படவில்லை. ஒரு சமயம் ஒரு கூர்க்காப் பட்டாளத்தினர் சம்பளப் பாக்கிக்காகக் கொதித்து எழுந்தபோது ரண்ஜீத் சிங்கே அவர்கள்

கோபத்திலிருந்து தப்புவதற்காகக் கோவிந்த்கர் கோட்டைக்குள் அடைக்கலம் தேட வேண்டியதாயிற்று. ரண்ஜீத் சிங்கின் மறைவிற்குப் பின் படையினரின் எண்ணிக்கையும் சம்பளமும் அதிகப்படுத்தப்பட்டதால், நாட்டு வருவாயில் பெரும் பகுதி சைனியத்திற்கே சரியாகப் போயிற்று. ஸர் லெப்பல் கிரி∴பின் புள்ளி விவரப்படி 1839-ல் இருந்த படை வீரர்களின் எண்ணிக்கை 29,168; பீரங்கிகள் 192; அவர்களுக்கான மாதச்செலவு ரூ. 3,82,008; 1845-ல் இவை முறையே, 72,370; 381; ரூ. 8,52,696 ஆகும்.

## ஐரோப்பிய அதிகாரிகள்

ரண்ஜீத் சிங்கினிடம் பணியாற்றிய ஐரோப்பிய அதிகாரிகளின் எண்ணிக்கை பலவிதமாக மதிப்பிடப்படுகிறது. இவ்வெண்ணிக்கை 20 லிருந்து 42 வரை வேறுபடுகிறது. இவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள், வெந்துராவும், ஆலார்டும் ஆவர். உண்மையில் நெடு நாட்களாகவே ரண்ஜீத் சிங் ஐரோப்பிய முறையில் தமது படை வீரர்களுக்குப் பயிற்சி அளிக்கவேண்டுமென்று எண்ணி வந்தார்—ஒரு சந்தர்ப்பத்தில் அவர் லேக் பிரபுவின் சைனிய அணிவகுப்பு ஒன்றை மாறு வேடத்தில் சென்று பார்த்தார். மகாராஜா ஏற்கெனவே யோசித்து வைத்திருந்து ஓரளவு செயல்படுத்தியிருந்த திட்டமொன்றை நிறைவேற்றியது தான் அந்த இரு ஐரோப்பியர்களும் செய்த காரியம்.

இவ்விரு பிரெஞ்சுக்காரர்களும் லாகூருக்கு வந்து சேர்ந்ததும் மகாராஜாவினிடம் உத்தியோகம் பெற்றதும் சுவாரசியமான வரலாறாகும். அவர்கள் 1822-ம் ஆண்டு தொடக்கத்தில் வந்தனர். ரண்ஜீத் சிங்கை அவர்கள் சந்தித்து, தாங்கள் ஆசியா, ஐரோப்பா வழியாகப் பிரயாணம் செய்து லாகூரை அடைந்ததாகவும், வேலை தேடி வரவில்லை என்றும், விதி எங்கு அழைத்துப்

போகிறதோ அங்கு செல்லப் போவதாகவும் அவர்கள் தெரிவித்தார்கள். மகாராஜா அவர்களைத் தமது பட்டாளம் ஒன்றுக்குச் சில பயிற்சிகள் கற்றுத் தந்து காண்பிக்குமாறு கூறியபோது, அதைவிடப் புதிதாகச் சேர்ந்தவர்களுக்குப் பயிற்சி அளிப்பதையே தாங்கள் விரும்புவதாகக் கூறினார்கள். இதை இலவசமாகச் செய்து காட்டுவதாகவும், ஆனால் தங்களை உத்தியோகத்தில் அமர்த்திய பின் குதிரைகள், வேலைக்காரர்களின் பராமரிப்புப் போக 'இருவருக்கும் தனித்தனியே நாளொன்றுக்கு 10 தங்க மோகராக்கள்' அளிக்க வேண்டுமென்றும் அவர்கள் நிபந்தனை விதித்தனர். அவர்களை இரண்டு மாதங்கள் கவனித்துப் பரிசோதித்த பின்னர் அவர்கள் ஏமாற்றுக்காரர்கள் அல்லர் என்பதையும் அவர்கள் உண்மையிலேயே நெப்போலியன் போனபார்ட்டின் படையில் பணியாற்றியவர்கள்தாம் என்றும் ரண்ஜீத் சிங் உணர்ந்தார். அவர்களுடைய நிபந்தனைகளுக்கு அவர் ஒப்புக்கொண்டார். ஜான் பிரான்ஸ்வா ஆலார்டு குதிரைப் படைக்கும், ஜான் பாப்டிஸ்ட் வெந்துரா காலாட் படைக்குமாக நியமிக்கப்பட்டனர். முன்னவர் துப்பாக்கி ஏந்திய குதிரைப்படையொன்றை உருவாக்கினார்; மற்றவர் 'பௌஜ் காஸி'ன் (விசேஷப் படை) தளபதியாக்கப்பட்டார்.

## ஆலார்டு

அந்த இரு பிரெஞ்சுக்காரர்களுள் ஆலார்டுக்கு மகாராஜாவினிடம் அதிக நெருக்கம் ஏற்பட்டது; அவர் தம் எசமானரிடம் உண்மையான மரியாதை கொண்டவர். அவர் பாரிசுக்கு ரஜாவில் சென்றிருந்த சமயம், பிரெஞ்சு மன்னரை (லூயி பிலிப்) சந்தித்து, ரண்ஜீத் சிங்கின் வாழ்த்துக்களைத் தெரிவித்தார். அவ்வரசரும் பதில் மரியாதையாக மகாராஜாவிற்கு ஒரு நட்புக் கடிதம் எழுதி, சில படைக் கலங்களையும் அனுப்பி வைத்

தார். ஆலார்டு தாமாகவே செய்த இக் காரியத்தினுல் மன மகிழ்ந்த ரண்ஜீத் சிங் அவருக்கு விசேஷ வெகுமதி யொன்று அளித்தார். அத்தளபதி 1839-ல் பெஷாவரில் மாரடைப்பால் மாண்டபோது அவரது சடலம் லாகூருக்குக் கொண்டுவந்து அடக்கம் செய்யப்பட்டது. அவர் ஒரு காஷ்மீரப் பெண்ணை மணந்திருந்தார்.

### வெந்துரா

வெந்துராவின் திறமையில் ரண்ஜீத் சிங் மிகுந்த மதிப்பு வைத்திருந்தார். 'பௌஜ் காஸின்' தலைவராக அத்தளபதி பல போர்களில், முக்கியமாக மலைப் பகுதிகளில், மகத்தான சேவை ஆற்றினுர். ஒரு சமயம் அவர் லாகூரின் 'காஜி' (நியாயாதிபதி) யாகவும் கவர்னராகவும் நியமிக்கப்பட்டார். அதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்னர் அவர் லூதியானுவில் ஓர் ஆர்மீனியப் பெண்ணை மணக்க விரும்பியபோது, மகாராஜா "திருமணத் தம்பதிகளுக்காக ஏராளமான வெகுமதிகளை அளித்தார்." எனினும் அத்தளபதி எண்ணிறந்த காஷ்மீரப் பெண்களையும் பஞ்சாபிப் பெண்களையும் ஆசைநாயகிகளாக வைத்துக் கொண்டிருந்தார். அவர் பாரிசுக்குப் போனபோது, அவர்களை மாத்திரமன்றித் திருமணம் செய்துகொண்ட மனைவியையும் கூடக் கைவிட்டுவிட்டுச் சென்றுர்.

### அவிட்டபில்

பாவ்லோ—டெ—அவிட்டபில் என்ற இத்தாலியர் அதி முக்கியமான பதவிகளைப் பெற்றுர். அவர் ஒரு முரட்டுப் போர் வீரர்; சாதாரண சிப்பாயாக இருந்து உயர்ந்த நிலையை அடைந்தவர். ரண்ஜீத் சிங் அவருடைய தகுதியை உணர்ந்து அவருக்கு மாதம் 5,000 ரூபாய் போக, செழிப்பான ஜாகிர்களையும் அளித்திருந்தார். ஆனுல் அவிட்டபில்லின் ரசனைகள் ஓரளவு மட்டமானவை,

அவர் ஈவு இரக்கமற்ற நிர்வாக அதிகாரியாக இருந்தார். அவர் பெஷாவரின் கவர்னராக இருந்த சமயம், குண்டர்களையும் போக்கிரிகளையும் தூக்கிலிட்டும், பொய்யர்கள் வதந்தியைப் பரப்புபவர்கள் ஆகியோரின் நாக்கை அறுத்தும், பட்டாணிய மலை ஜாதியினரை ஒடுக்கி, ஆறு மாதங்களுக்குள் அந்நகரில் குற்றமெதுவும் நடக்க வழியின்றிச் செய்துவிட்டார்.

## ஹென்றி கோர்ட்

அவிட்டபில்லுடன் பிரயாணம் செய்த சகாவான பிரெஞ்சுக்காரர் ஹென்றி கோர்ட்டும் அவருடன் ஒரே சமயத்தில் உத்தியோகம் பெற்றார். ஆனால் அவருடைய இயல்பும், பண்பாடும் வேறு மாதிரியானவை. உயர் குடிப் பிறப்புடன் சிறந்த கல்விப் பயிற்சியும் பெற்றவராதலால், அவர் பணிவு மிக்கவராயிருந்தார்; அவிட்டபில்லோ முரட்டு சுபாவம் உடையவர். எனினும் அவிட்டபில்லின் சம்பளத்தில் பாதிதான் ஹென்றிக்குத் தரப்பட்டது. சிறந்த வீரரான அவர் நல்ல அறிஞராகவும் விளங்கினார். பிரிட்டிஷ் ராயல் புவியியல் கழகத்தில் கூட (ஃபெல்லோ ஆஃப் ராயல் ஜியோகிராபிகல் சொஸைட்டி) உறுப்பினராக அவர் இருந்தார். ரண்ஜீத் சிங்கின் பீரங்கிகள் பலவற்றை வார்ப்பதற்கு அவரே ஏற்பாடு செய்தார். ஆனால் அவரும் தம் கூட்டாளியைப் போலத் தமக்கென இந்தியப் பெண்களின் அந்தப்புரம் ஒன்று வைத்திருந்தார். அவர் ஏராளமான செல்வத்தோடு 1845-ல் பஞ்சாபை விட்டுச் சென்றார்.

ஆலார்டும் வெந்துராவும் முதலில் உத்தியோகத்தில் அமர்த்தப் பட்டபோது அவர்கள் மீது அவ நம்பிக்கையும் சந்தேகமும் இருந்து வந்ததென்பதை இங்கு குறிப்பிட வேண்டும். கூர்க்கா படைப் பிரிவின் தலைவரிடம் (வெந்துராதான் இப்படைக்குரிய உடுப்பை உருவாக்கிய

வர்) மகாராஜா அப் பிரெஞ்சுக்காரர்களின் உத்தரவு களுக்குப் பணிந்து நடக்க வேண்டுமென்று கூறியபோது அவர் அதற்குக் கீழ்ப்படிய மறுத்துவிட்டார். சில ஐரோப் பியர்கள் ஆங்கிலேயரின் ஒற்றர்களாக இருக்கக் கூடும் என்றும் கிழக்கிந்தியக் கம்பெனியோடு போர் மூண்டால் அவர்கள் தமக்கு விசுவாசமுள்ளவர்களாக இருக்க மாட் டார்கள் என்றும் ரண்ஜீத் சிங்கிற்கே கூடச் சந்தேகம் இருந்து வந்தது. எனினும், நாளடைவில் ஆலார்டு, வெந்துரா ஆகியோரின் நன்னடத்தையால் ரண்ஜீத் சிங் கிற்கு அந்த ஐரோப்பியர்கள் மீதிருந்த அவநம்பிக்கை மறைந்தது. ஆனால் இப்பறங்கியர்களுக்கு ஜாகிர்கள் வழங்கியதால் சீக்கியத் தலைவர்களுக்கும் பஞ்சாபித் தளபதிகளுக்கும் பொறாமை ஏற்படத்தான் செய்தது என்பதை மறுப்பதற்கில்லை. அது எவ்வாறாயினும், அவர் கள் இந்தியப் பெண்களை மணந்து கொள்ளவும், மாட்டிறைச்சியை விலக்கியும், சீக்கியர்களுக்கான ஐம் பெரும் கட்டளைகளை ஏற்றுக் கொள்ளவும் செய்து 'பஞ் சாபிகளை'ப் போல நடந்து கொள்ள மகாராஜா தூண்டினார்.

*அத்தியாயம் 9*

## அரசாங்க நிர்வாகம்

அதிகாரத்திற்கு வந்து பல ஆண்டுகள் வரை ரண்ஜீத் சிங் போரிலும், ராஜ தந்திர விவகாரங்களிலும் பெரும் பொழுதைக் கழித்து வந்ததால் உள்நாட்டு நிர்வாகத்தைச் சீராக அமைப்பதில் கவனம் செலுத்த அவகாசம் கிடைக்கவில்லை. என்றாலும் நிதி இலாகாவிலிருந்து அவரது படையெடுப்புகளுக்குத் தேவையான பணம் ஒழுங்காகக் கிடைத்துவந்தது. நாளடைவில் நிதி இலாக்கா வானது, பல 'ஸரிஷ்டாக்களாக' அல்லது இலாகாக் களாக விரிவடைந்தது; ஒவ்வொன்றுக்கும் தஸ்தாவேஜு களில் பதிப்பதற்கான தனித்தனி முத்திரை அளிக்கப் பட்டிருந்தது. இவ்விலாகாக்களில் சில அவற்றின் தலைமை அதிகாரிகளின் பெயர்களோடு சேர்த்து வழங்கப் பெற்றன; உதாரணமாக த..ப்தர்–இ–தேவிதாஸ், அல்லது ஸரிஷ்டா–இ–பவானிதாஸ் என்பன. இவ்வாறு நிர்வாகத்தின் பல பகுதிகளையும் கவனித்துக் கொள்ள சுமார் பன்னிரண்டு இலாகாக்கள் இருந்தன. தஸ்தா வேஜுகளில் முதலில் ஹிஜ்ரி அல்லது முஸ்லிம் சகாப்தம் குறிக்கப்பெற்று வந்தது. 1807–க்குப் பிறகு அது மாற்றப் பெற்று விக்ரம சம்வத் சகாப்தம் குறிக்கப்பட லாயிற்று.

பணப் பட்டுவாடா செய்வதற்கு முன்பாக, சிக்கலான நீண்ட நடைமுறை கையாளப்பட்டு வந்தது குறிப்பிடத் தக்கது. எப்போதும் மகாராஜாவின் அருகில் இருந்து வந்த முன்ஷிக்கள் நேரடியாகத் தங்களிடம் இடப்படும் உத்தரவுகளையும், அறிவிப்பாளர் மூலம் தெரிவிக்கப்படும் உத்தரவுகளையும் உடனுக்குடன் குறித்துக் கொண்டனர். ரண்ஜீத் சிங் பஞ்சாபியில் பேசுவார்; பணப்பட்டுவாடா

வில் ஏதாவது 'கஸர்' அல்லது குறைப்பு செய்ய வேண்டுமா அல்லது வேண்டாமா என்பதை அவர் தெரிவிப்பார். பணப்பட்டுவாடாவிற்கான உத்தரவு பாரசீக மொழியில் எழுதப்பெறும்; அதில் பெயரும் அனுப்பப் பெறும் இடமும் குறிக்கப்படும். மேலும், குறிப்பிட்ட தொகை எவருக்குக் கொடுக்கப்படவேண்டும், எவர் மூலம் பணம் அனுப்பப்பட வேண்டும், மகாராஜாவின் உத்தரவுகளை முதலில் எந்த நபர் அல்லது நபர்கள் முன்ஷிக்களிடம் தெரிவித்தனர் என்பன போன்ற விவரங்களும் அதில் அடங்கியிருக்கும்; முன்ஷிக்கள் 'பர்வானு'வில் (உத்தரவில்) தங்கள் அதிகார முத்திரையை இடுவார்கள்.

இவ்வாறு அத் தஸ்தாவேஜு எழுதி முடிந்தபின், மகாராஜாவின் அங்கீகாரத்திற்கு அனுப்பப்படும். ரண்ஜீத் சிங் படிக்காதவர் என்றாலும், சாதாரணமாகப் பாரசீக மொழியில் தம்மிடம் வாசித்துக் காட்டப்படுவதை அவரால் புரிந்துகொள்ள முடியும். அவரது அங்கீகாரத்திற்கு அடையாளமாக இரு வேறு பிரத்தியேகமான முத்திரைகள்—ஒன்று பாரசீக மொழியிலும் மற்றது பஞ்சாபியிலும்—அந்த உத்தரவில் பொறிக்கப்பெறும். பிறகு அந்தப் 'பர்வானு' பல்வேறு 'த∴ப்தர்'களிலும் (அலுவலகங்களில்) சுற்ற ஆரம்பிக்கும்; ஒவ்வொரு அலுவலகமும் அதைப் பரிசீலனை செய்து புதிய முத்திரை இடும். 'நகல் த∴ப்தரில்' வார்த்தைக்கு வார்த்தை அப்படியே நகலொன்று எடுப்பார்கள்; இந்தத் தகவலும் அந்தக் காகிதத்தின் பின் பக்கம் குறிக்கப்படும். கடைசியில் அந்த உத்தரவின் யாத்திரை 'தோஷக்கானுவில்' வந்து முடிவுறும். அங்கு அந்த உத்தரவைப் 'பைல்' செய்துகொண்டு, பணம் பட்டுவாடா செய்வார்கள். காலப் போக்கில் பல ஸரிஷ்டாக்கள் அல்லது த∴ப்தர்கள் மறையலாயின; ரண்ஜீத் சிங் ஆட்சியின் கடைசிக் காலத்தில் தஸ்தாவேஜுகளில் ஒரேயொரு முத்திரை தான் இடப்பட்டது.

## நிதி நிர்வாகம்

அரசாங்க அதிகாரம் முழுதும் மகாராஜா விடமே குவிந்திருந்தது. அவருக்கு உதவியாக ஒரு முதல் அமைச்சரும், வெளி விவகார அமைச்சரும், நிதி அமைச்சரும், பல்வேறு இலாகாக்களையும் நிர்வகிக்கப் பலப்பல அதிகாரிகளும் இருந்தனர். அமிர்தசரஸ் லேவா தேவிக்காரரான ராமானந்த் என்பவர் மகாராஜாவின் முதல் கணக்கராக இருந்தார்; அவரது வேலைக்கு ஊதியமாக அவரது ஊரின் சுங்க வசூலும் 'பிந்த் தாதன் கான்' பகுதியிலிருந்த உப்பளங்களின் உரிமையும் வழங்கப்பட்டன. 1808-ல் பவானிதாஸ் பொறுப் பேற்ற பின் அரசாங்கக் கருவூலம் முறையாக நிர்வகிக்கப் பட்டது. அவ்விலாகா பல த..ப்தர்களாகப் பிரிக்கப் பட்டது. நிலவரி, 'நஸ்ரனுக்கள்' (காணிக்கை) அபராதங்கள், எதிர் வரிகள், தஸ்தாவேஜி பதிவுக் கட்டணம், சுங்க வரி, போக்குவரத்து வரிகள் ஆகியவை அரசாங்கத்தின் வருமான இனங்கள். இலாகாக்களுள் ஒன்று, அதிகாரிகள் அனுப்பிய வரவு செலவுக் கணக்குகளைக் கவனித்து வந்தது; மற்றொன்று அரச குடும்பத்தினரின் செலவுக் கணக்குகளைக் கவனித்துக் கொண்டது.

பணப்பட்டுவாடா முறை பெரும்பாலும் குறையில் லாமல் இருந்ததென்றாலும் வரவுக் கணக்குகள் அவ்வளவு நம்பகமாக இருக்கவில்லை. சரியான தணிக்கை முறை யில்லாததால் பண மோசடிகளுக்கு இடமிருந்தது. இதை உணர்ந்திருந்த ரண்ஜீத் சிங் அவ்வப்போது கணக்குகளைச் சரி செய்வதற்காக, தமது அதிகாரிகளுள் ஊழலுக்குக் காரணமானவர்களையோ, சட்டப்படி நடக்காதவர் களையோ தமக்கு ஒரு தொகையைச் செலுத்தும்படி கட்டளையிடுவார்; அவர்கள் செலுத்தத் தவறினால் அவர்கள் சொத்துக்களைப் பறிமுதல் செய்துவிடுவார்.

## வரிகள்

சீக்கிய நிலவரி விகிதம் மிக அதிகம் என்று கூற வேண்டும்; மொத்த விளைவில் ஐந்தில் இரண்டு பங்கு முதல் மூன்றில் ஒரு பங்கு வரை வரியாக விதிக்கப்பட்டது. எதிர்வரி, சுங்கவரி மூலம் ஏராளமான வருமானம் கிடைத்து வந்தது; பல இடங்களிலும் சுங்கம் வசூலிக்கப் பட்டது. ரண்ஜீத் சிங்கின் வரித் திட்டத்தில், "ஒவ்வொரு பொருளின் மீதும் ஒவ்வொரு தலத்திலும், ஒவ்வொரு சாலையிலும், ஒவ்வொரு நகரிலும், ஒவ்வொரு கிராமத் திலும், ஒரு பொருள் எங்கு விற்பனையானாலும், இறக்குமதி செய்யப்பட்டாலும், அல்லது ஏற்றுமதி செய்யப்பட்டாலும், அது உள்நாட்டுப் பொருளானாலும், அயல்நாட்டுப் பொருளானாலும்," வரி விதிக்கப்பட்டது, என்று ஸ்டெயின்பாக் என்பவர் கூறுகிறார். இக்கூற்று மிகையானதாகும். மகாராஜாவின் அரசாங்கம் கஷ்ட காலங்களில் மக்களுக்குத் தாராளமாக உதவியும் செய்தது. பஞ்ச காலங்களில் விதைப்பதற்கும், உண்ப தற்கும் போதுமான தானியம் விநியோகிக்கப்பட்டது. படையினர் செல்லும்போது பயிருக்குச் சேதம் ஏற் பட்டால் நிலவரியோ மேல் வாரமோ வஜா செய்யப் பட்டது. உதிரிக் குதிரைப் படையினர் பயிர்களை நாசம் செய்து விடலாகாது என்பதில் மகாராஜா முக்கிய கவனம் செலுத்தினார். மேலும் பட்டாளத்தில் ஏராளமான பேருக்கு வேலை வாய்ப்புக்கள் கிடைத்தன; போர் வீரர்கள் சேமிப்புக்களைத் தங்கள் குடும்பங்களுக்கு அனுப்பிவைத்தனர்.

## ஸ்தல ஆட்சி

ரண்ஜீத் சிங்கின் பஞ்சாப் நான்கு 'சுபாக்'களாக அதாவது மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது; அவை, லாகூர், முல்டான், காஷ்மீர், பெஷாவர் எனப்படுவன. அநேக மலைப் பிராந்திய சமஸ்தானங்கள் அவருக்கு

வருடாந்தரத் திறை செலுத்தி வந்தன. ஒவ்வொரு 'சுபாவு'ம் பல 'பர்காஞக்களாகவும்,' ஒவ்வொரு 'பர்காஞவும்' பல 'தாலுக்காக்'களாகவும், ஒவ்வொரு 'தாலுக்கா'வும் 50 முதல் 100 வரையுள்ள 'மௌஸாக்களாக' அல்லது கிராமங்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தன. இது முகலாயர் முறையைப் பின்பற்றி அமைக்கப் பட்டதாகும். ஒரு சுபாவின் நிர்வாகம் ஒரு நஸீம் அல்லது கவர்னர் வசம் இருந்தது; அவருக்கு உதவியாகக் 'கர்தார்கள்' நியமிக்கப்பட்டிருந்தனர். சாதாரணமாக ஒரு தாலுக்காவிற்கு ஒரு 'கர்தார்' இருந்தார். ஆனல் இவ்வதிகாரிகளில் சிலருக்கு அரசவையில் மிகுந்த செல்வாக்கு இருந்ததால் அதற்கு இணையான முக்கியத்துவம் அவர்களுடைய சொந்த வட்டாரங்களிலும் இருந்து வந்தது. வரி வசூலிப்பவர்களின் சம்பளம் பலவிதமாக இருந்தது. அவர்கள் ''தங்கள் உத்தியோகங்களின் உபரி வருமானங்களைக் கொண்டுதான் பிழைக்க வேண்டும்'' என்பதை உணர்ந்துதானிருந்தார்கள்.

கர்தார்கள் மக்களோடு நேரடியான தொடர்புடையவர்களாதலால், மக்களை நல்ல முறையில் நடத்தியவர்கள், நல்ல பெயர் எடுத்தார்கள், மோசமாக நடத்தியவர்கள், கெட்ட பெயரைச் சம்பாதித்துக் கொண்டனர். அவர்கள் நிதி, நீதி இரு துறை அதிகாரிகளாகவும்–வரி வசூலிப்பவர்களாகவும், நீதிபதிகளாகவும், மாஜிஸ்திரேட்டுகளாகவும், எதிர் வரி, சுங்க வரி அதிகாரிகளாகவும், சர்க்காரின் பொது மேற்பார்வையாளர்களாகவும்—பணியாற்றி வந்தனர். பர்ன்ஸ் என்பவரின் கூற்றுப்படி, ''நிலச் சாகுபடியாளர்கள் உயிர் வாழ்வதற்கு மிக அத்தியாவசியமானதைத் தவிர அதிகப்படி எதையும் விட்டு வைப்பதில்லை'' என்பதே கர்தார்களின், கொள்கையாக இருந்து வந்தது. அவ்வதிகாரிகள், ''பொன் முட்டையிடும் வாத்தை ஒரேயடியாகக் கொல்லாவிட்டாலும், முடிந்த மட்டும் அதன் இறகுகளைப் பிய்த்து வந்தனர்.''

அந்த ஆங்கிலேயரின் கருத்தைச் சில நூலாசிரியர்கள் மறுத்து, சில கர்தார்களையும் நஸீம்களையும் பாராட்டி, ''அவர்ளுடைய நிர்வாக ஏற்பாடுகள், குடியானவர் களுக்கு ஒரு வரப்பிரசாதமாக இருந்தன'' என்று புகழ்ந் துரைத்துள்ளனர்.

## நீதிபரிபாலனம்

ரண்ஜீத் சிங்கின் காலத்தில் எழுத்து வடிவில் சட் டங்கள் எவையுமில்லை; சம்பிரதாயத்தை யொட்டி நீதி வழங்கப்பட்டது. 'சிவில்' 'கிரிமினல்' வழக்குக்கள் தனித் தனியாக விசாரிக்கப்படவில்லை; நீதி பரிபாலன முறை எளியதாகவும் நேரடியானதாகவும் இருந்தது. கிராமத் தகராறுகளைப் பஞ்சாயத்துக்களே விசாரித்தன; அவற்றின் தீர்ப்புக்களை மாற்றும் அதிகாரம் கர்தார் களுக்கு இருந்தது. நில, வாரிசுரிமை, வரி ஆகியவை பற்றிய தாவாக்களை இந்த அதிகாரிகளே நேரடியாக விசாரித்தனர். இவர்கள் தவிர, 'அதால்தி'க்கள் (நீதி வழங்குபவர்கள்) என்னும் அதிகாரிகள் பலர் இருந்தனர். அவர்கள் நீதி பரிபாலனத்திற்கென்றே பிரத்தியேகமாக நியமிக்கப்பட்டவர்கள். அப்பீல்களை விசாரிக்க 'அதாலத் -இ-ஆலா' அல்லது உயர்நீதி மன்றம் ஒன்று இருந்த தாகச் சில ஆசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். அமைச் சர்களுக்குத் தங்கள் சம்பந்தப்பட்ட இலாகாக்களைப் பொறுத்த வழக்குகளை முடிவு செய்யும் அதிகாரம் இருந்தது. பல்வேறு 'நீதிமன்றங்களின்' தீர்ப்புக்களை எதிர்த்து அப்பீல் செய்யப்படும் வழக்குக்களை விசா ரிக்கும் முடிவான அதிகாரி மகாராஜாவே. அவர் பரவ லாகச் சுற்றுப்பயணம் செய்து, ஆங்காங்கே தமது கவனத்திற்குக் கொண்டு வரப்பட்ட தீர்ப்புக்களைப் பரிசீலித்து ஆவன செய்து வந்தார்.

மகாராஜாவின் அரசாங்கம், வழக்குக்களில் வென்ற கட்சியினரிடமிருந்து ஒரு தொகையை வசூலித்தது

அதோடு அக்கட்சியினர் 'ஷுக்ரானுவும்' (நீதி மன்றம் வழக்கை விசாரித்ததற்கு நன்றி தெரிவிக்கும் முகமாகச் செலுத்தும் தொகை) செலுத்த வேண்டும். சிவில் தகராறில் திட்டவட்டமான வழக்கிருப்பதாக நிரூபிக்கப் பெருவிட்டால் வாதியோ பிரதிவாதியோ, 'நீதி மன்றத்தின் நேரத்தை வீணுக்கியதற்காக' அபராதம் செலுத்த வேண்டும். சிறைத் தண்டனை அக்காலத்தில் அளிக்கப் பெறவில்லை. அநேகமாக எல்லா வழக்குக்களிலும் அபராதங்கள் விதிக்கப்பட்டன. இவ்வாறு, நீதி பரிபாலனத்தின் மூலம் சர்க்காருக்குக் கணிசமான வருமானம் கிடைத்து வந்தது. இந்த நீதிபரிபாலன முறை காசுக்கற்ற, எளிமையான முறைதான் என்றாலும், அக்காலப் பஞ்சாபுக்கு ஏற்றதாகவே அது இருந்தது. அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்யாதபடி தடுப்பதற்கான கண்காணிப்பு ஏற்பாடுகளும் இருந்தன. அவற்றுள் மகாராஜாவின் திடீர் விஜயங்களும், கொடியவர்களைத் தண்டிப்பதில் அவர் கையாண்ட அலாதியான முறைகளும் இவற்றுள் அடக்கம்.

அத்தியாயம் 10

# மகாராஜாவின் மனைவியரும் குடும்பமும்

மற்ற மாபெரும் இராணுவத் தலைவர்களைப் போலவே ரண்ஜீத் சிங்கும் பெண்ணாசை கொண்டவர். அதனால் தான் அவர் வாழ்வில் பெருவாரியான பெண்கள்— அவருடைய அந்தப்புரத்தில் பலரும், சிலர் அந்தப்புரத் திற்கு வெளியேயும்—இடம் பெற்றனர். இளவரசர் தலீப் சிங் 1889-ல் ஒரு பிரெஞ்சுப் பத்திரிகை நிருபரிடம், "எனது தந்தையின் 46 மனைவியருள் ஒரு மனைவியின் மகன் நான்," என்று கூறியதாகச் சொல்லப்படுகிறது. சில வரலாற்றாசிரியர்கள் இத்தனை மனைவிமார்கள் இருந்த தாகக் குறிப்பிடவில்லை; ஆனால் இது அவ்வளவு முக்கிய மல்ல. உண்மை என்னவென்றால், ரண்ஜீத் சிங் பல பெண்களைச் சட்டபூர்வமாகவோ, சடங்குகள் ஆற்றியோ திருமணம் செய்துகொண்டார். சமூகக் கட்டுப்பாடுகளைப் பொருட்படுத்தாமல் வேறு பல பெண்கள் அவரோடு உறவு கொண்டிருந்தனர். சிற்றின்ப விஷயத்தில் அவர் எல்லை மீறியதாகக் குற்றஞ்சாட்ட முற்படுபவர்கள் அவர் வாழ்ந்த காலத்தையோ அல்லது இதுபோன்ற விவ காரங்களில் ராஜாக்கள், நவாப்புக்களிடம் சமூகம் பொதுவாக அனுசரித்த மனப்பான்மையையோ மறந்து விடலாகாது. இந்நிலையில் பார்க்கும்போது பெண்மைக் கும் அவ்வளவாக மதிப்பில்லை; அதிலும் ரண்ஜீத் சிங் போன்ற அதிபரின் உறவு கிடைக்கும்போது பெண்கள் அதைப் பெரிய கௌரவமாகவும் பெருமையாகவும் கருதினர். இவ்வாறு, ஒரு சில பெண்கள் திருமணம் அல்லது 'வள முறை சம்பந்தம்' மூலம் ரண்ஜீத் சிங்கின் முறையான மனைவியராயினர்; வேறு பலர் அவரது

பிரேமையைப் பெற்று அந்தப்புரத்தில் இடம்பெற்றனர். இவ்விரு வகையினரின் பட்டியல் கீழே கொடுக்கப் பட்டுள்ளது.

### மஹ்தாப் கௌர்

முறையாகத் திருமணம் செய்து கொண்ட மனைவியருள் முதலிடம் பெறுபவள் மஹ்தாப் கௌர். ரண்ஜீத் சிங்கின் குடும்பத்துப் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட இவ்வுறவு ஸூகர் சாக்கியர்களுக்கும், கன்ஹயாக்களுக்கும் இடையே நேச உறவு ஏற்படச் செய்ததால் அவரது நிலை வலுவடைந்தது. மஹ்தாப்பின் தாயார், ஸதாகௌர், சாமர்த்தியம் வாய்ந்த பெண்மணி. அவள் திறமை காரணமாக தனது 'மிஸலி'ன் தலைமைப் பொறுப்பை வகித்து வந்தாள். மஹ்தாப் கௌருக்கு 1796-ல் திருமணம் நடைபெற்றது; 1813-ல் அவள் காலமானாள்.

### ராஜ் கௌர்

நக்காயி வம்சத்தினரின் தலைவர் ராம் சிங்கினுடைய மகளான ராஜ் கௌருக்கும் ரண்ஜீத் சிங்கிற்கும் 1796-ல் திருமணம் நிகழ்ந்தது; அவள் மகாராஜாவின் அபிமானத்திற்குரியவளாக இருந்தாளென்று கூறுகின்றனர். அவள் அவரிடம் அன்பு பாராட்டி, அவரை நன்கு புரிந்துகொண்டு நடந்ததால், வேறு எந்தப் பெண்ணையும் விட அவளே அவருடன் நெருங்கிய உறவு கொண்டிருந்தாள். 1802-ல் அவள் பெற்றெடுத்த மகன் கரக் சிங் தான் தம் தந்தைக்குப் பின் மகாராஜாவானார். ராஜ் கௌர் 1838-ல் மரணமடைந்தாள்.

### பீபி மோரான்

1805-ல் மூன்று வயதுக் குழந்தையாக இருந்த இளவரசன் கரக் சிங்கிற்கும், கன்ஹயாத் தலைவர்

ஒருவரின் பெண் குழந்தைக்கும் திருமணம் நிச்சயிக்கப் பட்டபோது பிரமாதமான கொண்டாட்டங்கள் நடை பெற்றன. நாட்டிய விருந்தொன்றில் மோரான் என்ற பெயர் கொண்ட நாட்டிய மங்கையிடம் மகாராஜாவின் மனம் லயித்துவிட்டது. விரைவிலேயே அவள் அவரு டைய அந்தப்புரத்தில் இடம் பெற்று அவரது அபிமான திற்குரியவளானாள். அவள் முகத்திரை அணிந்துகொள் ளும் வழக்கத்தை வெறுத்ததால், அடிக்கடி மகாராஜா வுடன் வெளியிடங்களில் காணப்பட்டாள். ரண்ஜீத் சிங் அவளைக் கௌரவிக்கும் முறையில் ஒரு நாணயமே வெளி யிட்டார்; 'அர்ஸிவாலாசிக்கா' என்ற அந்நாணயத்தின் ஒரு புறத்தில் மயிலொன்றின் உருவம் அச்சிடப் பட்டது. 'மோர்' என்ற பஞ்சாபிச் சொல்லிற்கு 'மயில்' என்று பொருள்; அதன் பன்மைச் சொல், 'மோரான்.' மோரான் என்ற அந்நாட்டியப் பெண் முக்கியமாக மயில் நடனத்தில் பெயர் பெற்றவள். ஒரு சமயம் மகாராஜா தமது அபிமான நாயகியான மோரானைக் காணவேண்டு மென்ற தவிப்பில் அமிர்தசரஸிற்கு உடனே திரும்ப வேண்டுமென்று பொறுமையிழந்து துடித்ததாக மெட்கா∴ப் குறிப்பிட்டிருக்கிறார். ஒரு கணம் கூட மோரானை விட்டுப் பிரிந்திருக்கத் தம்மால் முடியவில்லை என்று ரண்ஜீத் சிங்கே ஒரு முறை ஒப்புக்கொண்டதாக ஸோகன் லால் என்பவர் கூறியுள்ளார். ஹரித்துவார் என்ற இந்துப் புண்ணியத் தலத்திற்குக் கூட மகாராஜாவுடன் மோரான் ஒரு சமயம் சென்றாள். ஹோலிப் பண்டிகை யின் போது அவருடன் யானை மீது அவள் பவனி வருவதும் உண்டு.

## குல் பேகம்

மோரான் தவிர ரண்ஜீத் சிங்கிற்கு வேறு பல முஸ்லிம் ராணிகளோ, ஆசை நாயகிகளோ இருந்தனர். அவர் களுள் அமிர்தசரஸ் கணிகையான குல்பஹார் பேகத்தை

ரண்ஜீத் சிங் 1833-ல் ஆடம்பரமாகத் திருமணம் செய்துகொண்டார். சமயச் சடங்குகள் எல்லாம் கூட நடத்தப்பட்டன, இச் செயலிற்கு மன்னிப்புப் பெறுவதற்காக ரண்ஜீத் சிங் பொற்கோவிலுக்குக் கூடச் சென்ருர். மோரானைப் போலவே, குல் பேகமும் மகாராஜாவுடன் பவனி வருவதுண்டு; பல வருடங்கள் வரை அவளுடைய செல்வாக்குக்கு அவர் உட்பட்டிருந்தார்.

மற்ற முஸ்லிம் ராணிகளின் பெயர்கள் வருமாறு: ஜிண்ட்கலான்; டெய்பூ; ஜன்னத் பீபி; கோபீ.

### ராணி ஜிண்டான்

மகாராஜாவின் நாய்களைப் பாதுகாத்து வந்த மன்னு சிங்கின் மகளான ஜிண்ட் கௌர் தனது நாட்டியத்தாலும், பிற குரல்களில் பேசும் திறமையாலும் ரண்ஜீத் சிங்கின் மனதைக் கவர்ந்து அந்தப்புரத்திலும் இடம் பெற்ருள். அவளது மகன் தலீப் சிங் பிற்காலத்தில் அரியணை ஏறினன்.

தஸ்தாவேஜுகளில் காணப்படும் வேறு சில ராணிகளின் பெயர்கள்: குஜராத் பங்கி வமிசத் தலைவரின் விதவை மனைவிகளான ரத்தன் கௌரும், தயா கௌரும். முன்னவளுக்குப் பிறந்தவன் இளவரசன் முல்டானு சிங்; மற்றவளுக்குப் பிறந்தவர்கள் இளவரசர்கள் காஷ்மீரா சிங்கும் பெஷவ்ரா சிங்கும் (ரண்ஜீத் சிங் வென்ற இடங்களின் நினைவாகச் சூட்டப்பெற்ற பெயர்கள் இவை). மற்ற இராணிகள், சந்த் கௌரும்; லச்மியும், ரூப் கௌரும்; மற்றும் காங்ராவின் ராஜா ஸன்ஸார் சந்த் கடோச்சின் இரு புதல்விகளான மஹ்தாப் தேவியும் ராஜ்பான்ஸோவும்; இன்னும் ராஜ்தேவி; ஹறச் தேவி; தேவ்னோ; ராம் தேவி; ராணி தேவி; ஸமன் கௌர்; குலாப் கௌர்; பன்னத்; தான்னோ.

### கரக் சிங்

கரக் சிங் 1800-ல் மகாராணி ராஜ் கௌருக்கு மகனாகப் பிறந்தார். மறு வருடமே பைசாகி தினத்தன்று ரண்ஜீத் சிங் அவரைத் தம் வாரிசாகப் பிரகடனம் செய்தார். நெற்றியில் திலகமிட்டு அக்குழந்தை யானை மீது லாகூர் வீதிகளில் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டபோது மக்கள் நாணயங்களைப் பொழிந்தனர். இரவில் வாண வேடிக்கைகளும் தீபாலங்காரங்களும் இடம் பெற்றன; அவருடைய மூன்றாவது வயதிலேயே அவருக்கும் கண்ஹயாத் தலைவர் ஜெய்மல் சிங்கின் பெண் குழந்தை சந்த் கௌருக்கும் திருமணம் நிச்சயிக்கப்பட்டது. 1812-ல் மகாராஜா அவருக்குப் படாடோபமாகத் திருமணம் நடத்தினார்; மாப்பிள்ளை ஊர்வலம் குர்தாஸ்பூர் மாவட்டத்திலுள்ள ஃபத்தேகருக்குச் சென்றது. அவ்விளவரசர் முல்டான், காஷ்மீர், மஸாரிஸ் ஆகியவற்றின் மீது தம் தந்தை மேற்கொண்ட படையெடுப்புக்களில் பங்கு கொண்டவர். ரண்ஜீத் சிங் மரணத் தருவாயில் இருந்தபோது, கரக் சிங் மகாராஜாவானார். ராஜா தியான் சிங் அவரது பிரதமரானார். அப்பிரதமர் பிற்காலத்தில் தம்முடைய எஜமானருக்கு எதிராகவே சதி செய்து, மகாராஜா கரக் சிங் ஆங்கிலேயருடன் உறவு வைத்துக்கொண்டிருப்பதாக வதந்தியைக் கிளப்பிவிட்டு, அதன் மூலம் அவருக்கும் அவர் மகன் நௌநிஹால் சிங்கிற்கும் இடையே மன வேற்றுமையையும் சந்தேகத்தையும் வளர்த்து விட்டார் என்று நம்பப்படுகிறது. மகாராஜா கரக் சிங்குக்கு மெல்ல மெல்லச் சாகடிக்கும் விஷம் ஊட்டப்பட்டு, 1840, நவம்பர் 5-ஆம் தேதி அவர் உயிர் துறந்தார்.

சர்தார்களுள் அவருக்கு ஆதரவானவர்கள் பலர் இருந்தபோதிலும், கரக் சிங் தம்முடைய தந்தையின் திறமைகளுக்கும் பெருமைக்கும் பொருத்தமான வாரிசு அல்லர். அவர் தம்மையொத்த அதிபர்களின் பாராட்

டைப் பெறவில்லை. அவர் தம் தந்தையின் சார்பில் பல படையெடுப்புக்களை நடத்தினார்; ஆனால் அவரிடம் தலைமைக் குணங்கள் இருக்கவில்லை. அவர் எளிய சுபா வத்தினர். சோம்பல் குணம் படைத்தவர்; தம்முடைய சொத்து நிர்வாகத்தை ஜமதார் குஷ்ஹால் சிக்கின் சகோதரரான பையா ராம் சிங்கிடம் அவர் ஒப்படைத் திருந்தார். ராம்சிங் பணங்களைக் கையாடல் செய் வதாக ரண்ஜீத் சிங்கிற்குத் தகவல் எட்டியதால் அவர் மகனிடம் அவருடைய நிர்வாகத்தில் அதிகக் கவனம் செலுத்தும்படி கூறினார். 1816-ல் அவரே ராம்சிங்கைக் கைது செய்யும்படி உத்தரவிட்டதுடன், திறமை வாய்ந்த வரும் நம்பிக்கைக்குரியவருமான வேறு ஒருவரை அவருடைய இடத்தில் அமர்த்திக் கொள்ளும்படி கரக் சிங்கிடம் அரசவையில் பகிரங்கமாகச் சொல்லவும் வேண்டியதாயிற்று. ஆனால் மீண்டும் பழைய கதை யேதான் நடந்தது. லோகாயத ஆசைகளைவிடப் பிரார்த்தனைகளிலும், ஞானிகள் உறவிலும் கரக் சிங், அதிக ஈடுபாடு கொண்டிருந்ததாகத் தெரிய வருகிறது. ஒருகால் அவர் உலகப் பற்றற்ற முன்னோர் ஒருவரின் மறுவடிவமாக இருந்திருக்கலாம்.

### நௌ நிஹால் சிங்

கரக் சிங்கின் மகன் நௌ நிஹால் சிங் 1822- பிப்ரவரி 22-ஆம் தேதி பிறந்தார். அதைக் கேட்டு அளவிலாத மகிழ்ச்சி அடைந்த ரண்ஜீத் சிங் தம்மைப் பாராட்ட வந்த பிரபுக்களை வரவேற்பதற்காகத் தங்கத் தூண்களை நிறுத்திப் பந்தல் போடச் செய்தாராம். 1837-ல் அவர் தமது பேரனுடைய திருமணத்தை மிகப் படாடோபமான முறையில் நடத்தினார். நௌ நிஹால் சிங்கை அவர் தந்தை மகாராஜா கரக் சிங்கிற்கு எதிராக ராஜா தியான்சிங் ஏவி விட்டார்; கரக் சிங்கின் தகனம் நடந்த தினத்திலேயே நௌ நிஹால் சிங்கும் மரணமடைந்தார். ஈமக் கிரியைகள் செய்துவிட்டுத்

திரும்பும் வழியில் ஓர் அலங்கார வளைவு அவர் மீது சரிந்து விழுந்துவிட்டது. தியான் சிங்கே இவ்விபத்துக்கும் ஏற்பாடு செய்ததாகவும், விபத்து நடந்த உடனே அவசரம் அவசரமாக நௌ நிஹால் சிங்கை ஒரு பல்லக்கில் வைத்து அவருடைய ஜாகைக்கு எடுத்துச் சென்று அங்கே அந்த ராஜகுமாரரைக் கொன்றுவிட்டதாகவும் தெரிகிறது.

### ஷேர் சிங்

இவர் மஹ்தாப் கௌரின் இரட்டைக் குழந்தைகளுள் ஒருவரும் ஸதா கௌரின் பேரர்களுள் ஒருவருமாவார். ஸதா கௌர், பின்னளில் ரண்ஜீத் சிங்குடன் பகைத்துக் கொண்டதால் காவலில் வைக்கப்பட்டாள் — அவளும் அந்த இரு பையன்களும் வேண்டுமென்றே கரக் சிங்கின் திருமணத்திற்கு அழைக்கப்படவில்லை. எனினும் ஒரு கட்டத்தில் ஷேர் சிங், ரண்ஜீத் சிங்கின் பிரியத்திற்குரியவராகி, கரக் சிங் அவரது அபிமானத்தை இழக்க நேர்ந்தது.

கரக் சிங், நௌ நிஹால் சிங் ஆகிய இருவரும் இறந்தவுடன் ஷேர் சிங் லாகூருக்கு வந்தார். இதற்கிடையில் கரக் சிங்கின் விதவை மனைவி அரியணைக்கு உரிமை கொண்டாடவே ஷேர் சிங் முக்கெரியனுக்குத் திரும்பிச் சென்றார். 1842-ல் அவரும் சிறிது காலத்திற்கு மகாராஜாவானர். அவர், தியான் சிங்கை ஒழித்துக் கட்டத் திட்டமிட்டுக் கொண்டிருந்தபோது, அவரே அஜீத் சிங் சந்தன் வாலியா என்பவனல் 1843-செப்டம்பர் 15-ஆம் தேதி சுட்டுக் கொல்லப்பட்டார். அதே தினத்தில் தியான் சிங்கிற்கும் அதே கதி நேர்ந்தது.

### தலீப் சிங்

ரண்ஜீத் சிங்கின் ஏழாவது மகனை தலீப் சிங் 1838-ல் ராணி ஜிண்டானுக்குப் பிறந்தவர். ஷேர் சிங்

மரணமடைந்தவுடன் ஆறு வயது கூட நிரம்பாத தலீப் சிங் மகாராஜாவாகப் பிரகடனம் செய்யப்பட்டார். அவருடைய தாயார் 'ரீஜண்ட்' ஆனாள். தியான் சிங்கின் மகன் ஹீரா சிங் பிரதமரானார். புதிய அரசரின் ஒன்று விட்ட சகோதரர்களான காஷ்மீராவும், பெஷவ்ராவும் அவருக்கு எதிராகக் கலகம் செய்தனர்; ஆனால் அடக்கப் பட்டனர். ஹீரா சிங்கின் யதேச்சாதிகாரப் போக்கு காரணமாக அவரும் அவருடைய ஆலோசகர் பண்டித் ஜாலாவும் கால்ஸாப் படையினரால் 1844-ல் கொல்லப் பட்டனர்; ஜிண்டானின் சகோதரரான ஜவாஹர் சிங் பின்னர் பிரதமரானார். இளவரசன் பெஷவ்ரா சிங்கின் கொலைக்கு உடந்தையாக இருந்ததற்காக ஜவாஹர் சிங் 1845, செப்டம்பர் 21-ந்தேதி மரண தண்டனை விதிக்கப் பெற்றார்.

உள்நாட்டுப் பூசல்களினாலும், டல்ஹௌசியின் ஆதிக்க விஸ்தரிப்புக் கொள்கையினாலும் பஞ்சாப் விரைவிலேயே ஆங்கிலேயர் வசமாயிற்று. ஜிண்ட் கௌர் நேபாளத் திற்குத் தப்பியோடினாள்; மகாராஜா தலீப் சிங், ஃபத்தே கருக்கு (உத்தரப் பிரதேசம்) அகற்றப்பட்டு, அங்கே 1853-ல் கிறிஸ்துவ மதத்தைத் தழுவினார். மறு வருடம் இங்கிலாந்து சென்ற அவர் அங்கேயே மீதி நாட்களைக் கழிக்க உத்தேசித்தார். இடையில் 1861-ல் தம் தாயாரைத் தம்முடன் அழைத்துப் போகவும், 1863-ல் பிறந்த பூமியில் அவளைத் தகனம் செய்யவும் மட்டுமே அவர் இந்தியாவிற்கு வந்து போனார்.

23 வருடங்களுக்குப் பிறகு தலீப் சிங் ஆங்கில அரசாங்கத்துடன் தீவிரமான கருத்து வேறுபாடு கொண்ட தால் இந்தியாவிற்குப் பயணமானார். ஆனால் வழியில் ஏடன் துறைமுகத்தில் அவரைத் தடுத்து நிறுத்தி இங்கி லாந்துக்குத் திரும்பும்படி கூறினர். ஏடனில் தங்கியிருந்த குறுகிய காலத்தில் அவர் மீண்டும் சீக்கிய மதத்திற்கு

மாறினர். தம் வாழ்க்கையின் கடைசி நாட்களை ஐரோப்பாக் கண்டத்தில் கழித்த அவர், 1893-ல் பாரிஸில் காலமானர். அவருக்கு இரண்டு பிள்ளைகளும், மூன்று பெண்களும் இருந்தனர்.

### ஸதா கௌர்

ஸதா கௌர் ரண்ஜீத் சிங்கிற்கு நேரடியாக உறவில்லையாயினும், செயலூக்கம் நிறைந்த அவருடைய வாழ்க்கையின் ஆரம்ப வருடங்களில் அவள் முக்கியமான பங்கு பெற்ருள். அவளது கணவர் 1791-ல் ஒரு போரில் ரண்ஜீத் சிங்கின் தந்தையால் கொல்லப்பட்டபோதிலும், தனது ஆதிக்கக் கனவை நிறைவேற்றிக் கொள்ளும் ஆர்வத்தினுல் அவள் தனக்கேற்பட்ட மனப் புண்ணையும் மறந்து தனது மகள் மஹ்தாப் கௌரை ஸூகர் சாக்கியர்களின் இளம் தலைவரான ரண்ஜீத் சிங்கிற்குத் திருமணம் செய்து வைக்கவும் முன் வந்தாள். திருமண உறவு ஏற்பட்டபின், தம்பதிகளின் நலனைக் கவனித்துக் கொள்வதற்காக அவள் மஹ்தாப்புடன் குஜ்ரன்வாலாவிற்குச் சென்ருள். அவள் அவ்வாறு உடன் சென்றது மணமகளிடம் மணமகனுக்கு வெறுப்பு ஏற்படவே காரணமாயிற்று. எனினும் அவள் ரண்ஜீத் சிங் தலைமைப் பதவி பெறுவதற்கு அவரை ஆயத்தம் செய்தாள். அவள் தான் ஒரு பெண்மணியாதலால், முன்னணியில் நிற்க இயலாதென்பதை உணர்ந்திருந்தாள். அதனுல் நாளடைவில் அரசருக்குப் பின்னுலிருந்து கொண்டு ஆதிக்கம் செலுத்திவரலாம் என்ற நம்பிக்கையுடன் ரண்ஜீத் சிங்கின் முன்னேற்றத்திற்கு எல்லா வழிகளிலும் உதவி செய்து வந்தாள். இதில் அவளுடைய சொந்த நலன் கலந்திருந்தது; தன்னுடைய கட்சிக்கு ரண்ஜீத் சிங்கின் ஆதரவு கிடைத்ததால் அவள் தனது கன்ஹயா மிஸலின் நடைமுறை அதிபராகத் திகழ முடியும் என்பதை உணர்ந்து இருந்தாள். அவள் பட்டாலாவில் தனது அதிகாரத்தை

நிலைநாட்டிக் கொண்டதோடு, தன்னுடைய குறிக்கோளை நிறைவேற்றிக்கொள்ளுவதற்காக ஒரு பெரிய சைனியமும் வைத்திருந்தாள்.

ஆனால் குஜ்ரன்வாலாவில் அவளுடைய திட்டங்களெல்லாம் தவிடு பொடியாயின. அவள் ரண்ஜீத் சிங்கைத் தன் செல்வாக்கிற்குட் படுத்த முயன்றதால் அவருடைய தாயாருக்கும் அவளுக்கும் இடையே உறவு முறிந்து, அந்த இரு ஸ்த்ரீகளுக்கும் இடையே பூசல்கள் முற்றின. இடையில் 1796-1797-ஆம் ஆண்டுகளில் ஷா ஜாமன் படையெடுப்புக்கள் குறுக்கிட்டதால் ஸதா கௌர் தலைமைப் பதவியைத் தற்காலிகமாகத் திரும்பப் பெற்றாள். ரண்ஜீத் சிங்கின் தலைமையில் ஒன்று கூடி ஆப்கானியர்களைக் கடுமையாக எதிர்த்துப் போரிடும்படி சீக்கியத் தலைவர்களை அவள் தூண்டினாள். ஆனால் அந்த அபாயம் நீங்கிய உடனே, பழைய சதிகள் மீண்டும் தலையெடுத்தன ; இவற்றைப் பொறுக்க முடியாமல் ரண்ஜீத் சிங் இரண்டாவது திருமணம் செய்துகொள்ள முடிவு செய்தார். அதோடு நிர்வாகப் பொறுப்புக்களைத் தாமே மேற் கொள்ளவும் அவர் தீர்மானித்தார். ஸதா கௌர் கடுங்கோபத்துடன் வெளியேறியதோடு, மகளையும் பட்டாலாவிற்கு அழைத்துப் போய்விட்டாள். ஆனால் விதி மறுபடி குறுக்கிட்டது ; இப்போது ரண்ஜீத் சிங்கையும் ஸதா கௌரையும் தங்களுக்கு உதவி செய்யுமாறு லாகூர் மக்கள் முறையிட்டனர் ; இதே போல் அமிர்தசரஸ் இந்துக்கள் வேண்டுகோள் விடுத்ததன் பலனாக இவ்விரு நகரங்களுமே இளம் ஸிகர் சாக்கியத் தலைவரின் கீழ் வந்தன.

ரண்ஜீத் சிங்கின் இரண்டாவது ராணிக்குக் கரக் சிங்கும், மஹ்தாப் கௌருக்கு 'இரட்டைக் குழந்தைகளும்' பிறந்த போது அவருக்கும் மாமியாருக்கும் இடையே இருந்த உறவு மறுபடியும் மோசமாயிற்று. ஸதா

கௌர் தனது பேரன்களுள் ஒருவனுக்கு அரசுரிமையை மாற்ற விரும்பினாள். அவருடைய எண்ணம் பலிக்காமற் போனதும், அந்த இரட்டைக் குழந்தைகளைப் பட்டாலாவிற்குக் கூட்டிச் சென்றாள். அதன் பின்னர் தனது பேரன்களின் சார்பில் அவள் அடிக்கடி ரண்ஜீத் சிங்கை நச்சரிக்க ஆரம்பித்தாள். இளவரசன் ஷேர்சிங் அரசவையில் திறமையுடன் நடந்துகொண்ட போதிலும் ரண்ஜீத் சிங் தம்முடைய மூத்த மகனையே பட்டத்து இளவரசராக நியமித்தார். ஆங்கிலேயரோடு சேர்ந்துகொள்ள ஸதா கௌர் செய்த முயற்சியை முறியடிப்பதற்காக அவளை லாகூரில் காவலில் வைத்ததோடு அவளது செல்வத்தில் பாதியை அவருடைய இரு பேரன்களுக்கும் வழங்கினார். அவள் காவலிலேயே காலமானாள்.

*அத்தியாயம் 11*

# விசேஷ நிகழ்ச்சிகளும் கொண்டாட்டங்களும்

*1812-ல் நடைபெற்ற இளவரசர் கரக் சிங்கின் திருமணம் "இந்தியாவில் பல ஆண்டுகளுக்கிடையே நிகழ்ந்த மிக விமரிசையான கொண்டாட்டங்களுள் ஒன்ருக விளங்கும்" என்று மெட்கா:ப் ஊகித்தது உண்மையாயிற்று. பிரிட்டிஷ் கவர்னர் ஜெனரலுக்கும், பஞ்சாபைச் சேர்ந்த எண்ணற்ற மன்னர்களுக்கும் அதிபர்களுக்கும் ரண்ஜீத் சிங் திருமண அழைப்பிதழ் அனுப்பினுர். பாட்டியாலா, நாபா, ஜிண்ட், காங்ரா, கெய்த்தல் மன்னர்களும், கவர்னர் ஜெனரலின் பிரதிநிதியான கர்னல் ஆக்டெர் லோனியும் அவ்வைபவத்திற்கு வந்திருந்தனர். முல்டான், பஹவல்பூர் நவாபுக்களுக்கும் அழைப்பு அனுப்பப் பட்டிருந்ததால் அத்திருமணத்தில் கலந்து கொள்ளத் தங்கள் குடும்பப் பிரதிநிதிகள் சிலரை அவர்கள் அனுப்பி வைத்தனர்.*

*ஆயிரக்கணக்கானவர்கள் கலந்துகொண்ட மாப்பிள்ளை ஊர்வலம் லாகூரை விட்டுப் புறப்பட்டு அமிர்தசரஸ் வழியாகச் சென்றது. எல்லோரும் ஏறிச் செல்வதற்கு யானைகளும், ஒட்டகங்களும், குதிரைகளும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. அவர்கள் குர்தாஸ்பூர் மாவட்டத்தில் உள்ள :பத்தேகருக்குப் போய்ச் சேர்ந்தனர். முன் எப்போதும் கண்டிராத அளவு பிரமாதமாகக் கொண்டாட்டங்கள் நடைபெற்றன. மணமகனின் மாமனுர் ஒவ்வொரு நாளும் விருந்துபசாரங்களுக்கு ஆயிரக் கணக்கான ரூபாய் செலவு செய்தார். அவர் ரண்ஜீத் சிங்கின் செலவுகளுக்காகக் கொடுத்த ரூ. 50,000 தவிரத் தம்முடைய மகளுக்கு ஏராளமான ஸ்திரீதனமும்*

கொடுத்தார். விருந்தாளிகளுக்கும் நேர்த்தியான பரிசுகள் வழங்கப்பட்டன.

## நௌ நிஹாலின் திருமணம்

ரண்ஜீத் சிங்கின் பேரன் நௌ நிஹால் சிங்கிற்கும், சர்தார் ஷாம்சிங் அட்டாரி வாலாவின் மகளுக்கும் 1837–ல் நடைபெற்ற திருமண வைபவமும், ஏராளமான பொருட் செலவுடன் கோலாகலமாக நடந்தது, முன் போலவே நாட்டிலுள்ள பிரமுகர்கள் பலருக்கும் அழைப் பிதழ்கள் சென்றன; சேனாதிபதி ஸர் ஹென்றி ஃபேன் என்பவரைத் தமது பிரதிநிதியாகக் கவர்னர் ஜெனரல் இவ் வைபவத்திற்கு அனுப்பி வைத்தார். பெரும்பாலான சிற்றரசர்களும் சுயேச்சை மன்னர்களும் திருமணத்திற்கு வந்திருந்தனர். மாப்பிள்ளை ஊர்வலத்தில் ஏறக்குறைய ஐந்து இலட்சம் பேர்கள் கலந்துகொண்டனராம். அவர் களுள் பலர் போர் வீரர்களும், விருந்திற்கு வந்திருந்த அரசர்களின் சிப்பந்திகளும் ஆவர். ரண்ஜீத் சிங்கின் ஆட்கள் சிறிதும் ஓய்வு ஒழிவின்றி ஒவ்வொருவருடைய தேவையையும் வசதியையும் கவனித்துக்கொண்டனர்.

பிறகு கல்யாண கோஷ்டி அமிர்தசரஸிற்குச் சென்றது. தர்பார் சாஹிப்பிற்குச் சென்று தரிசித்த பிறகு, மகா ராஜாவே மணமகனின் நெற்றியில் 'ஸேஹ்ரா'வைக் (விவாக காலத்தில் தலையில் அணியும் புஷ்ப ஆபரணம்) கட்டினார். 'நியோந்த்ரா' அல்லது 'தாம்போல்' (மண மகனுக்குப் பரிசளிக்கும்) நேரத்தில் கவர்னர்-ஜெனர லின் சார்பில் பிரிட்டிஷ் பிரதிநிதி ரூ. 11,000 அளித்தார். அடுத்தபடி வெகுமதியளித்தவர் ராஜா தியான் சிங்— அவர் $1\frac{1}{4}$ இலட்சம் ரூபாய் அளித்தார். வேறு பல ராஜாக்களும், சர்தார்களும் தலைக்கு ரூ. 51,000 வீதம் பரிசளித்தனர். ஒவ்வொரு ஜாகிர்தாரும் தம் தம் சக்திக்கு ஏற்றபடி பரிசு அளித்தார். குதிரை வீரர்களும், காலாட் படையினருங் கூடத் தங்கள் அன்பளிப்பாக

ஒரு மாதச் சம்பளமான பத்து ரூபாயை அளித்தனர். இவ்வாறு வந்த பரிசுப் பணம் மொத்தம் சுமார் 17,000 பவுன்கள் இருக்குமென்று சிலர் கூறுகின்றனர்; மொத்தம் ஒரு கோடி ரூபாய் இருக்கும் என்று வேறு சிலர் கூறுகின்றனர். நாட்டியமும் விருந்தும் பிரமாதமாக நடந்தன; பொது மக்களில் ஒவ்வொருவருமே கொண்டாட்டத்தில் பங்குபெற்று மகிழும் அளவிற்கு ரண்ஜீத் சிங் வெகு தாராளமாகச் செலவிட்டு ஏற்பாடுகள் செய்திருந்தார்.

மாப்பிள்ளை ஊர்வலம், நண்பகலிற்குப் பின் அமிர்த சரஸ் விட்டுப் புறப்பட்டது; அதில் அழகாக அலங்கரிக்கப் பட்ட டஜன் கணக்கான யானைகளும், நூற்றுக்கணக்கான ஒட்டகங்களும், குதிரைகளும் சென்றன, ரண்ஜீத் சிங், வந்திருந்த பிற அதிபர்கள் ஆகியோரின் ஆயிரக்கணக்கான போர்வீரர்களும் ஊர்வலத்தில் கலந்து கொண்டனர். மகாராஜா அலங்காரமான அம்பாரியில் அமர்ந்து பொன் நாணயங்களையும் வெள்ளி நாணயங்களையும் அள்ளி வீசியவண்ணம் சென்றார்.

அட்டாரி என்னுமிடத்திற்கு ஊர்வலத்தினர் வந்து சேர்ந்தபோது சர்தார் ஷாம் சிங் வரவேற்றார். திருமண ஊர்வலத்தில் வந்த ஐந்து இலட்சம் பேர்களுள் ஒவ்வொருவரும் தங்குவதற்கும் உல்லாசமாகப் பொழுதைக் கழிப்பதற்கும் அவர் முதல்தரமான ஏற்பாடுகளைச் செய்திருந்தார். பிரிட்டிஷ் சேனாதிபதியின் மெய்காப்பாளராக வந்திருந்த அவரது மருமகன் லெப்டினெட் எட்வர்டு ஃபேன் அத்திருமணத்தைப் பற்றி விவரித்துள்ளார். மணமகன் நௌ நிஹால் சிங்கின் முகத்தை மறைத்திருந்த பெரிய முத்து வடங்களால் புனைந்த சேஹ்ராவை அகற்றியவுடன் பார்த்தால் அவன் "நலிந்து மெலிந்த பையனாக, பயங்கரமான அம்மைத் தழும்புகளுடன், ஆனால் புத்திசாலித்தனமும் நற்பண்பும் வாய்ந்தவனாகத் தோன்றினான்" என்று ஃபேன் கூறியுள்ளார்.

பண்டிதர்கள் திருமண மந்திரங்களை முழங்க, இரவு 9 மணிக்குத் திருமணம் நடைபெற்றது. இதன் நடுவே, ரண்ஜீத் சிங்கும், அவரது விசேஷ விருந்தாளிகளும் பொன்னாலும் வெள்ளியாலும் செய்த ஆசனங்களில் அமர்ந்து, மது அருந்திய வண்ணம் நடன நிகழ்ச்சிகளை ரசித்துக் கொண்டு இருந்தனர். திருமணச் சடங்கு முடிந்த பிறகு மகாராஜா ஒரு இலட்சத்திற்கும் அதிக மான பிராமணர்களுக்கும் பிச்சைக்காரர்களுக்கும் சாப் பாடு போட்டு, ஒவ்வொரு ரூபாய் தட்சிணையும் கொடுத் தார்.

மணமகள் வீட்டுச் சீர்வரிசைகள் வருமாறு; நல்ல ஜாதிக் குதிரைகள், பசுக்கள், எருமைகள், ஒட்டகங்கள் ஆகியவை தலா 101; 11 யானைகள்; ஏராளமான ஆப ரணங்கள்; 500 அழகான காஷ்மீர் சால்வைகள்; வெள்ளி யில் அழகிய வேலைப்பாடுடன் செய்யப்பட்ட உண் கலங்களும், கழுவு கலங்களும் இன்னும் பல பொருட் களும் இருந்ததாக ஃபேன் குறிப்பிட்டுள்ளார்.

விருந்தாளிகள் தங்களுக்குத் தேவையான அல்லது விருப்பமான பொருட்களை இலவசமாகப் பெற்றுக் கொள்வதற்காகப் பெண்வீட்டார் பல கடைகளையே அமைத்திருந்தனர். இவ்வாறு இரண்டு வாரங்கள் கழிந்த பின் மகாராஜா தாம் ஊர் திரும்ப வேண்டுமென்று வற்புறுத்தினர். அதற்கேற்ப, கட்டித் தங்கத்தாலான பல்லக்கில் மணப்பெண்ணை அமர்த்தி, அவளுடைய பெற் றோர்களும் மற்றைய உற்றார் உறவினர்களும் வழியனுப் பினர்.

திருமண ஊர்வலம் லாகூருக்குத் திரும்பிவந்து சேர்ந்த பின் மகாராஜா, ஷாலிமார் தோட்டத்தில் ஒரு பெரிய கொண்டாட்டத்திற்கு ஏற்பாடு செய்தார். ஒரு பக்கம் நாட்டிய மங்கைகள் தங்கள் கலைத் திறனையும், கட்டழ கையும் காட்டி நிற்க, மற்றொரு பக்கம் ரண்ஜீத் சிங்கின்

ஐரோப்பிய ஆண்-பெண் விருந்தினர்கள் சேர்ந்து நடன மாடிக் களித்தனர். ஸர் ஹென்றி ஃபேனுக்கும், அவரது தோழர்களுக்கும் லாகூரைச் சுற்றிக் காட்டினர். அவர்கள் கோஹினூர் வைரத்தையும், மற்ற ஆபரணங்களையும் கூடப் பார்த்தனர்.

### வண்ண ஹோலி

ஹோலிப் பண்டிகைக்கு இன்னும் இரண்டே தினங்கள் தாம் இருந்ததால், மகாராஜா தமது ஆங்கில விருந்தாளிகளை அதற்குத் தங்கிச் செல்லும்படி கேட்டுக் கொண்டார். கும்மாளங்கள் நிறைந்த அக்கொண்டாட்டம் அவர்களுக்குப் புதிய அனுபவமாகும். ரண்ஜீத் சிங் தமது பிரதானிகளுடன் வில்லும் அம்பும் ஏந்திய 30-40 அழகான மங்கைகளும் புடை சூழ அமர்ந்திருந்தார் என்று ஃபேன் வருணித்துள்ளார். அக்கொண்டாட்டத்தில் கலந்துகொண்ட ஒவ்வொருவர் முன்னிலையிலும் ஒரு சிறிய கூடையும் அது நிறைய சிவப்பு, மஞ்சள் வண்ணத் தூள் உருண்டைகளும் காணப்பட்டன; ஒவ்வொரு தங்கப் பீச்சாங்குழலும் இருந்தது. ரண்ஜீத் சிங் முதலில் ஸர் ஹென்றி ஃபேனின் வழுக்கையை தலையில் மஞ்சள் வர்ணத்தூளை அள்ளிக் கொட்டி இந்த வேடிக்கையை ஆரம்பித்து வைக்க, ராஜா தியான் சிங் அந்த ஆங்கிலேயரின் முகமெல்லாம் சிவப்பு வர்ணப் பொடியைப் பூசி விட்டார்; ரண்ஜீத் சிங் தயங்காமல் ஆப்கானியத் தூதர் மீதும் வர்ணப் பொடியை அள்ளித் தூவவே, அழகாக வாரிவிடப்பட்டிருந்த அவரது தாடியெல்லாம் ஒளிச் சிவப்பாகி விட்டது. மற்றவர்களும் அத்தூதரைப் படுத்திய பாட்டில் அவர் பந்தலை விட்டு ஓடினார், எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள், ஃபேன் தமது வருணனையின் முடிவில், கூறுகிறார்: ‘‘கடைசியாக நாங்கள் வீட்டுக்குப் புறப்பட்டபோது எங்களை லண்டன் நகரப் புகைப் போக்கிகளைச் சுத்தம் செய்வோர் பார்க்க நேரிட்டால்,

இவ்வளவு அசுத்தமானவர்களை எங்கள் கூட்டத்தில் சேர்த்துக்கொள்ள மாட்டோம் என்று விரட்டியிருப்பார்கள்.''

## ரூப்பாரில் பெண்டிங்க் பிரபுவுடன் சந்திப்பு

ரண்ஜீத் சிங் எந்தக் காரியத்தையும் படாடோபமான முறையில் செய்பவர். ஆங்கிலேயருடன் சமரசம் செய்து கொள்வதே நல்ல ராஜதந்திரம் என்று அவர் உணர்ந்த போது கவர்னர் ஜெனரல் வில்லியம் பெண்டிங் பிரபுவைச் சந்திக்க இசைந்தார். ரூப்பார் எனுமிடத்தில் இருவரும் 1831–அக்டோபர் 26 அன்று சந்திப்பது என்று முடிவாயிற்று. அவரது ஆட்கள் இதற்கென்று ஸட்லெஜ் நதிக் கரையில் பிரத்தியேகமான ஒரு பூங்காவை அமைத்ததுடன், அங்கிருந்த மேடொன்றில் இந்து ஆலயம் போன்ற அமைப்பில் வெள்ளி மேடையொன்றையும் நிருமாணித்தனர்.

16,000 குதிரைப்படையினர் சூழ்ந்துவர ரண்ஜீத் சிங் 25-ஆம் தேதி காலையில் ரூப்பாருக்கு வந்து சேர்ந்தார். மறுநாள் அதிகாலையில் அவர் தமது யானை மீது அமர்ந்து கவர்னர் ஜெனரலைச் சந்திக்கச் சென்றார். பெண்டிங்கும் அவரைச் சேர்ந்தவர்களும் முன்வந்து அவரை வரவேற்றனர். இரு தலைவர்களும் தழுவிக் கொண்டனர். பின்னர் ஆங்கிலேயக் கூடாரத்திற்குள் சென்றனர்; அங்கு மகாராஜாவிற்கு 200 தட்டுகள் நிறைய வெகுமதிகள் அளிக்கப்பட்டன. அவை தவிர இரண்டு யானைகளும் பல குதிரைகளும் அன்பளிப்பாக வழங்கப்பட்டன. மொழி பெயர்ப்பாளர்களின் உதவியோடு பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன, கடைசியாக, ஆங்கிலேயர் அழைத்து வந்திருந்த இந்திய மங்கைகளின் நடனத்துடன் அன்றைய நிகழ்ச்சிகள் முடிவுற்றன.

மறுநாள் காலையில் பெண்டிங்க், ரண்ஜீத் சிங்கைப் பார்க்கச் சென்றார். ரண்ஜீத் சிங் அவரை வரவேற்று

பிறகு, மகாராஜாவின் யானை மீது இருவரும் சிறிது தூரம் வரை சென்றனர். பின்னர், கவர்னர் ஜெனரல் வெள்ளி மேடைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்; அப்போது பஞ்சாப் பீரங்கிப் படை 21 குண்டுகள் வெடித்து மரியாதை செய்தது. ரண்ஜீத் சிங் தம்முடைய சர்தார்கள் சிலரைப் பெண்டிங்கிற்கு அறிமுகம் செய்துவைக்க, அவர் பதிலுக்குத் தம்முடைய அதிகாரிகளை ரண்ஜீத் சிங்கிற்கு அறிமுகம் செய்து வைத்தார். அடுத்து, காஷ்மீர் நடன மாதர்கள் சிறிது நேரம் நடனமாடினர். கவர்னர்-ஜெனரலுக்கு மகாராஜாவின் வெகுமதிகள் 100 தட்டுகளில் வந்தன; அவை தவிர யானை ஒன்றும் குதிரைகள் இரண்டும் அளிக்கப்பட்டன. ரண்ஜீத் சிங் பெண்டிங்கிற்குச் சொந்த ஹோதாவில் முத்துமாலை யொன்றையும் பரிசளித்தார்.

அடுத்தபடியாக இரு தலைவர்களும் பரஸ்பரம் அணிவகுப்பு மரியாதைகளைப் பார்வையிட்டனர். மாலையில் மகாராஜா பெண்டிங்க் பிரபுவிற்கும் அவரது மனைவிக்கும் விருந்து நடத்தினர். கூடாரத்திற்கு வெளியே வாண வேடிக்கைகள் நடந்தன; உள்ளே காஷ்மீர் மங்கைகள் நடனமாடினர். மது தாராளமாக வழங்கப்பட்டது; ஒரு கட்டத்தில் ஹோலிப் பண்டிகையில் நடந்தது போல விருந்தாளிகள் மீது தங்கத்தூள் தூவப்பட்டது. பின்னர், இரு கோஷ்டியினரும் ராஜாங்க விவகாரங்களை விவாதித்தனர். எனினும், இந்தச் சந்திப்பின் பலன் ரண்ஜீத் சிங்கிற்கும் சீக்கியர்களுக்கும் ஏமாற்றம் தருவதாகவே அமைந்தது.

### பிரோஸ்பூரில் ஆக்லண்டுடன் சந்திப்பு

ரஷ்ய அபாயத்தைச் சமாளிப்பதற்காக ஷாஷுஜாவைக் காபுல் அரியணையில் அமர்த்துவதென்று முடிவு செய்த பிறகு, ரண்ஜீத் சிங்கை இத்திட்டத்தில் பங்கு பெறச் செய்வதற்கு ஆங்கிலேயர்கள் விசேஷ முயற்சிகள்

செய்தனர். கவர்னர்-ஜெனரல் ஆக்லண்டு பிரபு சிம்லா வந்தபோது மகாராஜா ஒரு நல்லெண்ணத் தூது கோஷ்டியை அனுப்பித் தாமும் அவரும் சந்திக்கலாம் என்ற யோசனையைத் தெரிவித்தார்.

1838-ஆம் ஆண்டு நவம்பர் கடைசி வாரம் இருவரும் பிரோஸ்பூரில் சந்திப்பது என்றும், முதல் சந்திப்பு 29-ஆம் தேதி நடக்கலாம் என்றும் முடிவாயிற்று. கிரந்த் சாஹிப்பின் முன்பு பிரார்த்தனைகள் செய்துவிட்டு, ரண்ஜீத் சிங் ஊர்வலமாகப் பிரிட்டிஷ் முகாமிற்குச் சென்றார். கவர்னர்-ஜெனரலின் கூடாரத்தின் முன் ஒரே கூட்டமும் சந்தடியுமாக இருந்ததால், தர்பார் அமைதியாக நடைபெறுவதற்குச் சில ஆங்கிலப் பட்டாளத்தினர் ஏற்பாடு செய்தனர்.

வழக்கம்போல் கவர்னர்-ஜெனரல், மகாராஜாவிற்கு வெகுமதிகள் கொண்டு வந்திருந்தார். அவை பெரும்பாலும் துப்பாக்கிகள், கைத் துப்பாக்கிகள், உடைவாட்கள் போன்ற ஆயுதங்களே. இரண்டு சிறிய பீரங்கிகளும் அளிக்கப்பட்டன. அவற்றில் ரண்ஜீத் சிங்கின் முக உருவம் பொறிக்கப்பட்டிருந்ததால் அவருக்கு மிகுந்த திருப்தி ஏற்பட்டது. ஆக்லண்டு பிரபு தமக்காகச் சில குதிரைகளும் கொண்டுவந்திருப்பதாக மகாராஜா அறிந்தவுடன், ஆர்வத்துடன் வெய்யிலில் வெளியே ஓடிச் சென்று அக்குதிரைகளைத் தொட்டுத் தடவிப் பார்க்கலானார்; கவர்னர்-ஜெனரல் பதிலுக்கு மகாராஜாவின் முகாமுக்குச் சென்றபோது முன்கூறியது போன்ற குழப்பம் அங்கும் காணப்பட்டது.

மாலையில் உபசாரமும் காரியமும் கலந்த சந்திப்பு நிகழ்ந்தது, வாண வேடிக்கைகளும், நாட்டியமுமாக எங்கும் இரைச்சலாக இருந்தது. அதன் நடுவே ரண்ஜீத் சிங், ஆக்லண்டு பிரபுவிடம், ஷாஷுஜாவிற்குக் காபுல் அரியணையைப் பெற்றுத் தருவதில் தாமும் கிழக்கிந்தியக்

கம்பெனியுடன் ஒத்துழைக்க இசைவதாகத் தெரிவித்தார். அதற்குள் நடனங்கள் குறுக்கிட்டன; மகாராஜாவிற்கென்றே பிரத்தியேகமாக வடிக்கப்பட்ட மது எல்லோருக்கும் வழங்கப்பட்டது. ஆக்லண்டு பிரபு மது அருந்தாதவர் எனினும், மரியாதைக்காக அந்த மதுவை ஏற்றுக் கொண்டார்; ஆனால் அவருடைய சகோதரி எமிலி ஈடன், அதன் சுவை அருவருப்பாக இருக்கவே, ரண்ஜீத் சிங் பார்க்காதபோது அதை மெதுவாகக் கம்பளத்தின் மீது கவிழ்த்துவிட்டாள். ஆக்லண்டுக்கும் அவரது சகோதரிக்கும் இந்தச் சந்திப்பினால் நல்ல அபிப்பிராயமே ஏற்பட்டது. மகாராஜாவிடம் அவரது மக்கள் ஆழ்ந்த அன்பு பாராட்டுவதைக் குமாரி ஈடன் கண்டார்; ஆக்லண்டு பிரபுவோ, ரண்ஜீத் சிங்கை, தம்முடைய நண்பர்களுள் "வலிமையும் மதிப்பும் மிக்கவர்" என்று கருதினார்.

*அத்தியாயம் 12*

# நோயும் மரணமும்

ரண்ஜீத் சிங் வலிமை வாய்ந்த உடற்கட்டு வாய்ந்தவர். முறையான உடற்பயிற்சி, சரியான உணவு ஆகியவற்றின் மூலம் உடம்பைப் பாங்காக வைத்திருந்தார். எனினும் நீண்டகாலமாகச் சிக்கல் மிக்க இராணுவ ராஜதந்திரக் கடமைகளில் ஈடுபட வேண்டிய ஒரு தலைவரின் வாழ்க்கை மிகவும் சோர்வூட்டக் கூடியதே. எனவே, இத்தகைய கடுமையான பணிகளால் மகாராஜாவின் உடல் நலம் கொஞ்சம் கொஞ்சமாக உள்ளூறக் குன்றி வந்தது. ரண்ஜீத் சிங்கின் அபரிமிதமான மதுப்பழக்கம் வேறு அவர் உடல் நலிவை அதிகரித்தது. அவருக்காகப் பிரத்தியேகமாக வடிக்கப் பெற்ற மதுபானங்களைத் 'திரவ நெருப்பு' என்று குறிப்பிடுவார்கள். அவர் மது அருந்த அமர்ந்தால், பெரும்பாலும் முக்கியமாக விசேஷ தினங்களிலும், கௌரவ விருந்தாளிகளுடன் இருக்கும் வேளைகளிலும் — மிதமிஞ்சிக் குடிப்பார். முக்கியமாக மழைக்காலத்தில் நெடுநேரம் மது அருந்துவது வழக்கம். இம் மதுப் பழக்கத்தால் நாளடைவில் கல்லீரல் நலிந்ததுடன், நோய்கள் எளிதாகப் பற்றிக் கொள்ள ஏதுவாயிற்று.

முதன் முறையாக 1826-ஆம் ஆண்டு கோடையில் அவருக்குக் கடுமையான மலேரியாக் காய்ச்சல் கண்டது; அதிலிருந்து அவர் குணமாகிப் பழைய நிலை அடைய பல மாதங்களாயின. மெதுவாகக் குணமடைந்த போதிலும் அவர் மீண்டும் பழைய வலிமையைப் பெற்றார். சுமார் பத்து ஆண்டுகளுக்குப் பிறகுதான் அவரது உடல் நலம் மறுபடியும் பாதிக்கப்பட்டது.

1835-ஆம் ஆண்டு மழைக்காலத்தில் ஒரு நாளிரவு

தாக்கிய பக்கவாத நோய் அவருடைய உடம்பின் வலது பாகத்தை முடக்கி விட்டது. பேசும் சக்தியும் கடுமையாகப் பாதிக்கப்பட்டது. அவரது முகம் கோணிவிட்டது. நாக்கை அசைக்க முடியவில்லை. பக்க வாதத்தினால் அவருடைய மனோ பலமும் குன்றியது. எனினும், பக்கிரி அஸிஸுத்தீன் செய்த உதவிகளின் பலனாக ஓரளவு பேசும் சக்தியைப் பெற்றார். மேல் நாட்டு மருந்துகளையும் டாக்டரின் ஆலோசனைகளையும் அவர் வெறுத்ததால் அவருக்கு வைத்தியம் செய்வது சிக்கலாயிற்று. இரவெல்லாம் ஜுரத்தினால் அவதியுற்றாலும் காலையில் வெளியே போகவேண்டுமென்று பிடிவாதம் செய்வார்; அவர் பேசுவதைப் புரிந்துகொள்வது கடினமாக இருந்த போதிலும் வழக்கம் போல் தர்பார் நடத்துவார்.

சுமார் ஒன்றரை வருடங்களுக்குப் பிறகு இரண்டாவது முறை வந்த பக்கவாத நோய் அவரை ஒரே அமுக்காய் அமுக்கிவிட்டது. அவருடைய நடமாட்டம் ஒடுங்கிவிட்டது. இம்முறையும் உடலின் வலது பாகமே பாதிக்கப்பட்டது; பேச்சு முன்னிலும் தெளிவற்றுப் போயிற்று. எப்போதாவது குதிரை சவாரி செய்ய விரும்பினால், அவரைத் தூக்கி எடுத்துக் குதிரைமீது அமர்த்த வேண்டியிருந்தது. ரண்ஜீத் சிங் ஒரு நாள் வெளியில் காற்று வாங்கச் சென்றிருந்த இடத்தில் மதங் கொண்ட யானை ஒன்று அவரைத் தாக்கப் பாய்ந்து வந்தபோது, அவரால் பல்லக்கிலிருந்து வெளியே வர இயலவில்லை. நல்ல சமயத்தில் உதவி கிடைத்திருக்காவிட்டால் அந்த மதயானை அவரைக் கொன்றிருக்கும்.

1838-ஆம் ஆண்டு டிசம்பர் 24-ஆம் தேதி பிரோஸ்பூரில் ஆக்லண்டு பிரபுவிற்கு மகாராஜா விருந்து அளித்துக் கொண்டிருந்த வேளையில் மூன்றாவது முறை பக்கவாத நோய் தாக்கிற்று. அவர், கவர்னர்-ஜெனரலுக்கு மதுவை எடுத்துக் கொடுக்கப் போகும் நேரத்தில் அவர் உடம்பெல்லாம் கிடுகிடுவென்று நடுங்கிற்று; சட்டென்று தலை

ஒருபுறமாகச் சரிந்து விழுந்தது. மகாராஜாவிற்கு என்ன நேர்ந்ததென்று பார்ப்பதற்கு ஆக்லண்டு பிரபு பரபரப் போடு எழுந்து வருவதற்குள் ரண்ஜீத் சிங்கின் வாய் குழற, வாயிலிருந்து நுரைக்க ஆரம்பித்தது; அவரு டைய எஞ்சியிருந்த ஒரு கண்ணின் விழியும் நிலைக் குத்தி நின்றது. ஒரு வாரத்திற்குப் பிறகுதான் அவருடைய நிலைமை சிறிது சீராயிற்று; அவர் லாகூருக்கு எடுத்துச் செல்லப்பட்டார்.

இம்முறை ரண்ஜீத் சிங் பேசும் சக்தியை முற்றிலும் இழந்தார்; ஜாடை, சைகைகள் மூலம்தான் தம் எண்ணங் களை வெளிப்படுத்த வேண்டியதாயிற்று. மன்னரிடம் கொண்டிருந்த பரிபூரண பக்தியும், பாசமும்தான் இந்தச் சைகை பாஷையைப் பக்கிரி அஸிஸுதீன் புரிந்துகொள்ள உதவின. அவர் ரண்ஜீத் சிங்கின் வாயருகே காதை வைத்துக்கொண்டு கவனமாகக் கேட்பார். இருவரும் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வதற்குப் பெரிதும் முயல்வர். குளிர் காலம் வரவர மகாராஜாவின் அவஸ்தை அதிகமாயிற்று; தீராத ஜலதோஷமும் இருமலும் அவரைப் பிடித்துக்கொண்டன. எனினும், பிப்ரவரி மாதத்தில் அவருக்குச் சிறிது தெம்பு வந்தது. பிரதானிகள் மீண்டும் அவரிடம் வரலாயினர். விரைவி லேயே அவர் பொற் கோவிலில் பிரார்த்தனை செய்ய அமிர்தசரஸிற்குச் சென்றார்; அப்போது தர்மமாக ஏராளமான பணம் செலவிடப்பட்டது. மகாராஜாவின் உடல் நலமின்மையைப் பற்றிக் கவலை கொண்ட கவர்னர் ஜெனரல் அவரைப் பரிசோதிக்க இரண்டு ஆங்கில டாக்டர்களை அனுப்பி வைத்தார். ரண்ஜீத் சிங் வசித்து வந்த இடம் துர்நாற்றத்துடனும் ஆரோக்கியக் குறை வாகவும் இருந்ததால் அவரை வேறு ஒரு நல்ல இடத்திற்கு மாற்றினர். மகாராஜா நோயை எதிர்த்துப் போராடும் சக்தி மிகுந்தவர் என்று கூறப்பட்டபோதிலும் அவர்

அதிக நாள் உயிரோடிருக்க மாட்டாரென்று அந்த மருத்துவர்கள் தங்கள் குறிப்பில் தெரிவித்தனர்.

கோடை வந்தவுடன் அவர் நிலைமை மறுபடியும் மோசமாயிற்று; தமது முடிவு நெருங்கிவிட்டது என்று அவருக்கே தோன்றியது. குருமார்கள் இடைவிடாமல் பிரார்த்தனை நடத்துவது, ஏழைகளுக்கு அன்னதானம் செய்வது போன்ற சம்பிரதாய ஆன்மிகப் பரிகாரங்கள் மேற்கொள்ளப்பட்டன. கோவில்களுக்கும், புனித மகான்களுக்கும் பொன்னும் வெள்ளியும் தானம் செய்யப்பட்டன. ஜூன் 10–ஆம் தேதி மகாராஜாவின் நிலைமை மேலும் மோசமாயிற்று. இருமல் அவஸ்தை தவிர, கடுமையான புழுதிப் புயல் வேறு அடித்ததால் அவரால் உறங்கவே முடியவில்லை. அவரது கால்களில் வீக்கம் தோன்றியது; மலத்தில் இரத்தம் காணப்பட்டது. சோதிடர்கள் நிர்ணயித்திருந்தபடி ஜூன் 13–ஆம் தேதி அவரைக் கோட்டைக்கு எடுத்துச் சென்றனர். மீண்டுமொருமுறை பசுக்கள், குதிரைகள், யானைகள், பொன்னிலும் வெள்ளியிலும் செய்யப் பெற்ற பிராணிகளின் வடிவங்கள், ஏராளமான பணம் ஆகியவை தானம் செய்யப்பட்டன. அவருடைய எடையைப் போல் ஐந்து மடங்கு தானியம் தானம் செய்யப்பட்டது. பஞ்சாப் முழுவதிலும் மிருகவதை கூடாது என்று உத்தரவிடப்பட்டது. எனினும் ரண்ஜீத் சிங்கின் உடல் நிலையில் முன்னேற்றம் காணப்படவில்லை. இந்நிலையில் புதிய சிக்கல் ஒன்று தோன்றியது —— அவருக்கு இருதயப் படபடப்பு அதிகமாகிவிட்டது. தமது முடிவு நெருங்கிவிட்டதை உணர்ந்து, அரசாங்கப் பொறுப்புக்களை மகன் கரக் சிங்கின் கையில் ஒப்படைக்க அவர் முடிவு செய்தார். ஜூன் 21–ஆம் தேதி காலையில் கரக் சிங்கை மகாராஜாவாகவும், ராஜா தியான் சிங்கை அவருடைய முதலமைச்சராகவும் நியமித்து 'ஸம்மான் புர்ஜ்' என வழங்கிய அரண்மனையில் பிரகடனம் வாசிக்கப்பட்டது. அதற்கு முன்பாக

ரண்ஜீத் சிங் தமது மகனின் கையை எடுத்து டோக்ரா தலைவர் தியான் சிங் கரங்களில் வைத்து, கரக் சிங்கைக் கொண்டு அவருக்குக் 'கில்லாத்' ஒன்றை (அரசனால் சன்மானமாகக் கொடுக்கப்படும் ஆடை) வழங்கச் செய்தார்.

ஜூன் 22-ஆம் தேதி ரண்ஜீத் சிங்கின் நிலைமை இன்னும் மோசமடைந்தது. மரணத் தருவாயிலிருப்பவர் இவ்வுலகைவிட்டுச் செல்லும் சமயத்தில் பூமிமாதாவின் ஸ்பரிசம் பட வேண்டுமென்பதற்காக அவரைத் தரைமீது கிடத்தி வைப்பது இந்துக்களின் வழக்கம். மகாராஜாவின் முடிவு நெருங்கிவிட்டதை அறிந்து, ராஜா தியான் சிங் கருவூலத்திலிருந்து 10 இலட்சம் ரூபாய்க்கு நாணயங்களை எடுத்து, தரை மீது மேடை போலப் பரப்பி வைத்து அதன் மீது மிக விலையுயர்ந்த காஷ்மீர் சால்வையொன்றை விரித்தார். ரண்ஜீத் சிங்கைத் தூக்கி அம்மேடை மீது படுக்கவைத்தனர். துயரத்தில் ஆழ்ந்திருந்த முதல்மந்திரியின் கண்களிலிருந்து நீர் பெருகிக் கொண்டே இருந்தது.

இவ்வுலகில் தாம் தேடிய விலைமதிப்பில்லாத பொருட்கள், அணிகலன்கள் ஆகிய செல்வ மனைத்தையும் தம்மிடம் காண்பிக்குமாறு ஜூன் 24-ந் தேதி, வயோதிக மகாராஜா கூறினார். கோஹினூர் வைரத்தையும் எடுத்து வரச் சொன்னார்; அதைப் பூரி (ஒரிஸ்ஸாவில் உள்ளது) ஜகன்னாதர் ஆலயத்திற்கோ, அமிர்தஸரஸ் பொற்கோவிலுக்கோ அளித்துவிடவேண்டுமென்ற விருப்பத்தைக் குறிப்பால் உணர்த்தினார். ஆனால், கருவூலப் பொறுப்பாளரான பேலி ராம் மிஸ்ரா அது 'மகுட' அணிகலன் என்றும் அதனால் மகாராஜா கரக் சிங்கிற்கு உரியது என்றும் கூறி அதனைக் கொடுக்க மறுத்துவிட்டாராம். அது விலை மதிக்கவொண்ணாத வைரமாதலால், அதைக் கோயில் பிராமணர்களிடமிருந்து விலை கொடுத்து வாங்கக் கூடியவர் எவருமிருக்க மாட்டார் என்று பிரதானிகள் மகாராஜாவிடம் கூறி அவரது எண்ணத்தை மாற்றியதாக வேறு

சிலர் கூறுகின்றனர். எனினும், ரண்ஜீத் சிங் வழக்கம் போல் பெருவாரியாகத் தானம் செய்தார்; இவ்வகையில் கோவில்களுக்கு வழங்கப்பெற்ற மொத்தத் தொகை சுமார் ரூபாய் 2 கோடி இருக்கும். அடுத்தபடியாக அவர் தமது ஆயுதங்களைப் பிரபுக்களுக்கு வழங்கினர். இணை பிரியாத தம்முடைய ஆயுதங்களை மகாராஜா பிரிவதைக் கண்டு துக்கம் தாளாமல் பெரும்பாலான பிரபுக்கள் அழுதனர்.

ரண்ஜீத் சிங்கின் உயிர் மெல்ல மெல்ல ஒடுங்கிக் கொண்டிருந்தது. ஜூன் 26–ஆம் தேதி அவருக்குப் பிரக்ஞை தவறியது; மறுநாள் (வியாழக் கிழமை) சூரியாஸ்தனமனத்திற்கு முன்பாக அவர் உலக வாழ்வை நீத்தார். இரவெல்லாம் சடலத்தின் அருகே விழித்திருந்த ராணிமார் ஒவ்வொருவரும், மகாராஜா கரக் சிங், ராஜா தியான் சிங் மற்றும் பிரதானிகள் யாவரும் அளவற்ற துக்கத்தில் ஆழ்ந்திருந்தனர். தியான் சிங்தான் எல்லோரையும் விட அதிகமாக ஓலமிட்டார்; மன்னரின் சிதையில் தாமும் எரிந்து சாகப் போவதாக அவர் அறிவித்தார். ரண்ஜீத் சிங்கின் மனைவியருள் நால்வரும், ஏழு தாதிப் பெண்களும் இதே முடிவிற்கு வந்தனர். கடோச்சைச் சேர்ந்த ராணி குதான் எல்லோருக்கும் முதன்மையாக நின்ருள்; கரக் சிங்கிற்கும், நௌ நிஹால் சிங்கிற்கும், நாட்டிற்கும் உண்மையாக உழைக்க வேண்டுமென்று தியான் சிங்கிடம் அவள் வாக்குறுதி வாங்கிக் கொண்டு, அதேபோல அவ்விரு இளவரசர்களிடமும் ராஜா தியான் சிங்கின் பகைவர்கள் பரப்பக்கூடும் தவருன செய்திகளை நம்பி அவரிடம் சந்தேகம் கொள்ளலாகாது என்றும் சபதம் பெற்றுக் கொண்டாள்.

பொழுது புலர்ந்ததும் ஹரித்துவாரத்திலிருந்து தருவிக்கப்பட்ட புனித நீரில் ரண்ஜீத் சிங்கின் உடலைக் குளிப்பாட்டினார்கள்; பிறகு சந்தனம் பூசி, ராஜ உடை

அணிவித்தனர். பின்னர், சந்தனக் கட்டையால் செய்த பாடையில் மகாராஜாவின் உடலை வைத்தனர்; பின்னர் பிரேத ஊர்வலம், தகனக் கட்டத்திற்குப் புறப்பட்டது. ஊர்வலத்தின் முன்னணியில் 'சதிமார்கள்' (உடன் கட்டை ஏறப்போகின்ற ராணிகள்) சென்றனர்; செல்லும் வழியில் அவர்கள் தங்கள் அணிகலன்களைக் கழற்றி பிராமணர்களுக்குத் தானம் வழங்கினர். அதற்கு முன் பாக, மகாராஜாவைக் கடைசியாகப் படுக்க வைப்பதற் காக மேடை செய்யப் பயன்பட்ட நாணயங்களையும் இதுபோல் தருமம் செய்தனர். ராணிகளுக்கு அடுத்த படி, கரக் சிங்கும், பிரபுக்களும் சென்றனர்; அவர்கள் தலையிலும் காலிலும் ஏதும் அணியாதவர்களாகச் சொல் லொணாத் துயரத்தில் தலைகவிழ்ந்தவாறு சென்றனர்.

இறுதிச் சடங்குகளுக்காக முன்கூட்டியே சந்தனக் கட்டைகளை அடுக்கிச் சிதை அமைத்திருந்தனர். அதன் மீது மகாராஜாவின் உடலை வைத்தபின், ராணி குதான் சிதைமீதமர்ந்து ரண்ஜீத் சிங்கின் தலையைத் தமது மடி மீது வைத்துக் கொண்டாள்; மற்ற மூன்று ராணிகளும், தாதிப் பெண்களும் அவ்வுடலைச் சுற்றியமர்ந்தனர். பல்வேறு சமயப்பிரதிநிதிகள் பிரார்த்தனைப் பாசுரங்களை ஓதினர். பிரிந்த தலைவரின் மார்பு மீது பகவத் கீதையின் பிரதி ஒன்று வைக்கப்பட்டது. பிறகு, கரக் சிங் நெய்யில் தோய்த்த துணியொன்றால் எல்லா சதிமார்களையும், சந்தனக் கட்டைச் சிதையையும் மூடி, சிதைக்கு நெருப் பிட்டார். உடன்கட்டை ஏறிய பெண்மணிகள் எவரிட மிருந்தும் ஒரு முனகலோ, வேறு சப்தமோ வரவில்லை யென்று குறிப்பிடுகிறார் ஆஸ்போர்ன்.

ராஜா தியான் சிங் நெருப்பில் குதிக்கப் பலமுறை முயற்சித்தார்; ஆனால் அருகிலிருந்தவர்கள் ஒவ்வொரு முறையும் தடுத்து நிறுத்திவிட்டனர்.

இந்து தர்மப்படி, நான்காம் நாள் சிதையிலிருந்து அஸ்திகள் சேகரிக்கப்பட்டு, மகாராஜாவிற்கும் 11 சதி மார்களுக்குமாகத் தனித்தனிக் கலசங்களில் இடப் பட்டன. பீரங்கிகள் முழங்கி நாடு இறுதி மரியாதை செய்ய அஸ்திக் கலசங்கள் லாகூர் நகர வீதிகளின் வழியாக, ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டன.

அஸ்திக் கலசங்களை, அடுத்தபடியாகப் பல கட்டங் களில் தங்கி,—ஹரித்துவாரத்திற்கு கங்கையில் கரைப் பதற்காக எடுத்துச் சென்றனர். லாகூரில் நடந்தது போலவே, வழி நெடுகிலும் திரள் திரளான மக்கள் மௌனமாய் நின்றனர்; தங்கள் துக்கத்தையும், மறைந்த மகாராஜாவுக்கு இறுதி அஞ்சலியையும் அவர்கள் தங்களுக்குரிய முறைகளில் தெரிவித்துக் கொண்டனர்.

*அத்தியாயம் 13*

# வடிவமும் இயல்பும்

ரண்ஜீத் சிங் வாழ்ந்த காலத்தில் இந்தியாவிற்குப் புகைப் படக் கலை வரவில்லை. அதனால்தான் அவருடைய புகைப் படங்கள் எதுவுமில்லை, வரையப் பெற்ற ஓவியங்கள் மட்டும் உள்ளன —— இவையும் பின்னாளில் பலவிதமான சுகபோகங்களின் பலனாக அவரது தோற்றத்தில் பெரும் மாறுதல்கள் தோன்றிய பின்னர் வரையப் பெற்றவை.

1891-ல் முதன் முதலில் வெளி வந்த "பஞ்சாபின் வரலாறு" எனும் தமது நூலில் ஸையத் முகம்மது லத்தீஃப் மகாராஜாவின் தோற்றத்தைப் பற்றிக் கூறுவதாவது :

"பார்ப்பவர் உள்ளத்தைக் கிளறச் செய்யும் தோற்றம்; அவரது பண்பும் மொழியும் இனியன; உயிர்த் துடிப்பு நிறைந்த, தீர்க்கமான முக அமைப்பு; பழுதாகாமல் இருந்த அவரது ஒற்றைக் கண் அகன்றதாக, உயிர் துள்ளுவதாக, எதிராளியின் உள்ளத்தைத் துருவி ஆராயக் கூடியதாக அமைந்திருந்தது; அவ்விழியிலே மின்னிய அபூர்வமான ஒளியும் ஜ்வலிப்பும் அவரது உள்ளத்தின் கூர்மையையும் ஆற்றலையும் வெளிப்படுத்துவனவாக இருந்தன."

### குண நலன்கள்

சில சமயம் வெற்றி என்பது தற்செயலாகவோ அல்லது சந்தர்ப்ப வசத்தாலோ கிட்டலாம். ஆனால் ரண்ஜீத் சிங்கைப் போல பல்வேறு முயற்சிகளிலே ஒருவர் வெற்றி பெறுவது என்றால், அதிலும் தமது சாதனையை மீண்டும் மீண்டும் பல முறைகள் நிகழ்த்திக்

காட்டுவதென்ருல், அவரது வெற்றிக்கு முக்கியக் காரண மான அம்சங்கள் அவரது குணத்தில் பொருந்தியுள்ளன என்பது தெளிவு. இவ்வகையான ஆராய்ச்சியில் ரண்ஜீத் சிங்கை முழுமையாகக் கண்டால்தான், அவரை ஒரு தலைசிறந்த வெற்றி வீரராகவும், மாமன்னராகவும், இவை யனைத்திற்கும் மேலாக உயர் வகுப்பாரிடமும், பொது மக்களிடமும் செல்வாக்கு மிக்கவராகவும் உரு வாக்கிய பண்புகளைக் கண்டு கொள்ளலாம். இக் குண நலன்கள் பலவும் ஒன்று திரண்டு அவருக்கு அளித்த சக்தியால் அவர் தமது பாதையில் குறுக்கிட்ட இடர்ப் பாடுகளனைத்தையும் தகர்த்துக் கொண்டு முன்னேறிஞர். ரண்ஜீத் சிங், பஞ்சாபில் 40 நீண்ட ஆண்டுகள் அதா வது —— 1799 முதல் 1839 வரை —— ஆதிக்கம் செலுத் திஞர்; இத்தனை நீண்ட கால கட்டத்தில் போரிலும் ராஜ தந்திரத்திலும் நிகழ்த்திய சாதனைகளுக்கு இணையான சாதனைகளைத் தமது நிர்வாகத் துறையிலும் நிகழ்த்திக் காட்டிய அவர் உண்மையிலேயே ஒரு மகா புருஷர்தாம்.

### துணிவும் விடா முயற்சியும்

ரண்ஜீத் சிங் அசாத்தியத் தீரமும் வீரமும் கொண்டவர். அவர் மரணத்தைக் கண்டு ஒருபோதும் அஞ்சியதில்லை. அவருக்கு விதியில் அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு; எனவே அவர் உக்கிரமான போர்க்களத்தின் மத்தியில் நிற்பதற்கு அஞ்சியதில்லை. நெப்போலியனைப் போல அவரும், ஊக்கமுடையார் தோல்வி காணுர் என்பதில் நம்பிக்கை மிகுந்தவராகக் காணப்பட்டார். அவர் தமது இலட்சியங்களை முதலில் தெளிவாக வகுத்துக் கொண் டார்; அடுத்து அவற்றை ஒன்றன் பின் ஒன்ருகச் சாதித்துக் கொண்டே முன்னேறிஞர். அவர் ஒருபோதும் களைப்பை ஒப்புக்கொண்டதில்லை. மணிக்கணக்காகச் சோர்வின்றிக் குதிரை மேல் சவாரி செய்வார், ஏனெனில் அவரது உற்சாகம் களைப்பை அண்டவிடாது, உடல் நல

மில்லாத சமயங்களிலும் தமது அலுவல்களைப் புறக் கணிக்காமல், ராஜாங்கக் காரியங்களை ஒழுங்காகக் கவனித்து வந்தார். "அவரது துணிவு, தெளிந்த அறிவோடு கூடியது; அதனால் அனாவசியமாக அபாயத்தைத் தேடிக் கொள்ள மாட்டார்; தமது இலட்சிய வெற்றிக்கு அவசியமானால் எந்த அபாயத்தையும் எதிர் கொள்ளத் தயங்கவும் மாட்டார்; அவர் எப்போதும் தம்முடைய குறிக்கோள்களுக்கு ஏற்ற அளவில் பிரயாசை செய்வார்" என்று டபிள்யூ. ஜி. ஆஸ்போர்ன் கூறுகிறார்.

### ஆர்வமும் அறிவுக் கூர்மையும்

பிறவிப் படைத் தலைவரான ரண்ஜீத் சிங், புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்வதில் ஆர்வம் மிகுந்தவராகவும் விளங்கினார். ஒரு புதிய மனிதரை, அதிலும் முக்கியமாக அயல்நாட்டினர் ஒருவரை அவர் சந்திக்கும் போதெல்லாம் அவரிடம் கேள்வி மேல் கேள்வி கேட்டு முடிந்தவரை புதிய செய்திகளைக் கிரகித்துக் கொள்வார். அவருடைய கேள்விகள் பெரும்பாலும் அரசியல் பற்றியவையாக இருந்தபோதிலும், போர்க்கலை, சமயம், சமூக நிலை போன்ற முக்கியமான அறிவுத்துறைகளையும் அவர் மறந்து விடவில்லை. தாம் சந்தித்த இந்தியர்களுள் புதிய அறிவு தேடுவதில் முதன்மையானவர் மகாராஜாதான் என்கிறார் விக்டர் ஜாக்குவ மென்ட்; "அவர் என்னிடம் இந்தியா, ஆங்கிலேயர், ஐரோப்பா, நெப்போலியன் போனபார்ட், இன்னும் பொதுவாக இவ்வுலக விஷயங்கள் பற்றியும், அடுத்து நரகம், சொர்க்கம், ஆத்மா, இறைவன் சைத்தான் போன்ற விஷயங்களைப் பற்றியும் இலட்சம் கேள்விகள் கேட்டார்."

ரண்ஜீத் சிங் தாம் அறிந்துகொண்டதை மறப்பதேயில்லை. தம் ராஜ்யத்தில் இருந்த ஆயிரக் கணக்கான கிராமங்களில் ஒவ்வொன்றின் பெயரும், இருப்பிடமும் அவருக்கு நன்றாக நினைவிருக்கும். ஒரு சமயம்

ஸட்லெஜ்ஜின் வலது கரையில் உள்ள மாவட்டங்களையும் அவற்றின் பொறுப்பதிகாரிகளின் பெயர்களையும் ஒவ்வொன்றிலுமிருந்த படைவீரர்களின் எண்ணிக்கையையும் அவர் வரிசையாகக் கூறினாராம். அவர் கல்வி கற்காதவர் என்றாலும், மிகச் சிறந்த புத்திசாலி; பயனுள்ள தகவல்களை மறக்காத நினைவாற்றல் பெற்றிருந்தார். மகாராஜா 1831-ல் ரூப்பாரில் பெண்டிங்க் பிரபுவைச் சந்தித்தபோது ஆங்கிலேயரின் இராணுவத் தளவாடங்களைக் கவனமாகப் பார்வையிட்டுவிட்டு ஏராளமான கேள்விகள் கேட்டாரென்று ஜேம்ஸ் ஸ்கின்னர் என்பவர் தெரிவிக்கிறார். "ஆங்கிலப் படையினரைத் தமக்குப் பழக்க மில்லாத படைப் பயிற்சிகளைத் திரும்பத் திரும்பச் செய்து காட்டச் சொன்னார்...." இராணுவ விவகாரங்களில் ரண்ஜீத் சிங்கிற்கு இருந்த ஞானம் ஸ்கின்னரைப் பெரிதும் கவர்ந்தது. அவர் கூறுவதாவது :- சுதேசி போர்வீரர்கள் எல்லாரையும் விட எல்லா விதங்களிலும் உயர்ந்தவர் ரண்ஜீத். அவர் உயர்தர ஆங்கிலத் தளபதிக்கு ஈடான கூர்மதி பெற்றவர் போலத் தோன்றினார், ஆங்கிலப் படைகளின் தலைமைப் பொறுப்பைத் தாமே வகிப்பதுபோல் அவர் நடந்துகொண்டார்."

## சுகபோகத்தில் கட்டுப்பாடு

தம் காலத்து ஐரோப்பிய இராணுவத் தலைவர்கள் பலரையும் போலவே மகாராஜாவும் மதுவிலும் மாதர்களிடமும் ஆசை மிகுந்தவராக இருந்தார். திருமணத்தின் மூலமும் வேறு வழிகளிலும் அவருடைய அந்தப்புரங்களில் இடம் பெற்ற பெருவாரியான பெண்களைப் பற்றி முன்பே கூறப்பெற்றுள்ளது. அவர் அதிகப் போதை தரும் மதுவிலும் தணியாத விருப்பம் உடையவர். எனினும் அவர் வாழ்ந்த காலத்தை நோக்கும் போது, இவையெல்லாம் அவரைப் போன்ற மன்னருக்கு இழுக்காகக் கருதப்பெறவில்லை. மாட்டிறைச்சி தவிர

அநேகமாக எல்லா விலங்குகளின் மாமிசம், முத்துக்கள், விலையுயர்ந்த இரத்தினங்கள், கஸ்தூரி, அபின், பலவகை செடி கொடிகள், எல்லாவற்றையும் ஒன்ருகப் போட்டு அவர் பருகுவதற்குரிய மதுபானத்தை வடித்தனர் என்கிருர் ஹ்யூகல் பிரபு: அவர் அந்த மதுவைச் 'சைத்தானின் பானம்' என்றுதான் குறிப்பிடுகிருர். ஆனல் போரோ கடமையோ அழைக்கும்போது ரண்ஜீத் சிங் எல்லா ஆசைகளையும் தூர ஒதுக்கி வைத்துவிட்டு, தாம் வகுத்துக் கொண்ட குறிக்கோள்களை அடைவதற்குத் தளராமல் உழைப்பார். அவருடைய தாயாரும், அவரது மாமியார் ஸதா கௌருமே பெண்களைப் பயன்படுத்தி அவரை மயக்கிச் சில காரியங்களுக்கும் கொள்கைகளுக்கும் அவரை இணங்க வைக்க முயன்றனர்; ஆனல் அவரோ அவர்களின் சூழ்ச்சியைப் புரிந்துகொண்டதுடன் தமது சபலத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ளும் வழியையும் உணர்ந்திருந்தார். அதோடு, மற்றவர்க்கு விருந்து உபசாரங்கள் அளிப்பதன் மூலம் தம் நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்வதிலும் சமர்த்தர். கவர்னர்–ஜெனரலோ அல்லது அவரது தூதர்களோ அவரைச் சந்தித்தபோது, அவர்களைக் கௌரவிக்கும் பொருட்டு ஏராளமான செலவில் பிரமாதமான நடன–மது விருந்துகளுக்கு ஏற்பாடு செய்தார்; இவ்விதம் அவர்களைக் குஷிப்படுத்தும் போது அவர்களிடம் நுணுக்கமான கேள்விகளைக் கேட்டுத் தகவல் சேகரிப்பார்: தாமும் விருந்தினரும் தாராளமாகக் குடித்திருந்தாலும் அவர் மாத்திரம் மனம் குழம்பாமல் இருப்பார். போதை மிகுந்த மதுபானத்தை மிதமின்றி அருந்தும் பழக்கம் அவரது உடல் நலத்தை கெடுத்து, முடிவில் அவர் மரணத்திற்குக் காரணமாயிற்று என்பதை மறுக்க இயலாது. ஆனல் இது அவருடைய காலத்திற்கும் சமூகத்திற்கும் உரிய தீய பழக்கமாகும். இக்குறை அவரிடம் காணப்பட்டாலும் அவர் மதி மயங்கும்வரை குடித்ததோ அல்லது குடிகார

லைப் போல் நடந்துகொண்டதோ இல்லை. அத்துடன், மேலே குறிப்பிட்டுள்ளது போல், மணிக்கணக்காகக் கேளிக்கைகளில் மூழ்கியிருந்தாலும், அதை அடுத்துக் குறித்த நேரத்தில் தம் அலுவல்களைக் கவனிக்க எப் போதும் தயாராக இருப்பார்.

ரண்ஜீத் சிங்கின் இயல்பில் பல முரண்பாடான அம்சங்கள் காணப்பட்டதைப் பல பார்வையாளர்களும் குறிப்பிட்டுள்ளனர். அவர் கல்வி யறிவில்லாதவராயினும், விவேகமும் உலக அறிவும் மிக்கவராக இருந்தார். அவர் அபூர்வமான புத்திசாலி என்றாலும் சில வேளைகளில் அவரது ஆர்வம் குழந்தைத் தனமுள்ளதாக இருக்கும். அவர் முறையாகக் கற்காதபோதும் மற்றவர்களுடன் பழகியதாலும் பல்வேறு விவகாரங்களில் ஈடுபட்டிருந்த தாலும் தம் காலத்திய அரசாங்க மொழியான பாரசீக மொழியில் அவருக்கு நல்ல பரிச்சயம் இருந்தது. அறிஞர் பக்கிரி அஸிஸுதினின் நகல்களில் கூட சில சமயம் அவர் திருத்தங்கள் தெரிவித்ததாகக் கூறப்படுகிறது. தமக்குப் படிப்பு வாசனையில்லை என்றாலும், எப்போதும் அறிவை யும் அறிவியல் விஷயங்களையும் மதித்துப் போற்றினர். அவர் முதன் முறை பெஷாவர்மீது படை யெடுத்தபோது அங்கிருந்த முஸ்லிம் ஞானி ஒருவரின் நூலகத்தைப் பத்திர மாகக் காப்பாற்றும்படி தமது படையினருக்கு உத்தர விட்டிருந்தார். நாட்டிய மங்கைகளுடன் பகிரங்கமாகக் கிண்டலும் கேலியும் பேசுவாரெனினும், அரசாங்க இரகசியம் எதையும் வெளியிடமாட்டார்; அதோடு, தமது திட்டங்களை நிறைவேற்றிக் கொள்வதற்காக மற்றவர் களைக் கலந்தாலோசிப்பது போல் பாவனை செய்வதற்கும் அவருக்குத் தெரியும்.

ரண்ஜீத் சிங்கின் இயல்பு பற்றிய இப்பரிசீலனையை டாக்டர் டபிள்யூ எல். மக்கீரெகர் எழுதிய "சீக்கியர் வரலாறு" எனும் நூலிலிருந்து ஒரு மேற்கோள் காட்டி

முடிப்பது பொருத்த முடையதாகும். "அவருடைய (ரண்ஜீத் சிங்கின்) புன்னகை உள்ளத்தைக் கவர்வது; அவர் எப்போதும் சரளமாகவும் தடுமாற்றமின்றியும் பேசுவார். எப்பொருளைப் பற்றியும் தம்முடைய கருத்துக்களை வெளியிட வார்த்தைகளுக்குத் தடுமாறியதேயில்லை. உரையாடும்போது, சம்பந்தப்பட்ட விஷயத்தின் எல்லா அம்சங்களையும் பூரணமாக ஒரேயடியில் புரிந்துகொண்டு விட்டவர் போலத் தோன்றுவார். அவரது தர்க்க வாதத் திறனும் அலசி ஆராயும் சாமர்த்தியமும் மிக அபூர்வ மானவை."

## ஆட்சியாளர்

தனி மனிதராக மட்டுமல்லாது ஆட்சியாளர் என்ற முறையிலும் அசாதாரணமானவர் ரண்ஜீத் சிங்; பஞ்சாப் முழுவதையும் இணைத்து ஒரே ராஜ்யமாக்கியதுடன், பரந்த ஒரு நிலப்பகுதியில் தமது ஆதிக்கத்தை நிலைநாட்டுவதில் அவர் வெற்றி பெற்றாரென்றால், தமது அரசியல், நிர்வாகத் திறன்களைப் பயன்படுத்தித் தமது திட்டங்களை உருவாக்கி நிறைவேற்றியதே அதற்குக் காரணமாகும். இவற்றைத் தனியாகப் பரிசீலிப்பது அவசியம்.

மகத்தான ஆசைக் கனவுகளைக் கொண்டிருந்தது ரண்ஜீத் சிங்கின் முக்கிய குணமாகும். அதனால்தான் அவர் வெற்றி வீரராகத் தமது வாழ்க்கையைத் தொடங்கினார். ஆனால் அவர் தமது அபிலாஷையைச் செயல்படுத்தத் தக்க பண்புகள் வாய்க்கப் பெற்றவராக இல்லாதிருந்தால், ஆசைமட்டும் அவருக்கு இத்தனை முன்னேற்றத்தைத் தேடித் தந்திருக்க முடியாது; தமது வெற்றிகளை உறுதிப்படுத்திக் கொள்ளவும் மக்கள் தம்மை ஏற்றுக் கொள்வதுடன் அன்புடன் நேசிக்கவும் உதவிய பண்புகள் அவை. மக்கள் அவரை ஜெய கோஷமிட்டு வரவேற்றதை

குமாரி எமிலி ஈடன் நேரில் கண்டு கூறியுள்ளார்: "அவரித்தில் மக்கள் காட்டிவந்த அன்பு உள்ளத்தைத் தொட வல்லது. அன்று (அமிர்தசரஸ்) நகர வீதி வழியாகச் செல்கையில் அங்கு கூடியிருந்த மக்கள் 'மகா ராஜா' என்று உற்சாகத்துடன் கோஷமிட்டு அவரைத் தொட்டுப் பார்க்க ஆவலுடன் முயன்ற காட்சி எங்களனை வரின் உள்ளத்தையும் கவர்ந்தது."

மக்களைப் போலவே சிவில், ராணுவ அதிகாரிகளும் அவரிடம் பேரன்பு கொண்டிருந்தனர். அவர்களுள் மிகப் பெரும்பாலோர் அவருடைய வாழ்நாள் முழுவதும் அவரி டம் பூரண விசுவாசம் கொண்டிருந்தனர். அவர் உண்மை யிலேயே தலைசிறந்த ஒரு தளபதி; அவர் தமது அதிகாரி களுக்கு விளக்கமான உத்தரவுகளை இட்டதுடன் முடிந்த போதெல்லாம், முடிந்த இடத்திலெல்லாம், முன்னேறித் தாக்கும் தமது படையின் முன்னணியில் நின்று, நடத்திச் சென்று, தமது சகாக்களுடன் அபாயங்களைப் பகிர்ந்து கொள்ளவும் தயங்கமாட்டார். அவர் தம்முடைய படை வீரர்களின் நலத்தில் மிகுந்த அக்கறை காட்டினர். போர்க் களத்தில் வீழ்ந்தவர்களின் குடும்பங்களுக்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்தார்; படையெடுப்புகளில் வெற்றி தேடித் தந்த அனைவருக்கும் தாராளமாக வெகு மதிகள் அளித்தார். மகாராஜா எப்போதும் போருக்குச் செல்கையில் கைநிறையப் பொன் கங்கணங்கள் அணிந்து செல்வாரென்றும், துணிகரமான சாகசங்கள் புரிபவரைக் கண்டால் ஒரு ஜோடிக் கங்கணங்களை அந்த இடத்திலேயே பரிசாக அளிப்பாரென்றும் ஆஸ்போர்ன் கூறியுள்ளார்.

தம்மிடம் தோற்ற பகைவர்களையும் அவர் பெருந்தன் மையுடன் நடத்தினர். போரில் ஓர் எதிரியை அல்லது போட்டியாளரை முறியடித்தபின் அவர் வாழ வழியின்றி வாடும்படி விட்டதில்லை; தக்கதொரு ஜாகிரை அவருக்கு

வழங்குவார். இச்சந்தர்ப்பத்தில் ரண்ஜீத் சிங்கினிடம் தங்கள் ராஜ்யங்களை இழந்துவிட்டாலும், அவரை நல்ல போஷகராகவும் நண்பராகவும் கண்டுகொண்ட நவாபு களின் பிள்ளைகளும் மற்றச் சந்ததியினரும் அவருடைய அரசவையில் அமர்ந்திருந்தனர் என்பது குறிப்பிடத் தக்கது. எதிரியை ஒடுக்கத் தெரிந்தது போலவே கவரவும் தெரியும் அவருக்கு.

மனிதர்களை எடைபோடுவதில் ரண்ஜீத் சிங் தேர்ந்தவர். அவர் ஒருவரைக் கண்ட மாத்திரத்திலேயே அவரது தகுதியை அளவிட்டு அவர் எந்த ஸ்தானத்தில் பயனுள்ள வராக விளங்க இயலுமோ அங்கு அமர்த்துவார். இம்முறையில் அவர் தலைசிறந்த அமைச்சர்களையும் அதிகாரிகளையும் மட்டுமின்றி, திறமை மிக்க படைத் தலைவர்களையும் தேடிக் கொண்டார்; அவர்கள் வேறு சமயம் அல்லது இனத்தைச் சேர்ந்தவராக இருந்த போதிலும் தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட கடமைகளைத் திறம்பட நிறைவேற்றினர். அவரது நம்பிக்கைக்குப் பாத்திரமான உதவியாளர்களிலே இந்துக்களும் முஸ்லிம் களும் சீக்கியர்களும் மட்டுமன்றி, எண்ணிறந்த ஐரோப்பி யர்களும், ஆங்கிலோ-இந்தியர்களும் கூட இருந்தனர். இவ்வாறு அவர் சாதி, சமய, இன வேறுபாடு உடையவர் களைச் சந்தேகக் கண்கொண்டு பார்க்கும் மனப்பான் மைக்கு அப்பாற்பட்டவராய் விளங்கினார். இயல்பான அறிவுக் கூர்மைதான் அவர் இவ்வாறு பரந்த கண் ணோட்டமுடையவராக விளங்கக் காரணமாகும்.

அவரது குடிமக்களில் கணிசமான பகுதியினர் முஸ்லிம் கள், ஆனால் அவர் தம் மக்களனைவரையும் இதே பரந்த னப்பான்மையுடன் நடத்திவந்தார். முகலாய மன்னர் களும் அவர்களுடைய வழி வந்தவர்களும் இஸ்லாம் மதத் தைக் கடைப்பிடித்த முறை காரணமாகச் சீக்கிய அரசியல் வாதிகளும் கால்ஸாப் படையினரும் இஸ்லாத்தை

வெறுத்து வந்தனரெனினும், ரண்ஜீத் சிங், தமது முஸ்லிம் குடிமக்களிடம் வேறுபாடு காட்டுவதையோ அவர்களைக் கொடுமைப் படுத்துவதையோ அறவே வெறுத்தார்; அவ்வாறான தவறுகளைச் செய்யத் துணிந்தவர்களைக் கடுமையாகத் தண்டிக்கவும் செய்தார். தம்மீது ஒரு சீக்கியர் பன்றித் தோலை வீசிவிட்டார் என்று ஒரு முஸ்லிம் மகாராஜாவிடம் முறையிட்டபோது, ரண்ஜீத் சிங் உடனே அக்குற்றவாளிக்குத் தக்க தண்டனை யளிக்குமாறு கட்டளையிட்டார். சில பிரபுக்கள் அச் சீக்கியருக்காக மன்றாடியபோது கடுமையான தண்டனை அளிக்காவிட்டால் சீக்கியர்களில் முரட்டுத்தனம் மிகுந்தவர்கள் தமது முஸ்லிம் குடிமக்களின் வாழ்க்கையை நரகமாக்கி விடுவார்கள் என்று மகாராஜா கூறிவிட்டார். தான தருமங்கள் வழங்கியபோது, பெரும் பகுதி இந்துக் கோவில்களுக்கும் சீக்கியக் குருத்துவாராக்களுக்கும் சென்றபோதிலும் முஸ்லிம் மசூதிகளுக்கும் உரிய பங்கு கிடைத்தது. இடிந்து கிடந்த மசூதிகளை முஸ்லிம்களின் நன்மைக்காகப் புதுப்பித்துக் கொடுப்பதில் ரண்ஜீத் சிங் விசேஷ கவனம் செலுத்தினார். லாகூரைச் சீக்கிய 'மிஸல்' ஆட்சியாளர்களிடமிருந்து கைப்பற்றிய பின் அந்நகரிலிருந்த சுநேரி மசூதியை முஸ்லீம்களின் பொறுப்பில் ஒப்படைப்பதற்குக் காரணமாக இருந்தவரும் அவரே. ஷாஷுஜாவிற்கு ஆப்கானிஸ்தானத்தை வென்று தருவதில் அவர் 1838-ல் ஆங்கிலேயருடன் ஒத்துழைப்பதற்காக விதித்த நிபந்தனைகளுள் ஒன்று, முகம்மது கஜினி 1024-ல் கவர்ந்து சென்ற சோமநாத் இந்து ஆலயத்தின் வாயிற் கதவுகளை இந்தியாவிற்குத் திரும்ப அளிக்க வேண்டுமென்பதாகும். தமது குடிமக்கள் பக்தி சிரத்தையோடு கொண்டாடிய சமயங்களிடத்தில் ரண்ஜீத் சிங் கொண்டிருந்த அந்தரங்க சுத்தியான மரியாதையை இவையெல்லாம் விளக்கும்.

## யதேச்சாதிகாரி அல்லர்

ரண்ஜீத் சிங் சர்வாதிகாரியோ யதேச்சாதிகாரியோ அல்லர் என்றால் அது விசித்திரமாகத் தோன்றலாம். அவர் எல்லையற்ற அதிகாரங்கள் பெற்றிருந்தபோதிலும், அறிவு சான்ற அமைச்சர்களின் ஆலோசனைக்கும் மக்களின் ஏகோபித்த விருப்பத்திற்கும் ஏற்பத் தம் போக்கைத் திருத்திக் கொள்ள எப்போதுமே தயாராக இருந்தார். பாரசீக மொழியில் அரசமுத்திரையோடு கூடிய இரண்டு முக்கிய உத்தரவுகளை (ஃபர்மான்) பக்கிரி வஹிதுதீன் தமது நூலில் பிரசுரித்துள்ளார். இவை இன்று லாகூரில் பக்கிரி குடும்பத்தினிடம் உள்ளன.

முதல் கட்டளை பக்கிரி நூருதீன் பெயருக்கு எழுதப் பட்டது. ஒட்டு மொத்தமாக அதன் மொழி பெயர்ப்பு வருமாறு:

"லாகூர் நகரில் எவரும் மக்களை அடக்குமுறைக் குள்ளாக்கவோ, கொடுமைப்படுத்தவோ கூடா தென்று இதன்மூலம் மாட்சிமை தங்கிய மன்னர் மிகக் கண்டிப்பாக ஆணையிடுகிறார். மன்னரே லாகூர் மக்களில் எவருக்கேனும் பாதகமான கட்டளையிட் டிருந்தால், அது மாட்சிமை தங்கிய மன்னரின் நேரடிக் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டால் திருத்தப் பெறும்.... எவராவது அல்லது எந்த அதிகாரியாவது தங்கள் ஆலோசனை அல்லது உத்த ரவுப்படி நடக்கத் தவறினால், அவருக்கு முறையாக ஒரு கடிதம் எழுதுங்கள்; அதை ஆதாரமாகக் கொண்டு அவர் கீழ்ப்படியாததற்குரிய தண்டனையை மன்னர் வழங்குவார்."

இரண்டாவது கட்டளை சர்தார் அமீர் சிங்குக்கும் பக்கிரி நூருதீனுக்கும் எழுதப்பட்டிருந்தது. இளவரசர்கள், சர்தார்கள், பிரதானிகள் ஆகியோர் தங்கள் தலைக் கனத்தாலோ தான்தோன்றித் தனத்தாலோ மக்களுக்குத்

தீங்கு செய்துவிடாமல் காப்பாற்றவே, இக்கட்டளை பிறப்பிக்கப்பட்டது. அதன் விவரம் இது:

"இளவரசர்கள் கரக் சிங்கும், ஷேர் சிங்கும், மற்றும் ராஜா தியான் சிங், ராஜா சுசேத் சிங், அல்லது ஜமதார் குஷ்ஹால் சிங் எவரும் தவறான செயல் ஏதேனும் புரிந்தால், நீங்கள் அதை மாட்சிமை தங்கிய மன்னரின் கவனத்துக்குக் கொண்டு வர வேண்டும். இரண்டாவதாக, நீங்கள் உங்கள் நம்பகமான பிரதிநிதிகளைச் சர்தார்களிடம் அனுப்பி அவர்கள் தவறான செயல்கள் புரியலாகாது என்று தெரிவிக்கச் செய்யுங்கள். அவர்கள் அதன்படி நடக்காவிட்டால், விஷயத்தை மன்னரின் கவனத்திற்கு நீங்கள் கொண்டு வர வேண்டும்...........பலாத்காரமாக எவரது நிலத்தையும் எடுத்துக் கொள்வதையோ அல்லது எவருடைய வீட்டையும் இடித்துத் தகர்ப்பதையோ நீங்கள் அனுமதிக்கலாகாது; மரம் வெட்டிகள், கால்நடைத் தீனி விற்பனையாளர்கள்; குதிரைக்கு லாடம் அடிப்பவர்கள், முதலானவர்களை எவரும் கொடுமைப்படுத்துவதை நீங்கள் அனுமதிக்கலாகாது....எவரும் கடுமையாக நடத்தப்படுவதற்கு நீங்கள் இடங்கொடுக்கலாகாது. மாட்சிமை தங்கிய மன்னருக்கான மகஜர்களை யெல்லாம் அவருக்கு அனுப்பிவைக்க வேண்டும்....நாள்தோறும் கொத்தவாலைத் தருவித்து எல்லா நடப்புக்களைப் பற்றிய செய்திகளைச் சேகரிக்க வேண்டும்; ஏனெனில் ஒவ்வொருவரது உரிமைகளும் காப்பாற்றப்பட வேண்டும், எவரும் அடக்குமுறைக் குள்ளாகலாகாது."

இவ்வுத்தரவுகளின் வாசகங்கள் விசித்திரமாக அமைந்துள்ள போதிலும், 'மன்னர்களின் தெய்வீக உரிமைக்' கொள்கையிலோ, 'மன்னர்கள் தவறே புரியார்' என்ற கோட்பாட்டிலோ ரண்ஜீத் சிங்கிற்கு நம்பிக்கை கிடையாதென்பதை இவை தெளிவாகப் புலப்படுத்துகின்றன.

தாமும் தவறு செய்ய நேரலாம் என்பதை மகாராஜா உணர்ந்திருந்தார் என்பதோடு, தமது குறைபாடோ அல்லது மற்றைய ஆட்சியாளர்களின் (அதிபர்களின்) குறைபாடோ அடக்குமுறையில் சென்று முடிந்துவிடாமல் தடுப்பதற்கும் ஏற்பாடு செய்திருந்தார் என்பதற்கு இவ்விரு ஆணைகளும் அத்தாட்சிகளாகும். இதே நோக்கத்துடன் அரண்மனையில் எவரும் வந்து போக வசதியான பகுதியில் மகஜர்கள் பெட்டியொன்று வைக்கப்பட்டிருந்தது. அப் பெட்டிக்கான சாவி மகாராஜாவின் வசமே இருந்தது. அவர் பெட்டியிலிருந்து மகஜர்களை எடுத்துத் தமக்குப் படித்துக் காட்டச் சொல்வார். இவ்வாறு தமக்கு வரும் மகஜர்கள் மீது உடனடி நடவடிக்கைகள் எடுக்கச் செய்தார்.

இன்றைய அரசியல் சட்டப் பாதுகாப்பு ஏற்பாட்டிற்கு முன்னேடி போன்றதான உத்தரவாதம் ஒன்றையும் அவர் செய்திருந்தார். அதாவது, அரசாங்கத்தின் உயர்ந்த பதவிகளிலும் தாழ்ந்த பதவிகளிலும் அவர் எல்லா இனத்தவருக்கும் தகுந்த பங்களித்தார். அதோடு, தகுதிக்கே முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. அதனுல்தான் அவருடைய அதிகாரிகள் அனைவரும் அவரிடம் பூரண விசுவாசம் பூண்டிருந்தனர். அரசாங்கத்திலும் இராணுவத்திலும் உயர்ந்த தலைமைப் பதவிகளில் இந்துக்கள் சீக்கியர்களுடன் முஸ்லிம்களும் போதுமான பிரதிநிதித்துவம் பெற்றனர் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. முஸ்லிம்களான இரு அமைச்சர்கள், ஒரு கவர்னர், இலாஹி பக்ஷ், மியான் காவுஸ் என்ற இரு பெரிய தளபதிகள், மற்றும் பல சிறிய தளபதிகள் (கர்னல்கள்) அரசாங்கத்தில் பணியாற்றினர். போலீஸ், நீதி பரிபாலனம், சப்ளை ஆகிய இலாகாக்களில் 92 உயர்தர முஸ்லிம் அதிகாரிகள் பணியாற்றினர் என்று வஹிதுதீன் தெரிவிக்கிருர். இவ்வழிகளில் பொதுச் சொத்துக்கள் நன்கு பாதுகாத்துப் பராமரிக்கப்பட்டன.

*அத்தியாயம் 14*

# ரண்ஜீத் சிங்கின் குணச் சித்திரம்—1

*ரண்ஜீத் சிங் நவீன பஞ்சாபின் வரலாற்றில் மிகச் சிறப்பான இடத்தைப் பெற்றிருப்பதின் காரணங்கள் இந்நூலின் பல பகுதிகளிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஓர் அத்தியாயத்தில் இதன் முக்கியத்துவத்தையும் அவரது பலதரப்பட்ட மகத்தான சாதனைகளின் முக்கியத்துவத்தையும் அளவிடுவதற்கு முயன்றுள்ளோம். ஆனால் ரண்ஜீத் சிங் ஒரு தலைசிறந்த வெற்றி வீரராகவும் நிர்வாகியாகவும் பொலிந்தது போலவே மனிதர் என்ற முறையிலும் மகா புருஷராக விளங்கினார். அவருடைய சொரூபத்தின் இந்த அம்சமே இன்றைய இந்திய வாசகரின் கவனத்தையும் ஆர்வத்தையும் ஈர்க்கக் கூடும். உண்மையில், 'மிஸல்'களில் அவர் ஆற்றிய பணியையோ, பெயருக் கேற்றபடி பல்வேறு போர்க் களங்களில் புரிந்த சாதனைகளையோ விடப் பூரண மனித ராக அவரைப் புரிந்துகொள்ள உதவக் கூடியவை இந்த மனிதப் பண்புகள்தாம். ரண்ஜீத் சிங்கைப் போற்றிக் கொண்டாடுவோருக்கும் முதன் முறையாக அவரைத் தெரிந்துகொள்வோருக்கும் அவரை உயிருடன் காட்டு வதற்குக் கீழே பரவலாக வரும் பத்திகள் உதவலாம்.*

### அன்றாட அலுவல்கள்

*தாம் ஓர் அரசராக இருந்தபோதும், ரண்ஜீத் சிங் ஒழுங்கான பழக்க வழக்கங்களைக் கடைப்பிடித்தா ரென்றால் அது விசித்திரமாகத் தோன்றக் கூடும். அவர் அதிகாலையில் எழுந்துவிடுவார்; உடற் பயிற்சி செய்து தமது உடல் நலத்தை நறுவிசாக வைத்திருப்பார். குதிரையேற்றமோ, யானை யேற்றமோ, அல்லது*

பல்லக்கில் செல்லுவதோ அவரது உடற்பயிற்சியாகும். பஞ்சாபில் அக்காலத்தில் பிரபலமாயிருந்த தேகப் பயிற்சிகளும் அவருக்குத் தெரியும். தினந்தோறும் ஏராளமான தண்டால், பஸ்கி எடுப்பார்; ஒவ்வொன்றும் ஐந்து சேர் நிறையுள்ள இரண்டு கர்லாக் கட்டைகளும் இன்னும் சிறிது அதிகக் கனமுள்ள (ஒவ்வொன்றும் ஆறு சேர் நிறையுள்ளவை) இரண்டு கர்லாக் கட்டைகளும் தயார் செய்ய உத்தரவிட்டது பற்றிய குறிப்பு அந் நாளைய அரசாங்கத் தஸ்தாவேஜியில் காணப்படுகிறது. அப்போதுதான் நோயிலிருந்து குணமாகியிருந்ததால், தம் உடல் வலுவுக்கு ஏற்ற எடையில் இவைகளைத் தயாரிக்க ரண்ஜீத் சிங் உத்தரவிட்டிருந்தார். இரும்புக் கர்லாக்களைச் சுழற்றுதல் அல்லது எடை தூக்குதல் அவர் அதிகாலையில் செய்த உடற்பயிற்சிகளுள் ஒன்று. சில சமயங்களில் அவர் காலை நேரத்தில் உலாவச் செல்வதுண்டு

ரண்ஜீத் சிங்குடன் காலை நேரத்தில் ஒரு முறை வெளியே உலாவச் சென்றது பற்றி டபிள்யூ. ஜி. ஆஸ்போர்ன் சுவைபட விவரித்துள்ளார். மகாராஜா அநேக மாகத் தினந்தோறும், காலை வேளையில் நன்ருகப் பசி எடுப்பதற்காகத் திறந்த வெளியில் பல்லக்கில் செல்வது வழக்கம் என்கிருர் அவர். அப்போது ரண்ஜீத் சிங்குடன் 150 குதிரை வீரர்களும், ஒரு 12 ராத்தல் பீரங்கி வாகனமும் குதிரைமேல் இரண்டு பிரதானிகளும் செல்வதுண்டு. மகாராஜா பிரயாணம் செல்லுமிடத்தில், அவருடன் செல்லும் படையினர் சூரியோதயத்தில் அவரது கூடாரத்திற்கு முன் அணிவகுப்பு நடத்துவது வழக்கம்; பல குதிரைகள் சேணமும் கடிவாளமும் பூட்டப் பெற்றுத் தயாராக நிற்கும்; அவற்றுடன் யானையும் பல்லக்கும் கூடத் தயாராக இருக்கும்; தனியாக வேறு இரண்டு யானைகளும் இருக்கும்: அவற்றுள் ஒரு யானை மீது கூடாரத்துணி, விரிப்புகள் முதலியவை ஏற்றப்

பட்டிருக்கும், மற்றது உணவுப் பொருட்களைத் தாங்கி நிற்கும் - "சூரியோதயத்திற்குச் சற்று நேரம் கழித்து அவர் தமது கூடாரத்திலிருந்து பல்லக்கிலோ குதிரை மீதோ ஏறிக்கொண்டு, தமது மனம் போன போக்கில் திறந்த வெளியில் ஏதாவது ஒரு திசையில் செல்வார்; சாதாரணமாக, சுமார் நான்கு மணி நேரம் வெளியே சுற்றிவிட்டு அரண்மனைக்குத் திரும்புவார்; நண்பகல் வரை தர்பாரில் இருப்பார்; பிறகு மாலை வரை அந்தப்புறத்தில் இருப்பார்."

ரண்ஜீத் சிங் தமது காலை தர்பாரைச் சில வேளைகளில் அரண்மனைக்கு வெளியே, திறந்த வெளியில் நடத்துவதுண்டு. அவ்வாறு நடத்த விரும்பினால் நிழல் தரும் மரங்கள் நிறைந்த ஒரு சோலையைத் தேர்ந்தெடுப்பார்; உடனே அங்கு தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு தர்பார் கூடும்; அங்கும் மகாராஜா வழக்கம்போல் நண்பகல் வரை, நான்கு மணி நேரம், அரச காரியங்களைக் கவனிப்பார். பிறகு அவர் நண்பகல் உணவிற்குச் செல்வார். உணவு உட்கொள்வதில் ரண்ஜீத் சிங் நேரம் தவறுவதேயில்லை என்பதைப் பல பார்வையாளர்கள் குறிப்பிட்டிருக்கின்றனர். மகாராஜாவின் பேரன் நௌ நிஹால் சிங்கின் திருமணத்தில் கவர்னர் ஜெனரலின் பிரதிநிதியாகக் கலந்துகொண்ட ஸர் ஹென்றி ஃபேன், தம்மருகே அமர்ந்து படை அணிவகுப்பைப் பார்த்துக் கொண்டிருந்த ரண்ஜீத் சிங் திடீரென்று எழுந்து சென்றதைக் கண்டு எதுவும் புரியாமல் திகைத்தார். ஆனால் உணவு அருந்தவே அவர் சென்றார் என்பதை அறிந்ததும், முன்னறிவிப்பின்றியும் எதுவும் கூறாமலும் அவர் சென்றதால் ஏற்பட்ட அவமரியாதை பாராட்டாக மாறியது. சாப்பாட்டை முடித்துக்கொண்டு விரைவிலேயே ரண்ஜீத் சிங் மீண்டும் தம்மிடத்தில் வந்து அமர்ந்தார்.

நண்பகல் உணவிற்குப் பிறகு மகாராஜா சுமார் ஒரு

மணி நேரம் ஓய்வெடுத்துக் கொள்வார். பிறகு அவர் பிரார்த்தனை அறைக்குச் சென்று கிரந்த சாஹிப் வாசிப் பதைக் கேட்பார்; அதன்பின், சிறிது நேரம் அரண்மனை யிலோ கோட்டையிலோ உலவுவார். அடுத்தபடி, பகல் தர்பார்; அப்போது அவர் கணக்கு வழக்குகளைக் கவனிப்பார். அதன்பின் அவர் குதிரைச் சவாரி செய்வார் அல்லது படை அணிவகுப்பைப் பார்வையிடுவார். இம் மாதிரி வெளியே செல்லும் நேரத்தில் அவர் மக்களின் குறைகளைக் கேட்டுத் தெரிந்துகொள்வார்.

### காலை உணவு

ஆஸ்போர்னும் அவரது கூட்டாளியும் சிறிது நேரமாகவே ரண்ஜீத் சிங்குடன் இருந்து வந்தனர்—அவர்கள் காலை உணவு அருந்தவில்லை யாதலால், அவர்களையும் தம்முடன் உண்ண வருமாறு ரண்ஜீத் சிங் அழைத்தார். சில நிமிடங் களுக்குள் பிரமாதமான ஏற்பாடுகள் செய்யப்பட்டன— மேஜை, நாற்காலிகள் போடப்பட்டன. ஆனால் மகாராஜா மட்டும் பல்லக்கிலேயே இருந்தார்; பல்லக்குத் தூக்கிகள் சுமந்து கொண்டு நின்றனர். சேவகர்களில் ஒருவன் முன் னால் வந்து பல்லக்கின் உயரத்திற்குச் சரியாகக் குனிந்து நின்றான்; அவன் முதுகே 'மேஜை'யாகப் பயன்பட்டது. அதன் மீது தட்டு வைக்கப்பட்டது. விருந்தாளிகளுக்கும் மகாராஜாவிற்கும் ஒரே மாதிரியான உணவுதான்— சாதம், பல கறிவகைகள், இனிப்புக்கள், பால் ஆகியவை; எல்லோரும் கைகளாலேயே சாப்பிட்டனர். ரண்ஜீத் சிங் நன்றாகச் சாப்பிட்டார். இதில் குறிப்பிடத்தக்க ஓர் அம்சம் என்று ஆஸ்போர்ன் குறிப்பிடுவது; உணவு பதார்த் தங்கள், "சுத்தமான பச்சை இலைகளைக் கொண்டு திரவ பதார்த்தங்கள் கூட ஒரு சொட்டு வெளியேறாதபடி நெருக்கமாகத் தைத்து ஆக்கப்பெற்ற மிக நேர்த்தியான, குளிர்ச்சியான கிண்ணங்களில் (தொன்னைகளில்)

வழங்கப் பெற்றன.'' தொன்மை தைக்கும் இந்தக் கலை காலப்போக்கில் மறைந்துவிட்டதாகத் தோன்றுகிறது.

### உணவு

ரண்ஜீத் சிங்கின் உணவில் விஷமிட்டு விடாதபடி பார்த்துக்கொள்வதில் அவரது பணியாட்கள் காட்டிய கவனத்தைப் பற்றிக் குறிப்பிடுவது பொருத்தமாகும். அவர் வாழ்ந்த காலத்தில், அரசர்களுக்குரிய உணவில் விஷத்தைக் கலந்து கொடுப்பது என்பது அபூர்வமான வழக்கமல்ல. பக்கிரி நூருதீன் கீழ் பணியாற்றிய ஹக்கீம் விஷன் தாஸ் என்ற விசேஷ அதிகாரியின் மேற்பார்வையில் தான் மகாராஜாவிற்கான உணவு தயாரிக்கப்பட்டு வந்தது. பதார்த்தங்கள் தயாரிக்கப் பெற்றபின், அவை யாவும், 'பக்கிரியின்' முன்னிலையில், ருசிபார்ப்பதற்கென்றே நியமிக்கப் பெற்றுள்ளவர்களால் ருசி பார்க்கப்படும்; விஷச் சோதனைக்கென உள்ள விசேஷத் தட்டுக்களில் அவர்களுக்கு உணவு பரிமாறப் படும். ருசி பார்த்தவர்களிடம் ஏதாவது மாறுதல் தென் படுகிறதா என்று இரண்டு மணி நேரம் கவனிப்பார்கள். எல்லாம் சரியானபடி இருந்தால், அவ்வுணவைக் கலங் களில் இட்டுப் பூட்டுவர்; பூட்டுக்களில் பக்கிரி நூருதீனின் விசேஷ முத்திரையினுல் முத்திரையிட்டு விடுவார்கள். இவ்வாறு 'சுவைத்து சோதிக்கப்பட்ட' உணவுதான் மகாராஜாவிற்குப் படைக்கப்பட்டது. இந்தக் கடுமையான முன்னெச்சரிக்கைகள் தாம் மகாராஜாவிற்கு எவரும் விஷம் வைப்பதற்கு முயலாமல் தடுத்தன எனலாம்: இதைவிட முக்கியமாக, ரண்ஜீத் சிங்கின் வலிமை வாய்ந்த, கவர்ச்சிகரமான சொரூபம் காரணமாக எதிரி எவருக்கும் விஷமிட மனம் வரவில்லை என்று கருதலாம். இத்தகைய தீய முயற்சி எதுவும் நடந்ததாக எந்தத் தஸ்தாவேஜிலும் காணப்படவில்லை என்பது தான் முக்கியமானது.

### மருந்துகள்

மகாராஜாவிற்கு மருந்துகள் கொடுப்பதிலும் நிர்வாகத்தினர் சந்தேகக் கண்ணுடன் முன்னெச்சரிக்கையான, சோதனைகளைக் கையாண்டனர். எல்லோரையும் போல ரண்ஜீத் சிங்கும் எல்லா மருத்துவரிடமும் யோசனைகள் கேட்பார்; ஆனால் அவர்களுடைய யோசனைகளைப் புறக்கணித்துவிட்டு, குறிப்பிட்ட ஒரு சிலரின் சிகிச்சையை மட்டும் ஏற்றுக் கொள்வார். மகாராஜாவின் முகாமிற்கு ஆங்கிலேயர் குழு சிம்லாவிலிருந்து வந்து சேர்ந்த போது, பக்கிரி அஸிஸுதீன் ரண்ஜீத் சிங்கின் உடல்நிலை பற்றிய விரிவான குறிப்புடன் அக்குழுவில் இருந்த டாக்டர் ட்ரமாண்டினிடம் சென்று காட்டி, மருந்து தருமாறு கேட்டார். இவ்வாறு வாங்கி வந்த மருந்துகளை மகாராஜா அவ்வளவாகப் பயன் படுத்தவில்லை. அதற்குப் பதிலாக இவை முதலில் சில சர்தார்களுக்குக் கொடுக்கப்பட்டன. அவர் இப் பிரதானிகளைத் தம் முன்னிலையில் அம்மருந்துகளை உண்ணச் செய்தார். பிறகு அவர்கள் ஓரிடத்தில் அடைத்து வைக்கப்பட்டனர். சிறிது நேரத்திற்குப் பிறகு இம் மருந்துகளால் அவர்கள் உடம்பில் ஏதாவது மாற்றம் ஏற்படுகிறதா என்று கவனிக்கப்பட்டது. தீயவர்கள் அனுப்பக் கூடிய மருந்துகளை உண்பதால் மகாராஜாவிற்கு ஏதேனும் கெடுதல் ஏற்பட்டுவிடாமல் தடுப்பதற்காக இந்த முறை கையாளப் பட்டது.

தினா நகரில் (குர்தாஸ்பூர் மாவட்டம்) நடுவே கால்வாய் பாயும் தோட்டம் ஒன்றில் ரண்ஜீத் சிங் கோடை காலத்தைக் கழிப்பது வழக்கம். திறந்த முகப்போடு கூடிய துணிக் கூடாரத்தில் தங்குவார். வீரர்கள் சிலர் காத்து நிற்கத் திறந்த வெளியில் தூங்குவார். அவரது வாளும் கேடயமும் எப்போதும் தலையணைக்கருகிலேயே இருக்கும். காலையில் உடற் பயிற்சிக்காக அவர் குதிரைச்

சவாரி செய்ய விரும்பினால் அதற்கு வசதியாகச் சேணமிட்ட குதிரை ஒன்று கூடாரத்தின் முன் தயாராக நின்று கொண்டிருக்கும்.

### சளைக்காத குதிரை சவாரிக்காரர்

ரண்ஜீத் சிங் குள்ளமானவர்; அவர் கூனி நடக்கும் வழக்க முடையவராதலால் இன்னும் குள்ளமாகத் தோன்றுவார். ஆஸ்போர்ன் 1838-ல் அவரைச் சந்தித்த சமயம், மகாராஜா நடக்கும்போது காலில் பலமே இல்லையோ என்று தோன்றியதாம்; ஆனால் அவர் குதிரை மீது ஏறி உட்கார்ந்தவுடன் பலவீனமெல்லாம் எங்கோ பறந்தோடி விடும். உண்மையில், குதிரைச் சவாரிதான் ரண்ஜீத் சிங்கிற்கு மிக விருப்பமான தேகப் பயிற்சியாகும். மகாராஜாவிற்கு ஏதாவது மனக்கவலை இருக்கும்போது அவர் குதிரைச் சவாரிக்குச் செல்வது வழக்கம் என்றும், குதிரைமேல் சவாரி செய்து கொண்டிருக்கும்போது மிக முக்கியமான பல முடிவுகள் செய்யப் பட்டன என்றும் பக்கிரி குடும்பத்தினரிடமிருந்து தெரிய வருகிறது. ரண்ஜீத் சிங்கின் குதிரைப் பித்து பற்றி முன்னொரு பகுதியில் கூறப்பட்டுள்ளது. அவருடைய குதிரைகளுக்கான சாதனங்கள் விலையுயர்ந்தவை; அவற்றின் மொத்த மதிப்பு ரூபாய் 50 இலட்சத்திற்குக் குறைவில்லை. ஒரு குதிரைக்கு 20,000 ரூபாயோ அதற்கும் மேலாகவோ விலை கொடுக்கவும் அவர் தயங்கவில்லை. ரொக்கமாகச் செலுத்தப்பட வேண்டிய திறைக்குப் பதிலாகக் குதிரைகளைப் பெற்றுக்கொள்ளவும் அவர் தயாராய் இருந்தார்.

ரூப்பாரில் தம்முடைய சர்தார்களுடன் மகாராஜா குதிரையேற்றத்தில் பல அபூர்வமான சாகசங்களைச் செய்து காட்டினார். அவரும் குதிரைக் கவாத்துக்களில் பங்கெடுத்துக் கொண்டார். 42 வயதில் கூட வேகமாகக்

குதிரையில் வந்து வாள் முனையில் ஒரு தம்பளரைக் கெந்தியெடுக்கும் போட்டியில் மூன்று தடவை வெற்றி பெற்றார்,

## குழந்தைகளிடத்தில் அன்பு

அவசியம் நேரும்போது மிகக் கடுமையாக நடந்து கொள்ளவும், கொஞ்சங்கூட உணர்ச்சிகளுக்கு இடங் கொடாமல் இருக்கவும் ரண்ஜீத் சிங்கால் இயலு மென்றாலும், குழந்தைகளிடத்தும், வளர்ப்புப் பறவைகள், பிராணிகளிடத்தும் அவருக்கு அபாரப் பிரியம் உண்டு. அவர் இரக்க சுபாவம் மிகுந்தவர்; அழகும், அறிவு முடைய சிறுவர்களை தம் அருகே வைத்துக்கொண்டு அவர்களுடன் விளையாடுவதில் அவருக்கு விருப்பம் அதிகம். இம்மாதிரி விளையாடிக் கொண்டிருக்கும் நேரத்தி லேயே அவர்களுள் அழகான, சூட்டிகையான சிறுவர் களைப் பொறுக்கி யெடுத்து அவர்களைத் தமது சொந்த மேற்பார்வையில் வளர்த்து வரச் செய்வார். வயது வந்தபின் அவர்களை வேலையில் அமர்த்திக் கொள்வதற் காக இவ்வாறு செய்வார். ராஜா தியான் சிங்கின் மகன் ஹீரா சிங்கும், பக்கிரி குடும்பத்தைச் சேர்ந்த சில பையன் களும் இவ்வகையில் பிற்காலத்தில் மேன்மையான நிலையை அடைந்தனர்.

ராஜா ஷேர்சிங்கின் மகனும், மகாராஜாவின் பேரனு மான பெர்தாப் (பிரதாப்) சிங்கை ஆஸ்போர்ன் வான ளாவப் புகழ்வது இங்கு கவனிக்கத் தக்கது. ரண்ஜீத் சிங்கைச் சந்திப்பதற்காக அனுப்பப் பெற்ற ஆங்கிலேயர் கோஷ்டியானது ஷேர் சிங்கின் ஜாகிர் வழியாகச் செல்ல வேண்டியிருந்தது; அப்போது ஷேர் சிங்கின் மகனுக்கு 7 வயதுதான், எனினும் ஷேர் சிங் அவனை ஆங்கிலே யருடன் துணையாகச் செல்லுமாறு அனுப்பினார். பிரதாப் சிங் அழகாக உடை அணிந்திருந்தான்; வேலைப்பாட மைந்த கேடயம் ஒன்றையும் குட்டைத் துப்பாக்கி

ஒன்றையும் அவன் ஏந்தியிருந்தான். அவன் நல்ல புத்தி சாலியாகவும் அகன்ற, சுடர்விடும் விழிகளோடு பார்ப்ப தற்கு அழகாகவும் இருந்ததாக ஆங்கிலேயர் ஆஸ்போர்ன் கூறுகிறார். அச்சிறுவன் நாசூக்கான பண்புகளுடன் நடந்துகொண்டான்; சம வயதுச் சிறுவர்களிடத்தில் சாதாரணமாகக் காணப்படும் அசட்டுத்தனம் எதுவும் அவனிடம் இல்லை. கவர்னர் ஜெனரலின் சார்பில் ஒரு தங்கக் கடிகாரமும் சங்கிலியும், பிரதாப் சிங்கிற்கு அளிக்கப்பட்டபோது அச்சிறுவன் மிகுந்த கண்ணியத் துடன் நன்றி தெரிவித்தான். அக்கோஷ்டியினரிடம் "ஷேர்சிங்கின் மகன் என்றும் ஆங்கில அரசாங்கத்தின் நண்பனாக இருப்பான் என்று ஆக்லண்டு பிரபுவிடம் தயவு செய்து தெரிவியுங்கள்", என்று அவன் கூறிய தாக ஆஸ்போர்ன் குறிப்பிட்டுள்ளார்.

மகாராஜாவைப் பற்றி எழுதியுள்ள நூலில் வஹிதுதின் குறிப்பிட்டுள்ள அதிசயப் பொருட்களுள் ஒன்றிலிருந்து ரண்ஜீத் சிங்கின் குழந்தைப் பாசத்தையும், அழகுணர்ச்சி யையும் புரிந்துகொள்ளலாம். அந்த அதிசயப் பொருள் ஒரு "சஞ்சார பங்களா." அக்கட்டிடத்தின் சுவர்கள் வெள்ளியிலானவை; மேலே துணியால் விதானம். அந்நாளில் கிடைக்கக்கூடிய மிக அழகான இருக்கைகள் முதலியன அதில் இடம்பெற்றிருந்தன. அம்மாளிகையை எட்டு யானைகள் இழுத்துச் செல்லும்; ஒரு ஏணி வழியாக அதற்குள் ஏறி அமர வேண்டும். சக்கரங்களோடு கூடிய இக்கட்டிடம் விழாக் காலங்களில் அரச குடும்பக் குழந்தை களும் அவர்களுடைய நண்பர்களும் உல்லாசச் சவாரி செய்யப் பயன்படுத்தப்பட்டது. இதில் ஒரு விசேஷ அம்சம் என்னவென்றால் அப் பங்களாவில் ஸ்பிரிங்குகள் இல்லாததால், அது ஓடும்போது அங்குமிங்கும் அசைந் தாடுவது குழந்தைகளின் மகிழ்ச்சியை அதிகரிக்கும். டில்லி போன்ற பெரிய நகரங்களில் இந்நாளில் குழந்தை களின் மகிழ்ச்சிக்காக ஏற்பாடு செய்யப்பெற்றுள்ள

'குட்டி ரயில்களின்' முன்னோடிதான் இந்தச் சஞ்சார பங்களா. அதனைக் கண்டுபிடித்து தம் காலத்துச் செல்வக் குழந்தைகளுக்குப் பயன்படச் செய்ததற்காக ரண்ஜீத் சிங் பாராட்டுக்குரியவர்.

## வளர்ப்புப் பிராணிகள்

குழந்தைகளைப் போலவே வளர்ப்புப் பிராணிகளிடமும் அவர் அன்பு காட்டினார். வீட்டுப் புருக்களிடத்தும் வேடிக்கைகள் செய்யும் குரங்குகளிடத்தும் அவருக்கு அளவு கடந்த பிரியம்; அவைகளுக்குத் தம் கையாலேயே இரை ஊட்டுவார். அவர் தலை மீதும் தோள்கள் மீதும் புருக்கள் கொலுவிருப்பது சாதாரணமான காட்சி; எப்படியாவது நாள்தோறும் அவைகளோடு சிறிது நேர மாவது பொழுதுபோக்குவார்; அவைகளிடத்தில் அவர் தனி மதிப்பு வைத்திருந்தார்; அதனால், கடைசி முகலாய மன்னரான பஹதூர்ஷா ஜாபர் ஒரு சமயம் அவருக்கு விசிறி-வால் புருக்கள் சிலவற்றையும், வேடிக்கைகள் செய்து காட்டும் சில குரங்குகளையும் அன்பளிப்பாக அனுப்பியபோது அவைகளுக்கு அவர் வரவேற்பு விழா நடத்தினார். அவர் வீரமும் தீரமும் போர்க் குணமும் கொண்டவர் எனினும், முரட்டுப் பறவைகளான கழுகுகள், ராஜாளிகள் முதலியவற்றை விரும்பியதில்லை. அவருடைய வேட்டையில் ஏற்பட்ட ஓர் அனுபவம் இக்குணத்துக்கு ஒரு உதாரணம். ஒரு தடவை வேட்டைத் துணைவர்கள் சிலர் ஒரு புலிக் குட்டியைப் பிடித்துவந்து, அவர் கூடாரத் திற்கருகே ஒரு கூண்டில் அடைத்து வைத்திருந்தனர். இரவில் ஏதோ 'சலசலப்'பையும் முனகலையும் கேட்டு எழுந்த மகாராஜா வேட்டைக்காரர்களை அனுப்பி அவ்வோசை எங்கிருந்து வருகிறதெனப் பார்க்கச் சொன்னார். அவர்கள் பார்த்துவிட்டு வந்து அக்குட்டியின் தாய்ப்புலி, குட்டியை இழந்ததற்காக வேதனைப் பட்டுக் கொண்டு நிற்பதாகத் தெரிவித்தார்கள். குட்டியை உடனே விடுதலை செய்யுமாறு அவர் உத்தரவிட்டார்.

## குறை. நிறைகள்

ரண்ஜீத் சிங்கின் தோற்றம் கவர்ச்சிகரமானதல்ல என்பது ஆஸ்போர்னின் கருத்து. அவரை முதல் முறை பார்க்கும்போது சிறிது அருவருப்புக் கூட ஏற்படும் என்கிறார் அவர். இரண்டாவது முறை பார்க்கும்போது தான் அவர் முகத்திலும், அலைபாயும் ஒற்றைக் கண்ணி லும் பொலியும் அறிவின் தீட்சண்யத்தைக் கண்டுகொள்ள லாம். மேலும், 58–வது வயதில் அவருடைய நீண்ட, வெண்மையான தாடியும் மீசையும் அவரது வயதிற் குரியதை விட முதிர்ந்த, மரியாதைக்குரிய தோற்றத்தை அளித்தனவாம்.

மகாராஜா தம்மை அலங்கரித்துக் கொள்வதில் அதிகக் கவனம் செலுத்துவதில்லை; அவருடைய அழகற்ற உருவம் இதற்குக் காரணமாக இருந்திருக்கலாம். ராஜாங்கக் கொண்டாட்டங்களில் தவிர மற்றச் சமயங்களில் அவர் அவ்வளவாக ஆபரணங்கள் அணிவதில்லை. ஆனால் தம் சூழலில் அழகும் வண்ணமும் கலகலப்பும் இருந்தால் அவர் பெருமகிழ்ச்சி அடைந்ததாகப் பக்கிரி சகோதரர்கள் தெரிவிக்கின்றனர், அவர் தமது பிரதானிகள் அழகாக வும் எடுப்பாகவும் தோற்றமளிக்க வேண்டுமென்று அவர் எதிர்பார்த்தார்; அழகான தோற்றமுடையவர்களுக்கு அவையில் இடம் கிடைத்ததுடன் சலுகையும் கிடைத்து வந்தது. பெரும்பாலான சீக்கியப் பிரபுக்கள் உண்மை யிலேயே அழகாக இருந்ததை ஆஸ்போர்ன் கண்டார். அவருடைய பார்வையில் ராஜா சுசேத் சிங் வேறு பலரை விட அழகு மிக்கவராக விளங்கினர்; ராஜா ஷேர் சிங் அழகும் ஆண்மையும் துள்ளும் தோற்றத்துடன் திகழ்ந்தார்; பக்கிரி அஸிஸுத்தினின் முகத்தில் இனிமை யும் மகிழ்ச்சியும் தவழ்ந்தன. நல்ல உயரமும், அறிவு துள்ளும் விழியும் அகன்ற அழகிய நெற்றியும், தீர்க்கமான மூக்கும் கொண்ட ராஜா தியான் சிங் புருஷ லட்ச

ணங்கள் நிறைந்தவராகத் தோன்றினாராம். இவ்வாறு ரண்ஜீத் சிங் தமக்கு அழகான தோற்றம் இல்லாத குறையைத் தம்முடைய பிரதானிகளின் அழகிலும், அந்தப் புறத்திலிருந்த பெண்மணிகளிடத்தோ அல்லது தாம் சல்லாபம் செய்த மங்கைகளிடத்திலோ காணப்பட்ட எழிலிலும், குதிரைகள், யானைகளின் அழகிலும் நிறை செய்து கொண்டார். மகாராஜாவைப் பற்றி பக்கிரி எழுதியுள்ள நூலில் சர்தார் ஷாம் சிங் அத்தாரிவாலா வைப் பற்றிய நிகழ்ச்சியொன்று விவரிக்கப்பட்டுள்ளது. அவர் ஒரு நாள் சபைக்கு வரும்போது அழகான மரகத மாலையொன்றை அணிந்திருந்தார். அடுத்த தடவை அவர் வந்தபோது கழுத்தில் அந்த மாலையைக் காணவில்லை. மகாராஜா விசாரித்தபோது, அந்நகைக்கு நகை வியாபாரி 70,000 ரூபாய் கேட்டதாகவும், சர்தாரிடம் 50,000 ரூபாய்தான் இருந்தது என்றும் தெரிய வந்தது. உடனே ரண்ஜீத் சிங் சர்தார் ஷாம் சிங் அந்நகையை வாங்கி அணிந்துகொள்ளும் பொருட்டு அவருக்கு முழுத் தொகை யையும் கொடுக்கும்படி உத்தரவிட்டார்.

வேறு சில மன்னர்களைப் போல மகாராஜா ரண்ஜீத் சிங்கும் தம்மிடம் இல்லாத ஒன்றை இருப்பதாக எண்ணி வீண் பெருமை பாராட்டியிருக்க முடியும். ஆனால் அவர் இத்தகைய அகம்பாவத்துக்கு இடம் கொடுக்கவில்லை. அதற்கு மாறாக அவர் தமது குறையை அமைதியாக ஏற்றுக் கொண்டார்; தம்முடைய மற்றச் சிறந்த பண்புகளைக் கொண்டு மனவலிமை பெற்றார். அவருடைய பிரிய ராணியான 'மோரான்', ஒரு சமயம் அவரிடம் "மகராஜ், கடவுள் அழகை விநியோகித்துக் கொண் டிருந்தபோது தாங்கள் எங்கே போயிருந்தீர்கள்?" என்று வேடிக்கையாகக் கேட்டாளாம். மகாராஜா அக் கேள்வியைக் கேட்டு முகம் சுளிக்காமல், "படை பலத் தால், ஒரு ராஜ்யத்தை வெற்றிகொள்ள எனக்குத் துணை புரியும்படி தேவ தூதர்களிடம் அப்போது நான்

வேண்டிக் கொண்டிருந்தேன்,'' என்று சாந்தமாகப் பதிலளித்தாராம். இதே தன்னடக்கத்துடன் அவர் லாகூரில் முகலாயர் அரியணையில் அமர மறுத்துவிட்டார். அவ்வரியணையில் அமர்வதற்கு அவர் முகலாயர்களின் 'நஸிமாக' இருக்க வேண்டும், அல்லது அவர்களைப் போன்ற அதிகாரமும் செல்வாக்கும் உடைய பேரரசராக இருக்க வேண்டும்; இவ்விரு எண்ணங்களுக்கும் இடமளிக்காமல், அதற்குப் பதில் தாம் ஒரு புதிய ராஜ்யத்தின் ஸ்தாபகர் என்ற கருத்தை வளர்க்கவே அவர் விரும்பினார்.

*அத்தியாயம் 15*

# ரண்ஜீத் சிங்கின் குணச்சித்திரம்-2

## புதுமையில் நாட்டம்

*ரண்ஜீத் சிங் படிக்காதவர் என்றாலும், புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்வதில் ஆர்வம் மிக்கவராக இருந்தார் என்று முன்பே கூறப்பட்டுள்ளது. அயல் நாட்டினரைச் சந்தித்த போதெல்லாம், அவர் பலப்பல விஷயங்களைப் பற்றியும் கேள்வி மேல் கேள்வி கேட்டுத் துளைத்து எடுத்துவிடுவார். இந்தியாவின் பிறபகுதியிலும், உலகிலும் நடக்கும் விஷயங்களைப் பற்றி அறிந்து கொள்வதிலும், இராணுவ ராஜ தந்திரத் துறைகளில் தமக்கு உதவக் கூடிய தகவல்களைச் சேகரித்து வைத்துக் கொள்வதிலும் அவருக்கு ஆர்வம் அதிகம். அவர் தொடர்ந்து ஒன்றன்பின் ஒன்றாகக் கேள்விகள் கேட்கும் வேகத்தையும் பல்வேறு விஷயங்களைப் பற்றிக் கேட்டதையும் பற்றி ஆஸ்போர்ன் குறிப்பிடுகிறார். இதோ சில உதாரணங்கள்: "நீங்கள் குடிப்பதுண்டா? எவ்வளவு குடிப்பீர்கள்? என்னென்ன பீரங்கிகள் கொண்டு வந்திருக்கிறீர்கள்? எவ்வகையான குண்டுகளை உபயோகிக்கிறீர்கள்? குதிரையேற்றத்தில் உங்களுக்கு விருப்பமுண்டா? எவ்வகையான குதிரைகளை விரும்புவீர்கள்? ஆக்லண்டு பிரபு மதுபானம் அருந்துவாரா? எத்தனை கோப்பைகள் குடிப்பார்? காலையில் அவர் குடிப்பதுண்டா? அவர் திருமணமானவரா? ஆங்கிலேய மனைவிமார்களுக்குச் செலவு அதிகமாகுமா? நான் அனுப்பிய காஷ்மீர்ப் பெண்களைப் பார்த்தீர்களா? அவர்களை நீங்கள் விரும்புகிறீர்களா? அவர்கள் ஆங்கிலப் பெண்களைப் போல் அழகாக இருக்கின்றனரா? எத்தனை பிரெஞ்சுக்காரர்களை ஓர் ஆங்கிலேயரால் தோற்கடிக்க இயலும்? எத்தனை*

ரஷ்யர்களைத் தோற்கடிக்க முடியும்?'' இத்யாதிக் கேள்விகள். கவர்னர் ஜெனரலிடமே இவை போன்ற கேள்விகளைக் கேட்க மகாராஜா தயங்கமாட்டார். பெரும்பாலும் ஆங்கிலேயர்கள் அதிகமாகப் பேச மாட்டார்களாதலால், சில கேள்விகள் வில்லியம் பெண்டிங்கையும் ஆக்லண்டையும் தர்ம சங்கடத்துக்கு உள்ளாக்கியிருக்கும். ஆனால் ரண்ஜீத் சிங் தவறான நோக்கத்துடன் கேட்கவில்லை என்பதையும், இந்தியாவின் மரியாதைக் கிரமம் அலாதியானது என்பதையும் அவர்கள் புரிந்து கொண்டிருப்பார்கள்.

## மென்மையும் கடுமையும்

ஒரு நல்ல கணவருக்கும், ஒரு நல்ல தந்தைக்கும் சாதாரணமாக உள்ள உணர்ச்சிகள் ரண்ஜீத் சிங்கினிடமும் இருந்தன. ஏழை பாழைகளிடத்தில் அவர் மிகுந்த கருணை காட்டினார். வேட்டையின் போது (தமது கூடாரத்திற்கு அருகே) கூண்டில் அடைத்து வைத்திருந்த குட்டியை நினைத்துத் தாய்ப்புலி ஓலமிட்டதைக் கேட்டு அக்குட்டியை விடுதலை செய்ய உத்தரவிட்டது பற்றி முன்னொரு பகுதியில் குறிப்பிட்டோம். ஒரு விலங்கிற்கும் தாயுள்ளம் உண்டு என்பதை அவர் உணர்ந்திருந்தார். இது போன்ற மற்றொரு நிகழ்ச்சி: எந்த மோசமான உலோகமும் மகாராஜாவின் உடலில் பட்டால் பொன்னாகி விடும் என்று' ஒரு குருட்டுக் கிழவியிடம் யாரோ சொல்லியிருந்தனர். ரண்ஜீத் சிங், ஒருநாள், லாகூர் வீதி வழியே சென்று கொண்டிருந்தபோது, அக் கிழவி வழக்கமான ஒரு அபயக் குரலிட்டாள். அவளை மகாராஜாவின் அருகே வர அனுமதித்தவுடன், அவள் திடீரென்று ஒரு பித்தளைப் பாத்திரத்தை எடுத்து, அவருடைய ஆடைகள் அனைத்திலும் வைத்துத் தேய்க்க ஆரம்பித்தாள். இவ்வாறு மகாராஜாவை இழிவுபடுத்தக் காரணமென்ன என்று கேட்ட போது, அவள் தான் பரம ஏழையென்றும் அப்பாத்திரத்

தைத் தங்கமாக மாற்றிக்கொள்ள முயன்றதாகவும் ஒப்புக்கொண்டாள். மகாராஜா அவளுடைய சோகக் கதையைக் கேட்டு மனமுருகி, அப்பாத்திரம் நிறையத் தங்க நாணயங்களை நிரப்பிக் கொடுத்ததோடு, அதை வேறு எவரும் இடை வழியில் பறித்துக்கொண்டு விடாதவாறு பத்திரமாக அவளை அவளுடைய வீட்டில் கொண்டு போய் விடும்படியும் உத்திரவிட்டார்.

ஆனால் ரண்ஜீத் சிங் அவசியம் நேரும்போது மிகக் கடுமையாகவும் நடந்து கொள்வார். உதாரணமாக, தர்பாருக்குச் செலுத்த வேண்டிய பாக்கிகள் விஷயத்தில், அவர் இரத்த பாசத்தைக் கூட பொருட்படுத்தமாட்டார். மகாராஜாவின் மூத்த மகனை ராஜா கரக் சிங் ஒரு சமயம் தாம் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தவில்லை. அவருடைய (கரக்சிங்சின்) தாயார் மகாராணி ராஜ் கௌர் காலமான சமயம் அது. ஆனாலும் ரண்ஜீத் சிங் உணர்ச்சிக்கு இடங்கொடுக்காமல் பாக்கிகளை வசூலித்து வரத் தர்பார்த் துருப்புகளை ஷேகுபுராவிற்கு அனுப்பினார். தாயார் இறந்த துக்கத்தில் தாம் ஆழ்ந்திருப்பதாகக்கூறி கரக் சிங் மன்றாடினார். அதே காரணத்தினால்தான் இளவரசர் சொத்துக்களைச் சரிவரக் கவனிக்க மாட்டாரென்று தாம் அஞ்சுவதாக மகாராஜா குறிப்பிட்டார். அவரிடமிருந்து ரூபாய் ஐந்து இலட்சத்திற்குப் பத்திரம் எழுதி வாங்கிய பின்னரே படையினர் திருப்பி அழைக்கப் பட்டனர்.

ரண்ஜீத் சிங்கின் ஆசைக் குதிரைகளுள் ஒன்றான 'தூலூ'வின்மீது இளவரசன் ஷேர் சிங்கிற்கு எப்போதுமே ஒரு கண். பல தடவை அவன் தன் தந்தையிடம் அக் குதிரையைக் கேட்டுப் பார்த்தும் தோல்வியடைந்தான். இளவரசனால் அக்குதிரை மீதுள்ள ஆசையை அடக்க முடியாமற் போகவே, குதிரை லாயத்தின் அதிகாரியிடம் ஒரு முறை அக்குதிரை மீது சவாரி செய்து

விட்டு வருவதாகச் சொல்லி, அதை எடுத்துக் கொண்டு சென்று விட்டான். மூன்று நான்கு நாட்களுக்குப் பின்னரும் 'தூலூ' திரும்பாததால் ரண்ஜீத் சிங்கிற்குத் தகவல் தெரிவிக்கப்பட்டது. ஆத்திரமடைந்த மகாராஜா, உடனே ஷேர் சிங்கின் சொத்துக்களைப் பறிமுதல் செய்வதோடு, அவனை நாடு கடத்தும்படியும் உத்தர விட்டார். நல்ல காலமாக பக்கிரி நூருதீன் தலையிட்டு சாமர்த்தியமாகச் சமாளித்திருக்கா விட்டால் அந்த உத்தரவு நிறைவேற்றப்பட்டிருக்கும்; (இளவரசரின் ஆசானுகவும் இருந்தவர் அவர்.) அவர் தலையிட்டதன் விளைவாக, ஷேர் சிங் மன்னிக்கப்பட்டதுமன்றி, அந்தக் குதிரையைத் தன் தந்தையின் அன்பளிப்பாகவும் பெற்ருர்.

## சமயக் கொள்கை

ரண்ஜீத் சிங் தமது சொந்த வாழ்க்கையில் சமயப் பற்று மிகுந்தவர். சீக்கிய வேதநூலை (கிரந்த் சாஹிப்) ஓதுவதற்காக அரண்மனையில் ஓர் அறை ஒதுக்கி வைக்கப் பட்டிருந்தது; அநேகமாக நாள்தோறும் பிற்பகலில் 'குருவாணி' (கிரந்த் சாஹிப்) வாசிக்கப்படுவதைச் சிறிது நேரம் கேட்பது அவருடைய வழக்கம். குரு கோவிந்த் சிங்கிடம் கொண்டிருந்த பக்தியின் அடையாளமாக, பிரார்த்தனை நேரத்தில் அவர், குருவின் 'கல்கி'யைத் (தலைப்பாகைமேல் சூட்டிக் கொள்ளப்படும் அலங்காரம்) தம் தலைமீது வைத்துக்கொண்டு பிறகு கண்களிலும் ஒற்றிக் கொள்வார். சுபவேளைகளைத் தெரிந்துகொள்வதற்காக கிரந்த் சாஹிபை அவர் அடிக்கடி பார்ப்பதுண்டு. மகாராஜா கிரந்த் சாஹிபில் நல்வாக்கைப் பெருமல் அநேகமாக எந்தப் படையெடுப்பையும் மேற்கொண்டதில்லையென்று ஆஸ்போர்ன் குறிப்பிட்டுள்ளார். அவர் ஒரு பிரச்சினையைப் பற்றி சந்தேகமோ, குழப்பமோ வரும்போதெல்லாம், மாறுபட்ட இரண்டு முடிவுகளை இரு காகிதங்களில் குறித்து, கிரந்த் சாஹிபின் பக்கங்களுக்

கிடையே செருகுவார். பிறகு குரு ஒருவரை அழைத்து வரச் சொல்லி, அக்காகிதங்களைப் பார்க்காமல் அவற்றுள் ஒன்றை எடுக்கச் சொல்வார். கிரந்த் சாஹிபின் முடிவு படையெடுப்பிற்கு ஆதரவாக இருந்தால், வெற்றியில் நம் பிக்கையுடன், படையெடுப்பை மேற்கொள்வார்; மாறுன முடிவு எழுதிய காகிதம் பொறுக்கி யெடுக்கப்பட்டால், அதற்கு அப்படியே கீழ்ப்படிந்து, முயற்சியைக் கைவிட்டு விடுவார்.

தமது சமயத்தில் ஆழ்ந்த பற்றுடையவராயினும் ரண்ஜீத் சிங் மத வெறியுடையவரல்லர். அவர் எல்லாச் சமயங்களிடமும் சம மரியாதை காட்டினுர்; அதனுல்தான், தாம் மணந்து கொண்ட முஸ்லிம் பெண்கள் தங்கள் சமயத்தைப் பின்பற்றுவதற்கு அவர் அனுமதித்திருந் தார். அவர்களைத் திருமணம் செய்து கொண்டபோது அவர்களது குடும்பங்களில் இருந்து வந்த வழமுறைகளைப் பிசகாமல் பின் பற்றினுர். ஆஷாட பூதித் தனங்களை அவர் வெறுத்தாரெனினும், புனிதமானவை எம்மதத்தி லிருந்தாலும் அவற்றைப் போற்றினுர். இதன் காரண மாகவே அவர் வேறுபாடு பாராட்டாமல் இந்துக்கோவில் களுக்கும், சீக்கியக் குருத்துவாராக்களுக்கும், முஸ்லிம் மசூதிகளுக்கும் விஜயம் செய்து, அவை எல்லாவற்றிலும் காணிக்கைகள் செலுத்தினுர். இதேபோல எல்லாச் சமயங்களையும் சேர்ந்த மகான்களிடமும் சென்று தரிசித் தது மட்டுமல்லாமல், சில சமயங்களில் அவர்களுடைய பாததூளியைத் தமது தாடியால் துடைக்கும் அளவிற்குக் கூட மரியாதை செலுத்தினுர். அவர் ஒரு சமயம், சீக்கிய மதத்தின் முக்கியமான ஒரு சடங்கிலோ அல்லது அடிப் படைக் கோட்பாட்டிலோ தவறி விட்டதாகத் தீர்ப்பளிக் கப்பட்டபோது, அமிர்தசரஸ் பொற்கோவிலில் உள்ள 'அகால் தஹ்தி'ன் (ஞானசனம்) முன்னுல் தண்டனையாக அடியை ஏற்றுக்கொள்ளத் தயாராக முதுகைத் திறந்து காட்டினுர். சமயத் துறையில் அவர் தம்மைப் பொது

மக்களைவிட மேலானவராக ஒருபோதும் கருதியதில்லை என்பது இதிலிருந்து புலனாகும்.

இந்துக்கள், சீக்கியர், முஸ்லிம்கள் ஆகியோரின் திருவிழாக்களில் ரண்ஜீத் சிங் பேதமின்றிக் கலந்து கொண்டார். இதே பொது நோக்குடன் அவர்களுடைய யாத்திரைத் தலங்களுக்கும் சென்று வந்தார். மகாராஜா ஒரு முறை மெக்காவிற்குச் சென்றதாக வஹீதுதீன் கூறியுள்ளார். இதுல் - பிதர் - (ஈத் பண்டிகை) கொண்டாட்டத்திற்குத் தவறாமல் வருவது அவருடைய வழக்கம்; அவரது பிள்ளைகளும், பேரப் பிள்ளைகளும் மொகரத்தின் போது காணிக்கைகள் கொடுப்பார்கள். அவர் எல்லா மக்களையும் சமய வேறுபாடு கருதாமல் சமமாக மதித்து நடத்தி வந்ததால், மக்களும் பிரார்த்தனை செய்யும்போது அவரை நினைத்துக் கொண்டனர். புதிய போருக்குப் புறப்படும்போது, அல்லது படையெடுப்பை மேற்கொள்ளும்போது, போரில் வெற்றி பெற்றபோது, நோயுற்ற போது அல்லது நோயிலிருந்து குணமடைந்ததற்கு நன்றி செலுத்தும்போது - இன்னும் இது போன்ற முக்கியமான சமயங்களிலெல்லாம் பொது மக்கள் மதபேதமின்றிப் பலவகைப்பட்ட ஆலயங்களில் மகாராஜாவிற்காகப் பிரார்த்தனைகள் நடத்தினர். மகாராஜாவின் உடல் ஈமக் கிரியைகளுக்காகச் சிதையில் வைக்கப்பட்டிருந்த போது இந்து, சீக்கிய, இஸ்லாமியப் பிரார்த்தனைகள் வரிசையாக நடத்தப்பட்டன; மக்களுக்கு அவர்மேலிருந்த பாசத்திற்கு இதைவிடச் சிறந்த அத்தாட்சி வேண்டுவதில்லை,

லாகூரில் உள்ள பக்கிரி குடும்பத் தஸ்தாவேஜிகளில் ரண்ஜீத் சிங் சமயத்துறையில் கடைப்பிடித்த பரந்த மனப்பான்மைக்குச் சான்றுகள் பல உள்ளன. இது சம்பந்தமாக வஹிதுதீன் இரு நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டுள்ளார்: ஒரு நாள் மகாராஜாவும், பக்கிரி அஸிஸூ

தினும் வெளியே உலாவிக் கொண்டிருந்தனர்; அப்போது ஒரு மனிதன் மிகப் பெரிய புத்தகமொன்றை ஒரு வண்டியில் வைத்து எடுத்துச் செல்வதைக் கண்டனர். அது என்ன என்று அவனிடம் கேட்டபோது, அவன்தான் நூல்களைப் பிரதி செய்பவன் என்றும், வண்டியிலுள்ள அந்நூல் புனித குர்ரானின் பிரதி என்றும் கூறினன். "இதைப் பிரதி செய்வதில் என் வாழ்நாள் முழுவதையும் செலவழித்துள்ளேன். இதனை ஹைதராபாத் நிஜாமிடம் விற்கச் செல்கிறேன்," என்றும் அவன் சொன்னன். மேலும் விசாரித்தபோது, அதற்கு அவன் ரூபாய் பத்தாயிரம் வரை எதிர்பார்த்ததாகத் தெரிந்தது. மகாராஜா தம் வெளி விவகாரத்துறை அமைச்சரிடம் அம் மனிதனுக்குக் கருவூலத்திலிருந்து அத்தொகையைக் கொடுக்கச் சொன்னர். பின்னர் பக்கிரி அஸிஸுதீனைக் கொண்டு அந்நூலிலிருந்து சில வரிகளை வாசித்துப் பஞ்சாபியில் மொழிபெயர்த்துச் சொல்லக் கேட்டார். அதைக் கேட்டபின் குர்ரானுக்கும், கிரந்த் சாஹிபிற்கும் வேறுபாடில்லையே என்று ரண்ஜீத் சிங் வியந்தாராம். அதற்கு அஸிஸுதீன், "சமயங்களின் குறிக்கோள் ஒன்றுதான்: மார்க்கம்தான் வெவ்வேருனது" என்று விளக்கம் கொடுத்தார். அவருடைய விளக்கத்தைக் கேட்டு அக மகிழ்ந்த மகாராஜா அக்கைப்பிரதியை அவருக்கே பரிசாக அளித்துவிட்டார்.

மற்ருெரு நிகழ்ச்சி: ஒரு சிக்கியக் கோஷ்டியினர் மகாராஜாவிடம் வந்து தங்கள் வட்டாரத்து மசூதியில் 'பிரார்த்தனைக்கு அழைப்பவர்' நாள்தோறும் ஐந்து முறை மிக உரத்த குரலில் விசுவாசிகளைப் (முஸ்லிம்களை) பிரார்த்தனைக்குக் கூவியழைக்கிருர், என்று புகார் செய்தனர்; முஸ்லிமல்லாதவர்களின் அலுவல்களுக்கு இக்கூப்பாட்டினல் இடையூறு ஏற்படுவதால் இந்தப் பிரார்த்தனை அழைப்பை (அஜான்) நிறுத்தச் சொல்ல வேண்டுமென்று அவர்கள் கோரினர். இது சம்பந்தமாகப்

பக்கிரி அஸிஸுத்தீன் கூறிய ஆலோசனையை ரண்ஜீத் சிங் ஏற்றுக் கொண்டார்; அதன்படி அக்கோஷ்டியினர் தங்கள் வட்டாரத்திலுள்ள ஒவ்வொரு முஸ்லிம் வீட்டிற்கும் பிரார்த்தனை நேரத்தில் சென்று வீட்டிலுள்ளோரைப் பிரார்த்தனைக்கு அழைப்பதானால், அந்தக் கூப்பாட்டை நிறுத்திவிடச் சொல்லலாம் என்றார். அக் கோஷ்டியினர் விரைவிலேயே மகாராஜாவிடம் திரும்பி வந்து பழைய முறையையே திரும்ப அமல் நடத்தும்படி வேண்டினர் — தங்கள் வேலையைக் கெடுத்துக்கொண்டு வீடு வீடாகச் செல்வதை விட அக் கூப்பாட்டைப் பொறுத்துக்கொள்வதே மேல் என்று அவர்களுக்குத் தோன்றிவிட்டது!

*அத்தியாயம் 16*

# சாதனையும் வரலாற்றுப் பெருமையும்

ரண்ஜீத் சிங், தம்முடைய 40 ஆண்டு ஆட்சிக் காலத்தில் புரிந்த சாதனையை ஒட்டு மொத்தமாக மதிப்பிட வேண்டுமானால், இக் கால கட்டத்தில் நிகழ்ந்த முக்கிய மாறுதல்களை மேலோட்டமாகப் பார்த்து, அவற்றை அதற்கு முன்னும் பின்னும் நிகழ்ந்த மாறுதல்களுடன் ஒப்பு நோக்குவது அவசியமாகும். அந்தப் பிராந்தியத்தில் சீக்கியர்களும் இந்துக்களும் முஸ்லிம்களும் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கிடையே சமய, கலாசார வேறுபாடுகள் நிலவின. பஞ்சாபில் முஸ்லிம் அல்லது முகலாய அதிகாரம் சிதைந்ததன் விளைவாக ஆங்காங்கே பல்வேறு தனிப்பட்ட நாட்டாண்மைகள் தோன்றின. ஆப்கானியப் படையெடுப்பாளர்கள் டில்லியிலிருந்தோ அல்லது பஞ்சாப்பில் தங்கியோ ஆட்சி நடத்த ஒருபோதும் விரும்பியதில்லை; அவர்கள் அவ்வப்போது தாக்குதல்கள் நடத்தியதன் விளைவாகச் சீக்கியர்கள் ஒன்றுபட்டு அவர்களை எதிர்க்க முன்வந்தனர். ஆனால் இந்த ஒற்றுமை நாதிர் ஷாவையோ ஆப்தாலியையோ எதிர்க்கு மளவிற்கு மட்டுமே பயன்பட்டது; மற்றப்படி அவர்கள் ஏறக்குறைய சுயேச்சையானவர்களாகத் தங்களுக்கென கிராமக் கோட்டை கொத்தளங்களை அமைத்துக்கொண்டு, தங்கள் ஆதிக்கத்திற்குட்பட்ட பகுதியில் வரி வசூல் செய்து வந்தனர். சில ஆண்டுகளுக்குள் யமுனை ஆற்றுக்கும் ஜீலம் நதிக்கும் இடையிலுள்ள பகுதி அவர்கள் வசமாயிற்று. எண்ணிறந்த 'மிஸல்' கள் அல்லது சமஷ்டிகள் தோன்றின. அவை ஒன்றோடொன்று பூசலிட்டன; ஆனால் பொது எதிரியை எதிர்க்க ஒன்றுபட்டன.

இந்த மிஸல்களின் இடையே தான் ரண்ஜீத் சிங் தோன்றி, வெகு விரைவிலேயே அவற்றை அடக்கியாளும் நிலையைப் பெற்றார். 1799–ல் லாகூரை வென்ற பிறகு அவர் மகாராஜா என்று பட்டம் சூட்டிக்கொண்டு, பல்வேறு 'மிஸல்' அதிபர்களேயும் அடக்கி, தம்மை அவர்கள் தலைவராக ஏற்றுக்கொள்ளச் செய்தார். பிறகு மேலும் பல பகுதிகளை வென்று அதன் மூலம் தம் ராஜ்யத்தை விஸ்தரித்துக் கொண்டதுடன் அதிக வலிமையும் பெற்றார். 1809–ல் ஆங்கிலேயருடன் செய்துகொண்ட உடன்பாட்டின்படி ஸட்லெஜ் அவருடைய ராஜ்யத்தின் தெற்கு எல்லையாயிற்று. 1818–ல் முல்டானையும் 1819–ல் காஷ்மீரையும் அவர் வென்று, 1821–ல் சிந்து நதிக்கு அப்பாலும் தமது ஆதிக்கத்தை விஸ்தரித்தார். எனவே அவரது போர்ச் சாதனைகளுள் அவர் பஞ்சாபை ஒன்றுபடுத்தியதையும், ஆப்கானியர்கள் புக முடியாதபடி தமது ராஜ்யத்தைப் பலப்படுத்திக் கொண்டதையும் குறிப்பிட வேண்டும். வடமேற்கு எல்லைப் பகுதியையும் காஷ்மீரையும் மகாராஜா சேர்த்துக் கொண்டிராவிட்டால், அவற்றை ஆப்கானிஸ்தானம் கைப்பற்றியிருக்கக் கூடும்.

இச்சாதனையின் அரசியல் அம்சம் அதிக முக்கியமானது; ஏனெனில் அதனால் விளைந்த பலன் அதிக காலம் நிலைத்து நின்றது. ஆரம்ப காலத்தில் சீக்கிய 'மிஸல்'கள் பெரும்பாலும் சமயச் சார்புடையனவாக, கால்சாக் கொடியின் கீழ் இயங்கி வந்தன. ரண்ஜீத் சிங்கின் எழுச்சி இச் சக்திக்குப் புதியதோர் பாதையைக் காட்டிற்று. சமஷ்டிகள் நலிந்து அவருடைய ஆதிக்கம் மேலும் மேலும் வளர்ந்ததன் விளைவாக சமயச் சார்புள்ள அரசியல் மெல்ல மெல்லத் தளர்ந்தது. மகாராஜா என்றுமே சீக்கிய மதத் தொடர்பை முறித்துக் கொள்ளவில்லை; உண்மையில் அவர் அந்தரங்க சுத்தியுடனும் பகிரங்கமாகவும் சீக்கிய சமயத்தை அனுஷ்டித்தார். ஆனால் தங்கள் சாதி, சமயப் பாகுபாடுகளைப் பாராட்டாமல்

குடிமக்கள் அனைவரும் தம்மிடம் விசுவாசம் செலுத்த வேண்டுமானால், தாமும் பிற சமயங்களின் நலத்தையும், அவற்றைப் பின்பற்றுவோரின் நலத்தையும் பேணிக் காக்க வேண்டும் என்பதை அவர் ஆரம்பத்திலேயே உணர்ந்து கொண்டார். எனவே பெரும்பாலும் சீக்கியர் களைக் கொண்ட படைக்குத் தலைமை தாங்கி, தாம் ஒரு சீக்கியர் என்ற முறையில் 'மிஸல்' தலைவர்களையெல்லாம் அவர் ஒடுக்கினாரெனினும், அக்கொள்கையில் புதிய பரிமாணங்களைச் சேர்த்து, அதை மேலும் மேலும் சமயச் சார்பற்றதாய் உருவாக்கினார். தம் தலைநகரைச் சமய க்ஷேத்திரமான அமிர்தசரஸிலிருந்து சமயச் சார்பற்ற லாகூருக்கு அவர் மாற்றியதற்கு இதுவும் ஒரு காரணமாக இருந்திருக்கலாம்.

அதோடு, 'குர்மதா' முறையை அதாவது, சீக்கியத் தலைவர்கள் எதிர்காலச் செயலுக்குத் திட்டமிடுவதற்காக ஆண்டுதோறும் அமிர்தசரஸில் கூடும் பழைய முறையை —ரண்ஜீத் சிங் படிப்படியாக ஒழித்தார். அவர் அப்புனித நகருக்குச் (அமிர்தசரஸ்) சென்று கொண்டு தான் இருந்தார்; ஆனால் ஏதாவது படையெடுப்புத் திட்டம் தயாராக இருக்கும்போது மட்டும் சென்றார்; அந்த ஹர் மந்திரின் (பொற்கோவில்) ஆட்சியில் அடங்கியிருந்த தெய்வசகாயத்தையும் கால்சாவின் ஆதரவையும் அவர் இவ்வாறு நாடினார். அதே நேரத்தில் அவர் மற்றச் சமயங் களுக்கும் முக்கியமாக இந்து மதத்திற்கும் இஸ்லாத் திற்கும், போதுமான போஷனை அளித்து வந்ததையும், பல்வேறு மதங்களைச் சேர்ந்த குடிமக்களின் நியாயமான உரிமைகளைப் பாதுகாத்ததையும் இத்துடன் சேர்ந்துக் கவனிக்க வேண்டும். தமது மக்களனைவருக்கும் வேலை வாய்ப்புக்களை அளித்ததன் மூலம் அவர்களுக்கிடையே ஒரு பொதுவான பொருளாதார நலசிரத்தையைத் தோற்றுவித்தார்; சீக்கியர்கள் குதிரைப் படையில் சேர்ந்தால் இந்துக்களும், முஸ்லிம்களும் காலாட்படையில்

சேர்ந்தனர். பல்வேறு சமயங்கள், இனங்களைச் சேர்ந்த தகுதி வாய்ந்த நபர்களுக்கு உயர்ந்த பதவிகளைப் பகிர்ந்தளித்து, தம்முடைய பரந்த மனப்பான்மையையும் ராஜ தந்திரத்தையும் வெளிப்படுத்தினர். பிரபுக்களையே நாடுவதற்குப் பதிலாக, ஓரளவு தாழ்ந்த நிலையில் உள்ள வர்க்குப் பதவியளிக்க முடிந்தால் அது குறித்து அவர் மகிழ்ச்சியடைந்தார்; உதாரணமாக, ஜமதார் குஷ்ஹால் சிங் ஒரு கடைக்காரரின் மகனுவார். மகாராஜாவின் இக் கொள்கையைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் எண்ணத்துடன் அவருடைய பிரதானிகள் பலர் தங்கள் ஏழை உறவினர்களை அழைத்துவந்து, மகா ராஜாவிடம் உத்தியோகம் வாங்கிக் கொடுத்துப் பிறகு அவர்களைக் கைப்பொம்மைகளாக வைத்துக் கொண்டு தங்கள் கோஷ்டியினர் பலத்தைப் பெருக்கிக் கொள்ள முயன்றனர். ரண்ஜீத் சிங்கின் ஆதரவைப் பெறுவதற்காக இக்கோஷ்டிகள் ஒன்ருெடொன்று போட்டியிட்டன.

அவர் இப்போட்டியை அறிவார்; அக்கோஷ்டிகளுக்குள் ஒன்று மற்றதை விஞ்சிவிடாதபடி பரஸ்பரம் தடுத்துக் கொள்ள இப் போட்டியைப் பயன்படுத்திக் கொண்டார். இவ்வாறு எந்த ஒரு கோஷ்டியும் அளவுக்கு மீறிய வலிமை பெருதபடி அவர் தடுத்தார். இக் கொள்கை யிலிருந்து சர்தார்களுக்கும் விலக்கு அளிக்கப்படவில்லை; அவர்களுக்கு அளவுக்கு அதிகமான பதவிகளை அவர் அளிக்கவில்லை. அவர் இவ்வாறு அவர்களை நடத்தியதால் தான் அவர்கள் ரண்ஜீத் சிங்கினிடம் பதவி பெற்ற ஐரோப்பியர்களைக் கண்டு, அதிலும் முக்கியமாக ஆலார்டு, வெந்துரா என்ற இரு பிரெஞ்சுக்காரர்களைக் கண்டு, பொருமைப்பட்டனர்.

எல்லாக் கோஷ்டியினருக்கும் நியாயமான அளவில் செல்வாக்கும் அதிகாரமும் வினியோகிக்கப்பட்டிருந்தன. சர்வாதிகாரம் பெற்ற மன்னர் ஒருவரின் மேதையினுல்

இக்கொள்கை உருவான போதிலும் இதனுள் சமயச் சார்பின்மை, ஜனநாயகம் ஆகியவற்றின் கருவைக்கண்டு கொள்ளலாம். இது மகாராஜாவின் மிக முக்கியமான சாதனையாகும். இதனைப் பிராந்தியத் தேசிய உணர்விற்கு அஸ்திவாரம் என்று கூறலாம். ஆனால் ரண்ஜீத் சிங் இதற்காகத் தெளிவான திட்டம் வகுத்துச் செயல்படுத்தினார் என்றோ தமது கொள்கையினால் விளையப் போகும் பலாபலன்களை அவர் முன்கூட்டியே அறிந்திருந்தார் என்றோ கருதுவதற்கு ஆதாரங்கள் இல்லை. அவர் தம் காலத்திய நிலைகளுக்கு அப்பாற்பட்டவராக விளங்கினார் என்பதிலும் வளமுறைகளை நல்ல விதத்தில் திருத்தியும் மாற்றியும் கையாண்டார் என்பதிலும் ஐயமில்லை. சீர் தூக்கிப் பார்க்குமிடத்தில் அவரைத் தேச நிர்மாணச் சிற்பியின் கருவுருவம் என்று கருதலாம். அவர் தம்மை அறியாமலே நிர்மாணப்பணியைச் சிறப்பாகச் செய்தார் என்று கருதுவதும் பொருத்தமாய் இருக்கலாம். காலம், இடம் என்ற எல்லைகளுக்குட்பட்டு அவர் புரிந்த சாதனையின் பலன் சமூக ரீதியிலும், அரசியல் ரீதியிலும் அவர் நினைத்ததையும் விட அதிக நன்மை தருவதாயிற்று. என்று கூறுவதும் தவறல்ல.

இந்த மதிப்பீடு அவருடைய ஆட்சிக் காலத்துக்குத் தான் பொருந்தும்; அவர் காத்து வளர்த்த செடி சீக்கிரமே வாடிக் கருகி விட்டது. இந்த அழிவிற்கான காரணங்களை அடுத்துக் காணலாம். ஆனால், அவர் ஆட்சியிலிருந்தவரை, அவரது நிர்வாக அமைப்பு நியாயமும் சகிப்புத் தன்மையும் கொண்டதாக மக்களுக்கு உதவியது என்பதையும், பாகுபாடுகள் இன்றி எல்லாச் சமயத்தினரும் தமக்குரிய பங்கைப் பெறுவதற்கு நியாயமான வாய்ப்புக்கள் அளிக்கப்பட்டு வந்தன என்பதையும் மறுப்பதற்கில்லை. மக்களில் எப்பிரிவினரும் தங்கள் மதம் அல்லது இனம் காரணமாகப் பிரத்தியேக வில்லங்கங்களுக்கு உட்பட்டிருந்ததாகக் கருதுவதற்கு ஆதார

மில்லை. அதற்கு மாருக, மக்கள் உற்சாகத்துடன் ரண்ஜீத் சிங் மீது அன்பையும் பாராட்டையும் பொழிந்தனர். அதனுல் இன்று இந்திய அரசியல் சாசனம் குடி மக்களுக்கு உத்தரவாதம் செய்துள்ள ஜீவாதார உரிமைகள் போன்ற உரிமைகளை மக்கள் அன்று அனுபவித்து வந்தனர் என்று இதற்கு அர்த்தமில்லை. அக்காலப் பிரபுக்கள் சகல வசதிகளுடனும் சுகபோகமாக வாழ்ந்தனர். பொது மக்கள் தாழ்ந்த நிலையில்தான் இருந்தனர். அநேக அதிகாரிகள் மக்களைக் கசக்கிப் பிழிந்தனர்; சிலர் கொடுமையும் புரிந்தனர். ஆனுல் மகாராஜா தம்மாலியன்ற வரை நல்ல எடுத்துக் காட்டாக விளங்க முயன்ருர்; தம்முடைய கட்டளைகளை மீறியவர்களுக்குச் சரியான தண்டனை விதித்தார். மேலும், அரசியல் ஞானிகள் பேசி வரும் சமத்துவம், சட்டத்தின் ஆட்சி ஆகியவற்றை ரண்ஜீத் சிங் மறைந்து 130 ஆண்டுகளுக்குப் பிறகு நாம் வாழும் இந் நாளில் கூட ஏற்படுத்த முடியவில்லை. அவர் சம்பந்தப்பட்டவரை, பல்வேறு வகுப்பினர்களின் மாறுபட்ட நலன்களைச் சமரசப்படுத்தவும் சுரண்டலையும், அடக்கு முறையையும் ஒழிக்கவுமே முயன்ருர்.

இனி, ரண்ஜீத் சிங்கின் வெற்றி, தோல்விகளை நாம் கணக்கிட்டுப் பார்த்தால், வெற்றிக் கணக்கே அதிகமாக இருக்கக் காணலாம். அவர் தோன்றிய காலத்தில் பஞ்சாப் பல 'மிஸல்'களாகப் பிரிவுற்றுக் கிடந்தது; அவை ஒன்றொடொன்று போரிட்டு நின்றன; அவைகளை ஒரு பக்கம் ஆப்கானியர்களும் மறுபக்கம் மராத்தியர்களும் நெருக்கிக்கொண்டிருந்தனர். சற்றுத் தொலைவில் ஆங்கிலேயர்கள் வேறு தங்கள் ஆதிக்கத்தை விஸ்தரிப்பதற்குக் காத்துக் கொண்டிருந்தனர். மகாராஜா அக் குட்டி 'மிஸல்' தலைவர்களையும் அவர்கள் ஆண்டு வந்த குட்டி-அரசுகளையும் இணைத்து ஒரே ராஜ்யமாக உருவாக்கினர். அவர் முஸ்லிம் நவாபுகளை ஒடுக்கியதோடு ஆப்

கானியர்களை அவர்கள் நாட்டிற்கே சென்று பதம் பார்த்தார். ஆப்கானியர்களின் ஆதிக்கத்தை ஒடுக்கிய பின்னர், எதார்த்த நிலைக்கு ஏற்ப ஆங்கிலேயருடன் சமரச உடன்பாடு செய்துகொண்டு அதன் மூலம் அவர்களை விரோதிகளாக்கிக் கொள்வதற்குப் பதிலாக நண்பர்களாக்கிக் கொண்டு, இரு சாராரும் தலையிடாக் கொள்கையைக் கடைப்பிடிக்க வழி கோலினர். அவர் தமது படையைக் கட்டுப்பாடு கொண்டதாக அமைத்தார்; தம்முடைய முன்னோர்களும் தம் காலத்தியத் தலைவர்களும் செய்தது போல குதிரைப் படையில் ஒருமுகமான கவனம் செலுத்தாமல், காலாட்படையையும் பீரங்கிப் படையையும் வலிமையுள்ளவையாக்கினர். தம் துருப்புகளுக்குப் போர்க் கலையில் சிறந்த பயிற்சி அளித்திருந்தார்; அவர் மறைந்த பின், சைனியமே உண்மையான அதிகார சாதனமாயிற்று. சிறந்த படைக் கலங்களையும் தலைவர்களையும் கொண்ட 50,000 வீரர்கள் அந்த இராணுவத்தில் இருந்தனர். ஆனால் அவரது இராணுவத் தலைமையும் வெற்றிகளும் அவரது சாதனையின் ஒரு பகுதி தான். சிவில் நிர்வாக அமைப்பிலும் சாதி சமய சகிப்புத் தன்மையிலும், திறனும் தகுதியும் உடையவரைக் கண்டுபிடித்து ஆதரிப்பதிலும், தலைசிறந்த முகலாய மன்னரான அக்பரின் வழியையே அவர் பின்பற்றினர், அவர் ஒருவரை உயர்த்தவும் தாழ்த்தவும் அறிந்தவர். போரிலோ சமாதான காலத்திலோ அரிய சாதனைகள் நிகழ்த்தியவர்களுக்குப் பரிசுகளை வாரி வழங்கினர்; அதே நேரத்தில், தீய வழியிலும் கொடுமைகள் புரிந்தும் பெருஞ் செல்வம் திரட்டிய பிரபுக்களுடைய சொத்துக்களையும், தங்கள் பெருஞ் செல்வத்தின் பலத்தினால், பேராசை கொண்டு தமது அதிகாரத்திற்கு எதிராகக் கிளம்பக் கூடிய பிரபுக்களுடைய சொத்துக்களையும் பறிமுதல் செய்வதற்கு அவர் சிறிதும் தயங்கவில்லை. அவர் தம் குறிக்கோள்களுக்குப் பொருத்தமான வழி முறைகளை

வருத்துக் கொள்வதில் கை தேர்ந்தவர். ஒருபுறம், வட மேற்குப் பகுதியில் மலைசாதியினரை ஜெனரல் அவிட்டபில் அடக்குமுறை மூலம் அச்சுறுத்தியதை அவர் அனுமதித்திருந்தார்; மறுபுறம் ஆட்சி நிலைத்துவிட்ட மாவட்டங்களில் அவரது நிர்வாகம் நியாயமும், கருணையும் கொண்டதாயிருந்தது. அவர் கடுமையான முறையில் கொள்ளைக்காரர்களை ஒடுக்கினார்; அவர் அடிக்கடி சுற்றுப் பிரயாணம் சென்று தங்கள் பதவியையும் அதிகாரத்தையும் துஷ்பிரயோகம் செய்த அதிகாரிகளைத் தண்டித்தார். ஒரு கிராமத்தில் கொள்ளை நடந்தால், சூறையாடப்பட்ட அல்லது திருடப்பட்ட பொருட்களை, ஈடு செய்வதற்காக அக் கிராமம் முழுவதற்கும் 'தண்ட வரி' விதிக்கப் பட்டது. குதிரைப் படையினர் தங்கள் தேவைப் பொருட்களைப் பறிமுதல் செய்யும் வழக்கம் நிறுத்தப் பட்டது. பஞ்சப் பகுதிகளில் நிலவரி வஜா செய்யப் பட்டது. எத்தனையோ சமயங்களில், சாதிசமய பேதமின்றி ஏராளமான பணமும் பண்டங்களும் மக்களுக்கு விநியோகிக்கப்பட்டன. அவரது உருவம் எவரையும் கவரத் தக்கதாக இல்லையாயினும், ஒரு வேந்தருக்குரிய காம்பீரியமும் மிடுக்கும் அவரிடம் காணப்பட்டன. "அவரது (ரண்ஜீத் சிங்கின்) முகத்தில் பொலிந்த தேஜஸ் காரணமாக அவருடைய இரு விழிகளுள் எது குருட்டு விழி என்று கூர்ந்து பார்க்கும் துணிவு எனக்கு ஏற்பட்டதேயில்லை," என்று ஓர் ஆங்கிலேயரிடம் பக்கிரி அஸிஸுதீன் கூறியது வீண் புகழுரையல்ல.

அவரை நேரில் சந்திக்கும் வாய்ப்பைப் பெற்ற அயல் நாட்டினர் பலரும் வழங்கிய எண்ணிலாத பாராட்டுரைகளில், மாதிரிக்கு இரண்டைக் காணலாம். முதலாவது பாராட்டுரை லெப்டினென்ட் ஃபேன் வழங்கியது. (அவருடைய கருத்துக்கள் இந்நூலின் பல பகுதிகளில் ஏற்கெனவே எடுத்துக் காட்டப் பெற்றுள்ளன.)

" ரண்ஜீத் சிங்கை அன்பும் கருணையும் நிறைந்த தலைவர்

என்றும் இந்தியாவில் ஆண்ட மிகச் சிறந்த மன்னர்களுள் ஒருவர் என்றும் அவருடைய குடிமக்கள் கருதினர். அவர் உண்மையாகவே நல்லவர்; பழகுவதற்கு இனியவர்; இதற்கு இரு சான்றுகள்; அவருக்குக் குழந்தைகளிடத்தில் இருந்த அன்பு (தர்பாரில் இரண்டு மூன்று குழந்தைகளை அவர் தம் முதுகில் சவாரி செய்ய வைத்தார்); இரண்டாவதாக, அவர் ராஜ்யத்தை வென்ற நாள் முதல் மிகக் கொடிய குற்றங்கள் புரிந்ததற்காகக் கூட எந்த ஒரு மனிதனுக்கும் மரண தண்டனை விதித்ததில்லை.''

ரண்ஜீத் சிங்கைப் பிரோஸ்பூர், அமிர்தசரஸ், லாகூர் ஆகிய இடங்களில் தம்முடைய சகோதரர் ஆக்லண்டு பிரபுவுடன் சந்தித்த குமாரி எமிலி ஈடனின் கருத்தை இரண்டாவதாகக் குறிப்பிடலாம்.

> ''அவர் சுயமுயற்சியால் ஒரு பெரிய வேந்தரானவர்; சக்தி வாய்ந்த எதிரிகள் பலரையும் முறியடித்தவர் அவர்; அவர் மிகமிக நியாயமாக ஆட்சி நடத்துகிறார்; பெரும் படையொன்றைக் கட்டுப்பாடுடையதாக்கியவர்; அவர் ஒரு உயிரையும் பறித்ததில்லை — ஒரு சர்வாதிகாரியிடம் காண இயலாத அபூர்வ விஷயம் இது; அவர் தம்முடைய மக்களால் அபரிமிதமாக நேசிக்கப்படுகிறார்.''

ரண்ஜீத் சிங்கிடம் இருந்த சில குறைகள் எல்லோருக்கும் தெரியும். ஆனால் அவற்றுள் ஒரு சிலவற்றை அவரது உயர் குணங்களின் உப குணங்களாகக் கருதலாம். உதாரணமாக, அவருக்கு மண்ணாசை மிகுந்திருந்தது. ஆனால் இந்த ஆசையின் தூண்டுதல் இல்லாவிடில் எப்போதோ சீக்கிய 'மிஸல்கள்' மராத்தியர்களிடமும், பின்னர் ஆங்கிலேயரிடமும் சரணடைய நேர்ந்திருக்கும். ரண்ஜீத் சிங் அவற்றை இணைத்து ஒரே ராஜ்யமாக்கியதால், அரை நூற்றாண்டிற்கு ஆங்கிலேயர்

பஞ்சாபிற்குள் வர வழியில்லாமல் செய்ததோடு, தேசிய உணர்வுக்கும் அஸ்திவார மிடப்பட்டது. அவருடைய கொள்கைகளும் செயல் முறைகளும் அப்பட்டமான சமயச் சார்பில்லாத அரசுக்கு முன்னோடிகளாகும். அவர் ஒரு பகுதியை வென்றபொழுது, அப்பகுதியிலிருந்து திறை யும் வசூலித்தார். இது பண ஆசை அல்ல; படையெடுப் புக்களுக்குப் பணம் செலவாயிற்று, அதற்கு ஈடு கொடுக்க வேண்டியிருந்தது. அதோடு இக் கப்பங்கள் ரண்ஜீத் சிங்கின் மேலாதிக்கத்துக்கு அடையாளச் சின்னமாகும்.

தம்முடைய சொந்த வாழ்க்கையில் மகாராஜா மது விலும் மாதுகளிடத்திலும் அதிகமான மோகம் கொண் டிருந்தார்; இரண்டையும் சேர்த்து அனுபவித்தார். ஆனால் இது மற்றப் பெரும் படைத் தலைவர்களுக்குப் பொதுவாக இருந்த இயல்புதான். அவசியம் நேரும்போது இப்பழக்கங்களை அவரால் கட்டுப்படுத்திக் கொள்ள முடிந்தது என்பது ஒரு நல்ல அம்சம். அவர் செவிகளில் கடமையின் ஒலி கேட்கும்போது, மதுவோ மாதோ அவரைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. போரின் மத்தி யிலோ, அரசாங்கக் காரியங்களைக் கவனித்துக் கொண்டி ருக்கும் போதோ அவர் ஓய்வை நாடியதில்லை. ஒரு பிரச்சினையைப் பற்றி இரவெல்லாம் யோசித்து இவர் மனதில் ஒரு முடிவு செய்துவிட்டால், பொழுது விடிந்த வுடன் பக்கிரி அஸிஸுத்தீனிடம் மேல் நடவடிக்கை பற்றி விளக்கமாகக் கூறத் தயாராக இருப்பார்.

ரண்ஜீத் சிங் தாம் நினைத்ததைச் சாதித்துக் கொள்ள ஹிம்சையையும் மோசடியையும் கையாண்டதாகக் குற்றஞ்சாட்டுகின்றனர். இவையெல்லாம் ராஜ தந்திரங் களாகக் கருதப்பட்டு வந்த அக்காலத்தையும் சூழ்நிலை யையும் நோக்கினால், ரண்ஜீத் சிங்கும் அத்தந்திரங்களைக் கையாளாமல் இருந்திருந்தால் ஏமாளியாயிருப்பார். அவர் சூதைச் சூதால்தான் வெல்ல வேண்டியிருந்தது:

மற்ற உபாயங்களெல்லாம் தோற்றபின் தண்ட முறையைத்தான் கையாள வேண்டியிருந்தது. அவருடைய எதிரிகளோ, போட்டியாளர்களோ அவரை எதிர்த்த போது 'அமைதி' வழியைக் கையாள்வது என்ற பிரச்சினைக்கே இடமில்லை. தம் காலத்திய வளமுறைகளுக்கும் வழிமுறைகளுக்கும் அப்பாற்பட்டவராக ரண்ஜீத் சிங் இருந்திருக்க வேண்டுமென்று நாம் எதிர்பார்ப்பது நியாயமல்ல. எனினும், அவருடைய சமகாலத்தவரை விட அவர் எவ்வளவோ உயர்ந்தவர்; ஏனெனில் அவர் கருணையுடன் கலந்து தண்டனை வழங்கினுர்: தாம் முறியடித்த எதிரியையும் நண்பராக்கிக் கொள்ள முற்பட்டார்.

ரண்ஜீத் சிங் தமது 40 ஆண்டு ஆட்சிக் காலத்தில் கட்டி நிறுத்திய பெரு மாளிகை அவர் இறந்து சில வருடங்களுக்குள்ளாக அடியோடு சரிந்து பாழானது அவர் ஆட்சியில் உள்ளடங்கியிருந்த பலவீனங்களை எடுத்துக் காட்டுகிறது. இவ்வீழ்ச்சிக்கான முக்கிய காரணங்களுள் ஒன்று சகல விதமான அதிகாரத்தையும் அவர் தம் கையிலேயே குவித்து வைத்துக்கொண்டிருந்ததாகும். "மகாராஜாவின் மறைவால் ஒரு பதவி மாத்திரம் காலியாக வில்லை; சூனியமே ஏற்பட்டுவிட்டது; அதற்குள் அரசாங்கக் கட்டுக் கோப்பு முழுவதும் அமிழ்ந்து போயிற்று;" என்று என். கே. சின்ஹா கூறுகிருர். சர்தார்களும், மற்ற ஜாகிர்தார்களும் பலவீனமாக இருக்க, ரண்ஜீத் சிங்கின் வாரிசுகளால் சமாளிக்க முடியாத அளவு கால்சாப் படை வலிமை மிக்கதாக இருந்தது. மகாராஜாவின் நம்பிக்கைக்கு உரியவர்களாக விளங்கிய தளபதிகள் அவருக்கு முன்பே இறந்துவிட்டது மற்ரெரு துர்பாக்கியமாகும். சந்தர்ப்ப வசத்தால் அதிகாரத்திற்கு வந்தவர்கள் பலவீனர்களாகவோ அல்லது சுயநலமும் துரோகச் சிந்தையும் கொண்டவர்களாகவோ இருந்தனர்; சைனியம் அவர்களை நொடிப் பொழுதில் அழித்துவிட்டது. வாரிசுரிமைத் தகராறுகளால் மூண்ட

சதிகளில் வலிமை வாய்ந்தவர்கள் ஒவ்வொருவராகச் சரிந்தனர். இதுவரை ஒதுங்கியிருந்த ஆங்கிலேயருக்கு இது பொன்னான சந்தர்ப்பமாயிற்று. ஏற்கெனவே அவர்கள் ரண்ஜீத் சிங் கிழக்கிலும் தெற்கிலும் தமது ஆதிக்கத்தை விஸ்தரிக்க இயலாதவாறு எல்லை வகுத்து வைத்திருந்தனர். அவர் மரணமடைந்து சண்டைகள் பெருத்ததைக் கண்ட டல்ஹௌசி பிரபு பஞ்சாபைச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்ற தம் திட்டத்தை இனியும் தாமதப்படுத்த விரும்பவில்லை. சீக்கியத் தலைவர்களும் சீக்கியப் படையும் தங்கள் தடித்தனமான முயற்சிகளால் விரைவிலேயே தங்கள் முடிவைத் தேடிக் கொண்டனர்; மகாராஜா மரணமடைந்து பத்தாண்டுகளுக்குள் பஞ்சாப் முழுவதும் ஆங்கிலேயரின் ஆதிக்கத்திற்குள் வந்தது. ஆங்கிலேயருடன் ரண்ஜீத் சிங் செய்துகொண்ட உடன்பாட்டிலேயே இந்த முடிவின் வித்து இருந்திருக்கக் கூடும். ஆங்கிலேயருக்கு தாம் இணையாக முடியாதென்பதை அவர் அறிந்திருந்தார். ஆகவே அவரது ஆட்சி முடிந்து ஆங்கிலேயரின் வலிமையும் ராஜ தந்திரமும் புகுந்து விளையாடவே அவருடைய ராஜ்யம் மறைந்துவிட்டது. எனினும் அவர் ஆற்றிய பணியின் தடம் மறைந்துவிடவில்லை; ஆங்கிலேயரும் அவருடைய விவேகமான பல கொள்கைகளையும் கோட்பாடுகளையும் பின்பற்றியதன் மூலம் அவருடைய நினைவைப் போற்றினர்.

# தமிழில் வந்துள்ள மற்ற நூல்கள்

## வாழ்க்கை வரலாற்று வரிசை

1. தியாகராஜா
—பி. சாம்பமூர்த்தி ... ரூ. 1-75
2. ராமாநுஜர்
—ஆர். பார்த்தசாரதி ... ரூ. 2-00
3. குரு நானக்
—கோபால் சிங் ... ரூ. 2-25
4. முத்துசாமி தீக்ஷிதர்
—டி. எல். வெங்கடராம அய்யர்
... ரூ. 2-50

## இந்தியா - நாடும் மக்களும் வரிசை

1. வீட்டுப் பிராணிகள்
—ஹர்பன்ஸ் சிங் ... ரூ. 4-50
2. சாதாரண மரங்கள்
—எச். சிந்தாபோ ... ரூ. 4-75
3. மக்கட் தொகை
—எஸ். என். அகர்வாலா ... ரூ. 3-75
4. இந்தியப் பாம்புகள்
—பி. ஜே. தியோரஸ் ... ரூ. 6-50
5. தோட்ட மலர்கள்
—விஷ்ணு ஸ்வரூப் ... ரூ. 6-00
6. பூ மரங்கள்
—எம். எஸ். ரந்தாவா ... ரூ. 6-50
7. நிலமும் மண்வளமும்
—எஸ். பி. ராய் சௌதுரி ... ரூ. 5-25

## அனைத்திந்திய நூல் வரிசை

1. அக்னி நதி
—குர் அதுல்ஐன் ஹைதர் ... ரூ. 8-25

## பல்வகை நூல்கள்

1. காந்தியின் இந்தியா—
வேற்றுமையுள் ஒற்றுமை ... ரூ. 2-25
2. அக்பர்
—லாரென்ஸ் பின்யன் ... ரூ. 2-25
3. அறிவு வளர்க்கும் அறிவியல்
—ரிட்சி கால்டர் ... ரூ. 4-25
4. அசோக சாசனங்கள்
—என். ஏ. நிகம்,
ரிச்சர்டு மக்கியோன் ... ரூ. 3-00
5. கோதம புத்தர்
—ஆனந்த கே. குமாரசுவாமி
ஐ. பி. ஹார்னர் ... ரூ. 6-00
6. மார்கோ போலோ
—மௌரிஸ் காலிஸ் ... ரூ. 5-75
7. குடதிசை குணதிசை
ஞானப் பெண்மணிகள்
—ஸ்வாமி கானநந்தா ... ரூ. 6-00
8. இன்பத்தின் வெற்றி
—பெட்ராண்ட் ரஸ்ஸல் ... ரூ. 3-50
9. பாமர மக்களின்
பரம்பரைப் பாடல்கள்
—அழ. வள்ளியப்பா ... ரூ. 1-25
10. விழாவும் பூசையும்
—எஸ். ஜி. கணபதி அய்யர் ரூ. 1-25